திரு. நெ. து. சுந்தரவடிவேலு
துணைவேந்தர், சென்னைப் பல்கலைக்கழகம்

# அணிந்துரை

தமிழ்நாட்டில் அறிவுப் பஞ்சம் என்றும் இருந்ததில்லை. தமிழர்கள் இயற்கை அறிவில் பிறருக்குப் பின்னடைந்தவர்கள் அல்லர். ஆயினும், கல்வியை அலட்சியப்படுத்தி, இயற்கை அறிவை வளரவொட்டாமல் பாழாகிப் போனதில், நமக்கே முதலிடம். வாழையடி வாழையாகத் தொடரும் இத் தொத்துநோய்க்கிடையே, சிலர், ஒவ்வோர் தலைமுறையிலும், கேடில் விழுச்செல்வமாம் கல்வியைத் தேடிப் பெற்றுள்ளனர். கல்வியறிவு பெற்ற அத் தமிழர்கள் பெரும்பாலும், ''டேப் ரிக்கார்டர்''களாக வாழ்ந்து வந்திருக்கிறார்கள். எவனோ எப்போதோ சொல்லிவிட்டுப் போனதை, யாரோ எங்கேயோ என்ன பொருளிலோ திரித்துச் சொன்னாலும், அடக்கமாக ஏற்றுக்கொள்ளவே, பழக்கப்பட்டு வந்துள்ளார்கள். தங்கள் அறிவினைக்கொண்டு சிந்தித்து, சிந்தனையில் பெற்ற தெளிந்த கருத்துகளைத் துணிந்து கூறும் மெய் மனிதர்கள், அருகி அருகி வந்தனர். இந் நிலையில், பாமரர்களின் வெகுளிக்கும், அவர்களின் எதிர்ப்புக்கும் ஏளனத்திற்கும், தொல்லைக்கும் கொடுமைக்கும் ஆளாகத் துணியாது, புதுமைச் சிந்தனையாளர்களும் பதுங்கி ஒதுங்கிக் காலத்தைக்கழித்து விட்டு, மறைந்தார்கள்.

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு ஒரு முறை தோன்றும் புத்தர் போன்ற சிந்தனைப் புரட்சியாளர்கள், தமிழ்நாட்டில் தோன்றினாலும், 'கொள்வார் இல்லாத காரணத்தால் கடையைக் கட்டிக்கொள்ளும்' நிலையே நீடித்தது.

எதற்கும் ஒரு விடிவு காலம் உண்டு. இது இயற்கையின் விதி. இதன் உந்துதலால், முன்னர் கண்டறியாதன கண்டோம். பழமைச் சூழலில் பிறந்த ஒருவர், புதியதோர் காட்சியினைக் கண்டார். அக் காட்சி நற்காட்சி. மனிதர்களை மனிதர்களாகவே காணும் காட்சி. மனிதர்களை உயர் சாதியென்றும் கீழ் சாதியென்றும் வேறுபடுத்தாத ஒருமைக் காட்சி. தன் அகக்

கண்ணால் கண்ட அக் காட்சியினை, புறஉலகின் நடைமுறையாக்க உறுதி கொண்டார், அச் சீரிய சிந்தனையாளர். அதற்கு தன்னையே, தன் நீண்ட வாழ்நாளையே காணிக்கையாக்கினார்.

மனிதச் சமத்துவத்திற்குக் குறுக்கே தள்ளப்பட்ட, மரபு, நெடுங்காலப் பழக்க வழக்கங்கள், மூடநம்பிக்கைகள், காட்டுக்கால இலக்கியங்கள், சமயப்பற்று, கடவுள் நம்பிக்கை ஆகிய எண்ணற்ற காலக்குண்டுகளைப் பொருட்படுத்தாது, போராடினார்; சிந்தனைப் பெருஞ்சுனையார்.

கட்டியங் கூறப் பகட்டான பக்தர்கள்; கொலுவீற்றிருக்க ஒளி விடும் அரியணை, காவல் புரிய எண்ணற்ற ஏவலர்கள் சூழ, எங்கோ பாதுகாப்பான மாளிகையில் இருந்துகொண்டு, புரட்சிகரமான கருத்துக்களை, எல்லோரையும் அதிர்ச்சியடைய, குலை நடுங்க வைக்கும் பகுத்தறிவுக் கருத்துகளைச் சொல்லுவதற்கே, மலை போன்ற துணிச்சல் தேவை. நம் பகுத்தறிவுப் பகலவன், தன்மான இயக்கத்தின் தந்தை, சுயமரியாதைச் சூறாவளி பெரியார் ஈ.வெ. ராமசாமியோ, நாடு முழுவதும் பல முறை சுற்றிச்சுற்றி பிறநாடுகளுக்கும் சென்று நாள்தோறும் பல்லாயிரக்கணக்கான பொது மக்களுக்குப் பகுத்தறிவு ஊசி போட்டுவந்தார்.

இந்திய அரசியல் விடுதலைக்குப் பெருங்குரல் கொடுத்த நான்கு தமிழர்களில் ஒருவராக அரசியலில் ஈடுபட்ட பெரியார் தன்னலமற்ற, சொல்லும் செயலும் இணைந்த நற்றொண்டால் பிறர் பொறாமைப்படும் பெரும் புகழை சில ஆண்டுகளிலேயே தேடிக் கொண்டார். புகழின் சிகரத்தில் ஒளி விடும்போது, அரசியல் விடுதலை மட்டும் நம்மை மனிதர்களாக்கி விடாது அரசியல் அடிமைத்தனத்திற்கு முன்னரே வேரூன்றி விட்ட சாதிக் கொடுமைகளைக் களைந்தெறிந்து, பணக்குவியல்களை இடித்து நிரவினாலொழிய, நாம் முழுமனிதர்களாக ஒரு நிலை மனிதர்களாக வாழமுடியாது என்று உணர்ந்தார், பெரியார்.

அரசியல் விடுதலைக் குரல் கொடுத்தால் பாராட்டும், சாதி ஒழிப்புக்குக் குரல் கொடுத்தால், சொல்லடியும் கல்லடியும் கிடைக்கும் என்பது பெரியாருக்குத் தெரியாததல்ல. பொருளாதார மேடுகளை இடியென்று சொன்னால், பள்ளத்தில் வீழ்ந்

திருக்கும் ஏழைகளே, தன்னை எதிர்ப்பதில் முன்னே நிற்பார்கள் என்பதை அறிந்தவரே பெரியார். ஆபினும், 'வெந்தசோற்றை உண்டு வேளை வந்தால் போகும்' மனிதராக இருப்பதில்லை என்ற முடிவுக்கு வந்த பெரியார், 'பிறர்யாரும் எடுத்துக்கொள்ள முன் வராத காரணத்தால், சாதி ஒழிப்பு, மனிதச் சமத்துவம் ஆகிய பகுத்தறிவுப் பணியை தானே தூக்கிப் போட்டுக்கொண்டு, பிறர் யாரும் போராடாத அளவு நெடுங்காலம் போராடினார்.

மனித வாழ்க்கையின் எல்லாத் துறைபற்றிய சீரிய சிந்தனைகள் பெருக்கெடுத்து ஓடியதில் பெரியாருக்கு இணை பெரியாரே. பட்டி தொட்டியெல்லாம் தேடிச் சென்று, மீண்டும் மீண்டும் புரட்சிக் கருத்துகளை, பகுத்தறிவு வெள்ளத்தைப் பாய்ச்சிவிட்டு வந்ததில், நம் பெரியார், உலகப் பெரியார் ஆவார்.

தந்தை பெரியாரின் பேரியக்கத்தில் ஈடுபட்டு, தங்கள் மதி நுட்பத்தையும் சொல் எழுத்தாற்றல்களையும் உழைப்பையும் முழுக்க முழுக்கப் பயன்படுத்தி, மறைந்த தன்மானப் பிழம்புகள் பலராவர். இன்றும் அதே தொண்டில் மூழ்கி இருப்பவர்களும் பலராவர். மறைந்த சுயமரியாதைச் சுடர்களில் சிலரை நேரில் அறியும் நல்வாய்ப்பு எனக்கு உண்டு. குத்தூசி குருசாமி, அறிஞர் அண்ணா, அஞ்சாநெஞ்சன் அழகிரி, பூவாளூர் பொன்னம்பலனார், எஸ். வி. லிங்கம், சாமி சிதம்பரனார், கே. எம். பாலசுப்ரமணியம் ஆகிய ஆதி சுயமரியாதை இயக்கப் பொறிகளை அறிந்து ஆளான வாய்ப்புப் பெற்றிருந்தேன். இவர்களில் இரண்டொருவரைத் தவிர மற்றவர்கள் பகுத்தறிவுக் கொள்கைகளை ஏற்றுக்கொண்டது முதல், கடைசி வரை அதே கொள்கையில் நிலைத்து நின்றவர்கள் ஆவார்கள்.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பத்து நான்காம் ஆண்டு, காஞ்சி கல்யாணசுந்தரத்தால், அறிஞர் அண்ணாவிற்கு அறிமுக மானவன் நான். அந்த அறிமுகம் எங்களிடையே அன்பாக, ஒன்று பட்ட உணர்ச்சியால் ஆகிய நட்பாம் கிழமையாக, மெய்ப் பற்றாக, காலத்தில் கனியும் சிறப்பு எனக்கு வாய்த்தது.

தோழர் குருசாமியை ஆயிரத்துத் தொள்ளாயிரத்து இருபத்து ஒன்பதாம் ஆண்டு தோழர் எஸ். வி. லிங்கம் எனக்கு அறிமுகப்

படுத்தினார். அப்போது குத்தூசியாராக ஆகாத நிலை.

நல்ல சைவராக, நீறுபூத்த நெற்றியராக, கதர் அணியும் தேசிய இளைஞராக தம் கல்லூரி மாணவப் பருவத்தைத் தொடங்கிய குருசாமியார், கல்லூரியை விட்டு வெளியேறியபோது, சமுதாய, பொருளாதார அமைப்புகள்பற்றிய தீவிரப் புரட்சிக் கருத்துகளை உடையவராக மாறிவிட்டார். எனவே, பெரியாரின் தன்மான இயக்கத்திற்குத் தன்னை ஒப்படைப்பது இயற்கையாக இருந்தது.

இயற்கையில் கூரிய மதிநுட்பம் பெற்றிருந்த குருசாமி, தமிழிலும் ஆங்கிலத்திலும் நிறைபுலமை பெற்றவராகப் பெரியாரிடம் சேர்ந்தார். அவர் ஆற்றல், புலமையோடு நிற்கவில்லை. தமிழிலும் ஆங்கிலத்திலும் தன்னேரிலாத எழுத்தாளராகக் காட்சியளித்தார். அப்படிப்பட்ட இளம் ஞாயிறே எனக்கு அறிமுகப் படுத்தப்பட்டார்.

எங்களுடைய நட்பு வளர்ந்தது. பின்னர் அவருடைய மைத்துனியாகிய காந்தம்மாவை மணந்துகொண்டு என் சாதி யொழிப்பு உணர்வை மெய்ப்பிக்கும் நிலை உருவாயிற்று. அவரும் அவருடைய குடும்பமும், நானும் என் குடும்பமும் தனித்தனியாக வாழவில்லை.

எங்கள் மாமனாராகிய, ஆதிகால சுயமரியாதை இயக்கத் தூண்களெல்லாம், பரிவோடும் பாசத்தோடும் 'நைனா' என்று அழைத்த திருவாரூர் சுப்ரமணியம் அவர்கள் குடும்பத்தோடு சேர்ந்து வாழ்ந்தோம். மூன்று குடும்பங்களும் இணைந்தே இருந்தோம். மாமியார் தங்கம்மாள், தந்தை பெரியாருக்கு மட்டுமல்லாது, பல சுயமரியாதைத் தொண்டர்களுக்கு நல்லுணவு கொடுத்து உதவியவர் ஆவார். இன்பத்திலும் துன்பத்திலும் இணைந்து இருந்தோம். அதுமட்டுமா? பொது உடைமைக்கட்சியினருக்குச் செய்த கொடுமைகளை எதிர்த்துச் சீறியபோதும், ஆச்சாரியாரின் குலக் கல்வியைச் சாடிச் சாடி நாள்தோறும் எழுதியபோதும், இந்தி எதிர்ப்புப் போராட்டங்களில் குத்தூசியார் ஈடுபட்டிருந்தபோதும், ஒரே குடும்பமாக வாழ்ந்து வந்தோம். எனவே,அண்ணன் குருசாமியாரை நெருக்கமாக அறியும் வாய்ப்புப் பெற்றவர்களில் யானும் ஒருவன்.

147/3-75

தனிமனிதர் என்று பார்த்தால், பொடி, குடி, பிற தீய பழக்கங்கள் எதுவும் பெறாதவர் குருசாமி. ஒழுங்கும் கட்டுப்பாடும்பேசத் நிறைந்தவர் குருசாமி உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று தெரியாதவர், குருசாமி. இயற்கையான பாசத்தோடும் நேசத்தோடும் பிறரிடம் பழகியவர், குருசாமி. கலகலவென்று கிண்டலும் நகைச்சுவையும் சொரிந்து உரையாடுவதில் வல்லவர்; நட்புக்குச் சிறந்தவர்; தாட்சணியத்திற்குக் கட்டுப்படாதவர். எவ்வளவு வேண்டியவர்களாக இருந்தாலும் அதற்காக, கொள்கையை உறைக்குள் அடைக்காதவர். வாழ்நாள் முழுவதும், கண்டிக்க வேண்டிய கருத்துகளை, பேச்சுகளை, திட்டங்களைச் சாடுவதில் சளைக்காதவர். எவ்வளவு பெரியவர்கள் சம்பந்தப்பட்டிருந்தாலும் தனக்கே உரிய 'குத்தூசி'பாணியில் படிப்போர் உள்ளத்தைக் கிளறும்வண்ணம் கிண்டல் செய்வதில் கண்டிப்பதில் கைதேர்ந்தவர்; அதற்கு ஆளானவன் நானும்.

நான் சென்னை மாநகராட்சியின் கல்வி அதிகாரியாக இருந்த போது, நகராட்சி தொடக்கப்பள்ளிகள் சிலவற்றை ஆதாரப் பள்ளிகளாக மாற்ற முடிவுசெய்யப்பட்டது. எனவே, அவற்றிற்கு தக்ளி, இராட்டினங்களை வாங்கிக் கொடுத்து மாணவர்களை நூற்கச் செய்யும் பொறுப்பு எனக்கு வந்தது. இச் செய்தியைக் கண்ட அன்று மாலையே, 'விடுதலை'யில் குத்தூசியார் இதைக் கிண்டல் செய்து எழுதினார்.

"தக்ளியில் நூற்கக் கற்றுக் கொடுப்பதற்குப் பதில், க்ஷவரஞ் செய்யக் கற்றுக்கொடுத்தால் அது ஒவ்வொருவருக்கும் பிற்காலத்தில் பயன்படும். இதைச் செய்யத் தீவிரமாக யோசிக்கவேண்டு" மென்று ஆலோசனை கூறியிருந்தார்.

நான் அன்று மாலை, வீட்டுக்குத் திரும்பியதும், எல்லோரும் இதைக் காட்டிப் புன்னகை செய்தார்கள். ஏன்?

சுத்தமாக க்ஷவரஞ்செய்துகொள்ள எனக்குத் தெரியாது என்பது வீட்டில் எல்லோருக்கும் தெரியும். இக் குத்தலை நான் பொருட்படுத்தவில்லை. அவருடைய அரசியலில் நான் தலையிட்டதில்லை. என்னுடைய அலுவலில் அவர் தலையிட்டதில்லை. அரசியல் இரகசியங்கள் அவரோடே, அலுவல் இரகசியங்கள்

என்னோடே! எப்போதாவது சிலமுறை, தந்தை பெரியாரே பரிந்துரைத்து, என் கவனத்திற்குக் கொண்டுவரச் சொல்லியிருந்த போது மட்டும், அக்கடிதங்களை என்னிடம் காட்டிவிட்டு, திரும்பப் பெற்றுக் கொள்ளுவார்.

தோழர் குருசாமியின் மனைவி திருமதி குஞ்சிதம், மாநகராட்சி கல்வி அதிகாரியாக இருந்த காலம். திருமதி லூர்தம்மாள் சைமன் உள்ளாட்சித் துறை அமைச்சராக இருந்தார். அப்போது மாநகராட்சியில் எல்லாத்துறைத் தலைவர்களுக்கும் ஒரு சம்பள விகிதம்; கல்வித்துறைத் தலைவராகிய கல்வி அதிகாரிக்குமட்டும் குறைந்த சம்பள விகிதம். இதைக் கேள்விப்பட்ட அமைச்சர் அம்மாள்—முன்னாள் ஆசிரியை—எல்லாருக்கும் கொடுக்கும் சம்பள விகிதமே கல்வியதிகாரிக்கும் கொடுக்கச் சொன்னார். இதை ஏற்றுக் கொண்டு மாநகராட்சி முடிவு செய்தது. அது அரசின் ஒப்புதலுக்குச் சென்றது. பொதுக்கல்வி இயக்குனராக இருந்த என் கருத்தைத் தெரிவிக்கும்படி அது எனக்கு அனுப்பப்பட்டது.

நான் ஆய்ந்தேன். மாநகராட்சியின் பிற துறைத் தலைவர்கள் யாரும் அரசின் பிற அதிகாரிகளிடமிருந்து ஆணை பெறத் தேவையில்லை. மாநகராட்சிக் கல்வித்துறைத் தலைவரோ, மாவட்டக் கல்வி அதிகாரியின் ஆலோசனையைக் கேட்டு நடக்கவேண்டியவர். ஆலோசனை பெற வேண்டியவருக்கு அதிகச் சம்பளமும் ஆலோசனை சொல்லும் அதிகாரிக்குக் குறைந்த சம்பளமும் இருப்பது, கட்டுப்பாடின்மையைத் தூண்டிவிடும். ஆகவே, மாநகராட்சியின் முடிவை ஏற்றுக்கொள்ளக்கூடாதென்று நான் எழுதிவிட்டேன். அதைக்கண்ட அமைச்சர் அம்மையார் என்னிடம் நேரில் பேசினார்கள். என் கருத்தை மாற்ற முயன்றார்கள். நான் ஒப்பவில்லை. இதனால் நட்டமடைந்த திருமதி குஞ்சிதமோ, தோழர் குருசாமியோ என்னிடம் சிறிதும் கசப்புக் கொள்ளவில்லை.

அதேபோல், குருசாமியின் மகன் கவுதமன் பள்ளியிறுதித் தேர்வு எழுதியபோது தேர்வு முடிவை நான் முன்கூட்டித் தெரிவிக்கவில்லை. அவரும் தெரிந்துகொள்ள முயலவில்லை. எல்லாப் பத்திரிகைகளுக்கும் கொடுக்கும் தேர்வுப் பட்டியல் 'விடுதலை'க்குச் சென்றபோதே அவர் தெரிந்துகொண்டார்.

தமது பொதுத் தொண்டையோ, செல்வாக்கையோ உறவையோ தனக்கோ தன் குடும்பத்திற்கோ முதலாக்கிக் கொள்ளாத, 'அப்பாவி' மனிதர், என் அண்ணன், கொள்கைவேள் குத்தூசி குருசாமி என்பதிலே பெருமை கொள்கிறேன். அவரோடு பல்லாண்டு ஒரே குடும்பமாக வாழக் கிடைத்த வாய்ப்பினைப் பெறற்கரிய வாய்ப்பாகக் கருதுகிறேன்.

குத்தூசியார் அற்புதமான மனிதர். அற்புதமான சிந்தனை யாளர். அற்புதமான எழுத்தாளர். அற்புதமான நகைச்சுவை யாளர். தனிப்பகையில்லாத மனிதர். கொள்கைக்காக யாரோடும் போராடத் துணிந்தவர். கடைசிவரை சொல்லும் செயலும் ஒத்து வாழ்ந்தவர்.

அத்தகைய சுயமரியாதைச் சுடர் தோழர் குருசாமியின் வாழ்க்கை வரலாற்றை எழுதியதால் மறைந்துவிட்ட அவருக்கு எவ்வித நன்மையும் இல்லை. இதைக் காட்டிப் பிழைக்கும் நிலையில், யாரும் இல்லை. பின், ஏன் இதை எழுதி வெளியிட வேண்டும்?

'தமிழா! உன் இனத்திலும் அறிஞர்கள் பிறந்தார்கள். இருந்த காலமெல்லாம் தொண்டாற்றினார்கள். எளிதாகப் புகழும் பொருளும் உயர்ந்தோர் சுற்றமும் நட்பும் பெறும் வாய்ப்புகளை உதறிவிட்டு, வேண்டுமென்றே, அடித்தளத்தில் உள்ளவர்களோடு சேர்ந்து உழைத்து, அவர்களை உயர்த்துவதையே மூச்சாகக் கொண்டு வாழ்ந்தார்கள். அதை அறிந்து கொள். அறிந்த பிறகு தெளிவு கொள். துணிவு கொள். வாழு; மண்டி இடாத மனிதனாக வாழு. மூட நம்பிக்கையில்லாத மனிதனாக வாழு. யாதும் ஊரே, யாவரும் கேளிர் என்று சொல்வதோடு நில்லாமல், பிறரோடு ஓர்குலமாக வாழு; சுரண்டாமல் வாழு' என்று நினைவு படுத்தவே, இவ் வரலாறு வெளிவருகிறது.

எத்தனையோ நண்பர்கள், இதை எழுத உரிமை பெற்ற வர்கள். ஆயினும் குருவிக்கரம்பைத் தோழர் வேலு ஒருவரே துணிந்து முன்வந்து பாடுபட்டுத் தகவலைச் சேகரித்து நல்ல நடை யில் உருவாக்கியுள்ளார். இது, அவர் குத்தூசியாருக்குச் செலுத்

தும் நன்றிக்கடன் என்பதைவிட, குத்தூசியாரைப் போலவே, 'தமிழர்களைத் திருத்திவாழ வைக்க முடியும்' என்று தோழர் வேலு கொண்டுள்ள பெரும் நம்பிக்கைக்குச் சான்று என்பதே பொருத்தம்.

தோழர் வேலுவிற்கு நம் பாராட்டு.

இந் நூல், தமிழ்ச் சமுதாயத்தின் அரை நூற்றாண்டுக் கால சிந்தனையின் சீவலாகும்; விழிப்பும் உணர்ச்சியும் ஊட்டும் நூலாகும். இளைஞர்கள் தவறாது படிக்கவேண்டிய நன்னூ லாகும்.

நெ. து. சுந்தரவடிவேலு

திரு. மயிலை. சீனி-வேங்கடசாமி

# சிறப்புரை

தமிழகத்துக்கு மிகவும் தேவையாக இருந்த காலத்திலே நீதிக் கட்சி என்றும் சுயமரியாதை (பகுத்தறிவு) இயக்கம் என்றும் இரண்டு இயக்கங்கள் தோன்றி, தமிழ்நாட்டு அரசியலிலும் தமிழ்ச் சமுதாயத்திலும் பெரிய புரட்சிகளைச் செய்து வெற்றியடைந்தன. ஜஸ்டிஸ் பார்ட்டி (நீதிக்கட்சி)யை 1916-ஆம் ஆண்டு சர் பி. தியாகராச செட்டியார் தோற்றுவித்துத் திராவிட மக்களை (பார்ப்பனரல்லாதாரை) உறக்கத்திலிருந்து விழிக்கச் செய்தார். 1928-ஆம் ஆண்டில் ஈ.வெ.ரா. பெரியார் சுயமரியாதை (பகுத்தறிவு) இயக்கத்தை உண்டாக்கிப் பார்ப்பனரல்லாத திராவிட மக்களை இழிவிலிருந்து உயரச் செய்தார்.

இரண்டு இயக்கங்களும், காங்கிரசு கட்சியைத் தங்களுக்கு ஆதரவாகப் பயன்படுத்திக்கொண்டு பார்ப்பன இனம் பார்ப்பனரல்லாதவரைச் கட்டுப்பாடாக அரசியலிலும் சமுதாயத்திலும் உயராமல் அடக்கி அழுத்தி வைத்துக்கொண்டிருந்த காரணத்தினால் தோன்றியவை. நீதிக்கட்சி, அரசியலில் பார்ப்பனரல்லாதாரை உயர்த்துவதை நோக்கமாகக் கொண்டிருந்தது. அரசியலிலும் ஆட்சியிலும் திராவிட மக்கள் பங்கு பெற உழைத்த நீதிக்கட்சி "அரசியல் பார்ப்பனர்களை நம்பாதே" என்று குரல் கொடுத்து மக்களை எழுப்பிற்று. பார்ப்பனரல்லாத திராவிட மக்களைச் சமூகத் தாழ்விலிருந்து உயர்த்துவதை நோக்கமாகக்கொண்ட சுயமரியாதை இயக்கம், திராவிட மக்களை மூடப் பழக்கவழக்கங்களில் அழுத்தி, அவர்களை முன்னேற விடாமல் தடைசெய்து கொண்டிருப்பவர் வைதிகப் பார்ப்பனர் என்று கண்டு "வைதிகப் பார்ப்பனனை நம்பாதே" என்று குரல் எழுப்பிற்று. மதம், சாமி, கோயில், குளம், வேதம், புராணம் இவைகளைக் காட்டி,தமிழரை முன்னேறவிடாமல் வைதிகப் பார்ப்பனர் அமிழ்த்திக் கொண்டிருந்ததைச் சுயமரியாதை இயக்கம் விளக்கிப் பாமர மக்களுக்குச் சுயமரியாதை உணர்வை ஊட்டியது.

இந்த இரண்டு இயக்கங்களும் நாட்டில் செல்வாக்கடைந்து தாங்கள் கண்ட கொள்கைகளில் வெற்றிபெற்றன. பிற்காலத்தில் ஜஸ்டிஸ் கட்சியைப் பெரியார் ஈ.வெ.ரா. ஏற்றுக்கொண்டு திராவிடர் கழகம் என்னும் பெயரிஞல் நடத்திஞர். அதாவது அரசியல் கட்சியையும் சமுதாய முன்னேற்ற இயக்கத்தையும் ஒன்ருக இணைத்து நடத்திஞர். ஜஸ்டிஸ் கட்சி என்னும் நீதிக் கட்சியை வளர்த்தவர்கள் பலர். அவர்கள் எல்லோரும் ஆங்கிலத்தில் பேசியே கட்சியை வளர்த்தார்கள். ஜே. எஸ். கண்ணப்பர் (ஜனக சங்கர கண்ணப்பர்), ஜே. என். இராமநாதன், டி. வி. சுப்பிரமணியம் ஆகிய மூவர் மட்டும் அக்காலத்தில் நீதிக்கட்சியின் பிரசாரகர்களாக இருந்து தமிழில் பேசி நீதிக்கட்சியை வளர்த்தார்கள். ஜஸ்டிஸ் கட்சியின் சார்பாக 'ஜஸ்டிஸ்' என்றும் ஆங்கில தினசரிப் பத்திரிகையும் 'திராவிடன்' என்னும் தமிழ் தினசரிப் பத்திரிகையும், ஒரு தெலுங்கு தினசரிப் பத்திரிகையும் வெளியிடப்பட்டன. பார்ப்பனர் ஆண் பெண்களும் குஞ்சுகுட்டிகளும்கூட தமிழரைச் சூத்திரர் என்று கூறுவது சர்வ சாதாரணமான தினசரிப் பேச்சாக இருந்தது. அப்போது 'சூத்திரன் என்ருல், ஆத்திரங் கொண்டடி என்று நாட்டில் சுலோகங்கள் எழும்பின.

ஈ.வெ.ரா. பெரியார் அமைத்த சுயமரியாதை இயக்கம் நாட்டின் தாய்மொழியாகிய தமிழில் பேசிப் பிரசாரம் செய்தது. குடி அரசு என்னும் வாரப்பத்திரிகையும் பகுத்தறிவு ரிவோல்ட், என்னும் பத்திரிகைகளும் வெளியிடப்பட்டன. வைதிகப் பார்ப்பனர், சாமியின் பேரால், மதத்தின் பேரால், புராண இதிகாசங்களின் பேரால் 'உயர்ந்த' சாதி 'தாழ்ந்த' சாதிகளை உண்டாக்கித் திராவிட மக்களை இழிவான தாழ்ந்த நிலையில் வைத்திருப்பதையும் 'உயர்ந்த சாதி' என்று தங்களைக் கூறிக்கொண்டு பார்ப்பனருக்கு ஆதரவு காட்டிக்கொண்டிருக்கும் 'சாதி இந்துக்களின் அறியாமையையும் எடுத்துக்காட்டி சுயமரியாதை இயக்கம் பிரசாரஞ் செய்தது. இந்த இயக்கத்துக்கு நாட்டில் பேராதரவு இருந்தது. அதே சமயத்தில் வைதிகர்களின் எதிர்ப்பும் 'உயர் சாதி'யாரின் எதிர்ப்பும் சுயமரியாதை இயக்கத்துக்கு உண்டாயின. சுயமரியாதை இயக்கத் தலைவரைப் பற்றி இழிவாகப் பேசி வைததல்லாமல்

வைதிகரும் அவரைச் சார்ந்தவர்களும் காலிகளையும் குண்டர்களையும் ஏவிவிட்டு, சுயமரியாதைக் கூட்டங்களில் சாணி உருண்டை எறிவதும் கல்வீசுவதும் குழப்பம் செய்வதுமாக இருந்தார்கள்.

பெரியார் அவர்களின் சுயமரியாதை இயக்கத்தை அவருடன் சேர்ந்து வளர்த்தவர் பலர். அவர்களில் தோழர் குருசாமியும் ஒருவர். கல்லூரிப் படிப்பை முடித்துக் கொண்ட தோழர் குருசாமி, குடியரசு பத்திரிகையைத் தொடர்ந்து படித்து வந்த காரணத்தினால், சுயமரியாதைக் கட்சியில் ஈடுபட்டு, பெரியாரிடம் வந்து சேர்ந்தார். இயக்கப் பிரசாரகர் ஆனார். சொற்பொழிவுகள் செய்வதும் கட்டுரைகள் எழுதுவதும் அவருக்கு தினசரி வேலையாக இருந்தன. தோழர் குருசாமி அவர்கள் உயர்ந்த தமிழ்நடையில் எழுதவும் பேசவும் வல்லவர். ஆனால் எல்லோருக்கும் புரிவதற்காக அவர் சாதாரண எளிய நடையை மேற்கொண்டார். குருசாமி அவர்கள் தீவிர பகுத்தறிவுவாதி, சீர்திருத்தக்காரர், மூடப்பழக்க வழக்கங்களை ஒழித்தவர். பேச்சிலும் எழுத்திலும் மட்டுமல்ல, செயலிலும் செய்து காட்டியவர். தொண்டைமண்டல முதலியார் என்னும் 'உயர்ந்த' குலத்தவர் என்று கருதப்பட்ட குலத்தில் பிறந்த இவர், தாழ்ந்த குலம் என்று கருதப்பட்ட இசைவேளாளர் இனத்தில் பிறந்த குஞ்சிதம் அம்மாளைத் தம்முடைய குலத்தவரின் எதிர்ப்புகளுக்கு அஞ்சாமல் திருமணம் செய்து கொண்டார். இவர் செய்தது கலப்பு மணம் மட்டும் அன்று; வைதீகச் சடங்கு இல்லாத சீர்திருத்தத் திருமணம் ஆகும். குஞ்சிதம் அம்மையார் குருசாமியைப் போலவே பி.ஏ. பட்டம் பெற்றவர்.

குஞ்சித அம்மாளின் தங்கையும் குருசாமியின் மைத்துனியும் ஆகிய திருமதி காந்தம் அம்மாளும் கல்லூரியில் உயர்தரப் படிப்புப் படித்துப் பட்டம் பெற்றவர். காந்தம் அம்மாளைத் திருமணம் செய்துகொண்டவர் தோழர் சுந்தரவடிவேலு அவர்கள். (இப்போது 'பத்மஸ்ரீ' என்னும் தாமரைச் செல்வர் விருதுபெற்று சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தராக இருக்கிறார்) சுந்தரவடிவேலு அவர்கள் 'உயர்ந்த' முதலியார் குலத்தில் பிறந்தவர். இவர் சுயமரியாதைக் கொள்கையுடையவர், பகுத்தறிவு வாதி. இவரும் காந்தம் அம்மையாரைக் கலப்பு மணம் செய்து

கொண்டார். கலப்புமணம் மட்டும் அன்று, சீர்திருத்தத் திருமணம், அதிலும் பதிவுத்திருமணம் செய்து கொண்டவர். இவர்களைப் போல பல தோழர்களும் தோழியரும் கலப்புத் திருமணங்களையும் சீர்திருத்தத் திருமணங்களையும் அக்காலத்தில் செய்து கொண்டார்கள். கலப்புத் திருமணங்களைச் செய்துகொண்ட பல தம்பதிகளின் படங்கள் அச்சிடப்பட்ட 'காலண்டர்' அக்காலத்தில் இயக்கத் தோழர்களின் வீடுகளை அலங்கரித்தன. இக்காலத்தில் கலப்புத் திருமணங்களும் சீர்திருத்தத் திருமணங்களும் சாதாரணமாகிவிட்டன. அக்காலத்தில் கலப்புத் திருமணங்கள் செய்து கொள்வதற்கு மனவுறுதியும் தைரியமும் வேண்டியிருந்தது.

இக்காலத்தில் பகுத்தறிவு இயக்கம் சுயமரியாதை இயக்கம் என்றால் கவுரவமாகவும் சிறப்பாகவும் கருதப்படுகிறது. சமுதாயத்தில் நன்கு மதிக்கப்படுகிறது. ஆனால், அந்தக் காலத்தில் சுயமரியாதைக்காரருக்குச் சமுதாயத்தின் ஏளனமும் ஏச்சும் பேச்சுந்தான் கிடைத்தது

இவ்வாறு சுயமரியாதை, பகுத்தறிவு இயக்கங்களை வளர்த்து வந்தவர்கள் பலரில் தோழர் குருசாமி, பெரியார் ஈ. வெ. ராவுக்கு அடுத்தபடியாகக் கருதப்பட்டார். இயக்கத்தில் ஆழ்ந்த பற்றும், உறுதியும், தன்னலமில்லாத தியாகமும், பிரசாரமும், தொண்டும், எழுத்தும் ஆகிய இவையெல்லாம் தோழர் குருசாமியைப் பெரியார் அவர்களுக்கு அடுத்த நிலையில் உயர்த்திவிட்டன. தோழர் குருசாமி எண்ணியிருந்தால் அரசாங்க உத்தியோகத்தில் உயர்ந்த பதவியைப் பெற்று, தன்னளவில் சுகமாகவும் சிறப்பாகவும் வாழ்ந்திருக்கலாம். ஆனால், இயக்கக் கொள்கைகளைப் பரப்புவதையே குறிக்கோளாகக் கருதியபடியால் பெரிய உத்தியோகப் பதவியை நாடவில்லை. எளிய வாழ்க்கை வாழ்ந்து வந்தார். தமிழ் நாட்டில் சுயமரியாதை இயக்கத்தைப் பரவச் செய்து வளர்க்கக் காரணமாக இருந்தவருள் முன்னோடி இவரே.

1928 முதல் 1965ஆம் ஆண்டுவரையில் 37 ஆண்டுகளாக இயக்கத்தை வளர்த்த தோழர் குருசாமி மறைந்துபோனார். அவர் மறைந்து பத்து ஆண்டுகள் ஆகின்றன. சுயமரியாதை இயக்கம் பகுத்தறிவு இயக்கங்களின் ஆதரவாளன் என்னும் முறையில்

இயக்கத் தலைவர்கள் தொண்டர்கள் முதலான பலர் எனக்கு அறிமுக மானவர்கள். அவர்களில் தோழர் குருசாமியுடன் நான் நெருங்கிப் பழகியவன்.

இயக்கத்துக்காக உழைத்துப் பாடுபட்ட தொண்டர்கள் பலர் மறைந்து போனுர்கள். அவர்களுடைய பெயர்கள்கூட மறக்கப்பட்டுவிட்டன. குருசாமியின் பெயர்கூட மறக்கப்படுமோ என்று நான் அடிக்கடி கருதியதுண்டு. இந்தச் சமயத்தில், குருவிக்கரம்பை திரு. வேலு அவர்கள் தோழர் குருசாமி அவர்களின் வாழ்க்கை வரலாற்றை எழுதி வெளியிடுவதைக் கண்டு உவகையடைந்தேன். திரு. வேலு அவர்கள் விரும்பியபடி இந்நூலுக்கு முகவுரை எழுதினேன். திரு. வேலு அவர்கள் இந்த நூலை எழுதி வெளியிடாமலிருந்தால், தோழர் குருசாமியின் பெயரே காலப் போக்கில் மறக்கப்பட்டு மறைந்துபோயிருக்கும். குருசாமி அவர்களின் வாழ்க்கை வரலாறு அவருடைய பெயரை நிலைபெறச் செய்வதுமட்டுமல்ல; அவர் இயக்கத்துக்குச் செய்த தொண்டுகளை நினைவுகூரத்தக்க ஒரு சான்றுகும். தமிழ் இலக்கியங்களில், வாழ்க்கை வரலாறு என்னும் பகுதியில் வெளிவந்த நூல்கள் மிகச் சிலவே. அதிலும் சுயமரியாதை, பகுத்தறிவு இயக்கத்தில் சேர்ந்தவர்களின் வாழ்க்கை வரலாறு மிகமிகச் சில.

இந்தச் சிலவற்றில் ஒன்று குருசாமியின் இந்த வாழ்க்கை வரலாற்று நூல்.

இந்த நூல், சுருக்கமும் இல்லாமல் பெருக்கமும் இல்லாமல் கச்சிதமாக எழுதப்பட்டிருக்கிறது. கடினமான நடையில் இல்லாமல் எல்லோரும் படித்துப் புரிந்துகொள்ளும் முறையில் எழுதபட்டிருக்கிறது. சிரமப்பட்டுச் சான்றுகளைத் தேடிப்பிடித்து இந் நூலை எழுதி அச்சிட்ட குருவிக்கரம்பை வேலு அவர்களைத் தமிழுலகம் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறது. இந் நூலைப் படிக்கும்போது, இந்நூலில் கூறப்படுகிற பல தோழர்களை நேரில் சந்திப்பது போன்ற உணர்ச்சி எனக்கு ஏற்படுகிறது, எனென்ருல் சுயமரியாதை - பகுத்தறிவு இயக்கத்தில் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த நான் அவர்களை எல்லாம் நன்கறிந்தவன். குருசாமியோடு பழகிய நண்பர்கள் பலர் இன்றும் உயிரோடு

வாழ்கிறபடியால், அவர்களுக்கு இந்த நூல் நல்ல விருந்தாக இருக்கும். மற்றவர்களுக்கும் இந்நூல் ஒரு பகுத்தறிவுவாதியின் வாழ்க்கையை அறிந்துகொள்ள வாய்ப்பாக இருக்கும். இதுபோன்ற வேறு சில நூல்களைக் குருவிக்கரம்பை வேலு அவர்கள் எழுதித் தமிழுலகத்துக்கு உதவுவார்களாக.

மயிலை சீனி வேங்கடசாமி

திரு. சோ. இலட்சுமிரதன் பாரதி

# பாராட்டுரை

குருசாமி! குத்தூசி குருசாமி!!

இந்நூல் அவரது வரலாறா? உயிரோவியமா? சொற்சித்திரமா? படப்பிடிப்பா? எவ்வாறு கூறுவது?

இறந்தவர் திரும்பவும் பிழைத்து வருவதில்லை. சென்றதினி மீளா. ஆனால் இந்நூலைப் படிக்கும்போது, அந்தந்தச் சூழ் நிலைத் தறுவாய்கள் நம் கண்முன் நிகழ்வது போல் கொண்டு வரப் படுகின்றன.

மீண்டும் உயிருடன் பேசுகிறார் குருசாமி! உணர்ச்சியுடன் எழுதுகிறார் குத்தூசி!!

அவரது அறிவாற்றல் பெருமிதத்துடன் கிளர்ந்தெழுகிறது. தம் மக்களிடையே காணும் சிறுமதி, மூடத்தனம், அடிமைப் புத்தி, மதவெறி, ஜாதி ஆகிய குறைகளையும், கொடுமைகளையும் சாடிப் போராடுகிறார் தன்மான இயக்கத் தனிப்பெருந்தொண்டர். படிக்குமிடமெல்லாம் குருசாமி உயிர்த்து, வாழ்ந்து போராடிக் காட்சி தருகிறார். நாம் நம்மை மறந்து அப்படியே லயித்துப் போகிறோம். உள்ளப் பிரிந்த நாம் மீண்டும் உவப்பத் தலை கூடுகிறோம்.

ஒரு பானை சோற்றுக்கு ஒரு பருக்கை பதம் என்பர். ஆங்கில அறிஞன் ஜான்சனுக்கு பாஸ்வெல் போலும், காந்தியாருக்கு மகாதேவ தேசாய், பியாரிலால் போலும், அப்பெரியார்களின் அனைத்து நிகழ்ச்சிகளையும் அப்படியே பதிவு செய்து நாமறிய நமது கண்முன் நிறுத்துவதற்கு இந்நூலாசிரியர் அவர்களைப்போல குருசாமியோடு எல்லாக் காலங்களிலும் உடன் இருக்கவில்லை என்றாலும், குருசாமி வாழ்க்கையின் உணர்வுமிகு காட்சிகளை நிகழ்ந்தவாறே உயிர்ப்புடன் அளிப்பது நூலாசிரியரின் ஒப்புர விற்கும், திறமைக்கும் சான்றாகும்.

அரசியலானும், பிறவாற்றானும் மக்கள் வாழ்வு துயருறும் இவ்வேளையில் பல்லாண்டுகள் ஒதுங்கியிருந்த செயப்பிரகாஷ்

நாராயணர்; 'சமூகப் புரட்சியின் உடனடித் தேவையை வலியுறுத்திப் போர்க்கொடி ஏற்றியிருக்கிறார். இரு பிறப்பாளரில் இளைஞர் பலர் தங்கள் பூணூலை அறுத்தெறிந்தனர். எனினும் சமூகப் புரட்சிக்கு இன்றியமையாத தீண்டாமை, சாதி, அவற்றிற்கு அடிப்படையான மதங்கள் இவற்றை ஒழிக்கும் திட்டங்களைச் செயல்படுத்தாமல் அரசியல் சீர்திருத்தங்களிலும், மாற்றங்களிலும் மட்டுமே அவரது நாட்டம் சென்று கொண்டிருக்கிறது.

மதம் அச்சுறுத்தும் நம் நாட்டுச் சூழ்நிலையில், பகுத்தறிவும் தன்மானமும் அடிப்படையாகக் கொண்டு, மதங்களை ஒழித்து மக்கட் பண்பை வளர்ப்பதற்கு மாபெரும் சமூகப் புரட்சியைத் தோற்றுவித்து அய்ம்பது ஆண்டுகளுக்கு மேல் அல்லும் பகலும் இடையறாது உழைத்த பெரியாரின் பெருமை செயற்கு அரிது அரிது அன்றோ! அவருடன் இணையறாது உழைத்து இயக்கத்தின் இரண்டாமவரெனத் தொண்டாற்றி தனது இறுதி மூச்சு அடங்கும் வரை சமூகப் புரட்சிப் பாதையை முன்னின்று தொடர்ந்து நடத்தும் சால்புடைத் தன்மையினால் அன்றோ பெரியார் வாயால் 'பெரியாரெ'னக் குருசாமி பாராட்டப் பெற்றார். (பக்கம்-48.)

புரட்சிக் கவி பாரதிதாசனால் ''சகம் எதிர்த்தபோதும் தனித் தெதிர்க்கும் 'சுயமரியாதைச் சுடர்'' என்று போற்றப் பெற்றார். (பக்கம் 90-91.)

இந்நூற்றாண்டு உலக வரலாற்றில் தனிச் சிறப்புடையது. அதிலும் கடந்து கழிந்து கொண்டிருக்கும் பத்தாண்டுக் கத்தைகளில் மனித ஆற்றலின் அதிசயிக்கத் தக்க அற்புத விளைவுகளை எண்ணியல் (Scientific) தொழில்நுட்பத் (Technology) துறைகளில் கண்டு வருகிறோம். அணுவியல் பௌதிகத்திலும் மூலக உயிரியலிலும் பெருகிவரும் அறிவு, கடவுளையும் ஊழையும் உடைத் தெறிந்து மதங்களையும் பொருள் முதல் வாத வரலாற்று வாதத்தையும் இலட்சிய முதல் வாத இணையாற்றல் தத்துவங்களையும் இடித்துத் தகர்த்து விட்டது. இவ்விளைவுகளினாலாய பயன்களுக்கிணைய, பண்பு வளராது தேக்கமடைந்து இடை வெளி (Cultural lag) ஏற்பட்டிருக்கிறது—அது மனிதனைத் தனிமையுற்று

பேதலித்து அலமரச் செய்து வாட்டி எடுக்கின்றது,

எண்ணற்றவை தம்மில் மோதிக் கலந்து மாறிக்கொண்டே போகும், இயற்கையினுடையவும் மாந்தருடையவுமான புதுப் புது சுற்றுச் சூழலுக்கேற்றவாறு ஒட்டி வாழும் வகையறியாது மனிதன் தனது துன்பத்தை மறக்கப் பித்தம் தரும் பல மருந்து வகை தேடி அலைகிறான். தனது இயல்பூக்கங்களையும் உணர்ச்சி மெய்ப்பாடுகளையும் கட்டாள்கை (Control) செய்து இயல்பறிந்து ஒன்றி வாழச் செய்யும் ஆற்றல்சால் சமனீயத்தைத் (Dynamic Eguilibrium) தரவல்ல, தன்பால் பரிணமிக்க மூளைக்கட்டுமானமும் அதன் செயலாற்றலான மதி நுட்பமும் மறுமலர்ச்சியுறச் செய்வதே பகுத்தறிவு இயக்கத்தின் பணியாகும்.

இந் நெருக்கடியான தறுவாயில் மனிதத்துவ நெறி தழைத் தோங்க, பண்பும் பயனும் ஒருங்கிணைய, பழமை களைந்து புதுமை காணத் தேவையான சமூகப் புரட்சியில் இளைஞர்கள் துடித்துக் குதிக்க வேண்டுமென்பதற்கு குருசாமி சிறந்த எடுத்துக் காட்டு.

எந்த மக்கள் இயக்கமும் ஒரே தலைவரைத் தாயகமாகவும் தெய்வீக ஆற்றலுடையவராகவும் கொண்டு தோன்றி பரவி, நின்று நிலைப்பதோ, முழு வெற்றி தருதலோ இல்லை என்பது வரலாற்றுண்மை. அதற்குச் சுயமரியாதை இயக்கம் விலக்கன்று. எவ்வளவுக் கெவ்வளவு மக்களிடம் அறிவு பரவி அனைவரும் பங்கெடுத்துப் பரிமாறிக் கொள்ளும் பாங்கினையும் வயணத்தையும் ஒரு இயக்கம் எடுத்துக் கொள்ளுகிறதோ அவ்வளவுக் கவ்வளவு அதன் செயலாற்றலும் பயன் திறனும் மிகுந்து வளர்கின்றது. இன்றைய துயருறும் மக்களின் தேவை எழுப்புகின்ற புதிய மாற்றங் களுக்கான கொள்கைக் கொதி கலன்களில் குதிக்க முன்வரும் அறிஞர்களும் இளைஞர்களும் ஒரே தலைவர் அவர் எத்தகைய தனிச்சிறப்புடையவராயினும் அவரது தனி ஆளுகையில் அடங்கி யிரார் என்பதற்குப் பழைய மரபுகளை வெறுத்து ஒதுக்கும் தன் மான இயக்கத்தின் வரலாறும் தன் தலைவருடன் இரண்டறக் கலந்து ஒன்றிய குருசாமி அப்பண்பினுக்கு மூலமாகிய இயக்கக் கொள்கை வலியிழக்க நேரிடும்பொழுது பிரிவினையை ஏற்ற

அவரது இறுதி விளக்கமும் (பக்கம் 222– 224) சான்றளிக்கின்றது.

அரசியல் நடவடிக்கைகளில் சாதகமாகச் சார்ந்து சமூகப் புரட்சி தளர்நடை போடவும், காங்கிரசை ஆதரிக்கும் பெரியாரின் முடிவினை ஏற்றுங்கூட அக் கோள்விக்கு (Principle) இயைபத் தலையங்கம் எழுதவொண்ணாது எழுந்தபோதும் தன்மான வீரர் குருசாமி தலைவரைப் பிரியும் வருத்தத்தினையும் சகித்துக் கொண்டு கொள்கையைப் போற்றும் பீடினைத் தேர்ந்தார்.

ஷேக்ஸ்பியரின் 'ஜூலியஸ் சீசர்' நாடகத்தில் புருட்டஸின் கூற்று ''சீசரிடத்தில் எனக்கு அன்பு குறைந்தது என்பதல்ல. ஆனால் உரோமாபுரியினிடத்தும் அதற்கும் அதிகமாக அன்பு செலுத்துகிறேன்'' என்பது நினைவிற்கு வருகிறது.

நடைமுறையில் மக்கள் உண்மையில் பங்கெடுத்துக் கொள்ள வயணங்கள் இல்லாததினாலேயே நவீன உலகிற்கு நயத்தக்கதாகத் தேர்ந்த 'மக்களாட்சி' (classical Democracy) மாய்மாலக் கதையாகி (Myth) விடுகிறதென்பர். இவ்வுண்மையை அரிதிலுணர்ந்து செயல்பட்டார் குருசாமி. இவ்வகையில் அவர் பழைய மரபில் செல்லும் தலைவர்களின் தவறுகளைத் திருத்தும் ஒரு வழிகாட்டியாக விளங்கினார்.

சுயமரியாதை இயக்கத்தைத் தொடர்ந்து நடத்துவதின் தேவையை இயக்கத் தோழர்கள் திரு. வேதாசலனார் தலைமையில் கூடி வலியுறுத்திய பின்பு இடையறாது குருசாமி தனது தோழர்களின் ஒப்புதலின் பேரிலேயே எந்த நடவடிக்கையும் மேற்கொண்டது அவரது சமத்துவத்தோழமைமனப்பாங்கிற்கு எடுத்துக்காட்டு. அவரை அறிந்தவர்கள் பழைய மரபியல் தலைமைக்கு அவர் பரம விரோதி என்பதை உணர்வர்.

சாதியை ஒழிப்பதற்குக் கலப்பு மணமே தலைசிறந்த வழியாகத் துணிந்த குருசாமியும், திரு. நெ. து. சுந்தரவடிவேல் அவர்களும், கலப்பு மணம் செய்துகொண்ட திருமதி முத்துலட்சுமி (ரெட்டியார்) அவரது தங்கை திருமதி நல்லமுத்து (இராமமூர்த்தி ஐயர்) போலவே இசை வேளாளர் எனக் குறிக்கப்படுபவர்களான படித்துப் பட்டம் பெற்ற திருமதி குஞ்சிதம் அம்மையாரையும் அவரது தங்கை திருமதி காந்தம் அம்மையாரையும் முறையே

திருமணம் செய்து இளைஞர்களுக்கு வழிகாட்டினர். இத்தகைய கலப்பு மணங்களாலேயே இசை முதலிய நுண்கலைகளில் சிறப் புற்றோங்கி அக்கலைகளை அழியாது காத்த அக்குறிப்பாட்டிற் குரியர், இன்று அரசியல் போன்ற இதர துறைகளிலும் முதன்மை பெற்றுத் தொண்டாற்றுவதற்கு குருசாமி தூண்டுகோலாயிருந் தார் என்பது மிகையல்ல.

குஞ்சிதம் அவர்களுடனும், அவர்கள் குடும்பத்தினருடனும் பழகும் வாய்ப்பு எனக்கு குருசாமியைத் தெரிந்துகொள்ளுமுன்னர் சில ஆண்டுகளாகக் கிடைத்திருந்தது. அக் குடும்பத்தினர் தாத்தா என்றழைக்கும் திரு. கோபாலகிருஷ்ணன் அவர்களும், குஞ்சிதம் அவர்களின் தந்தை திரு. சுப்ரமணியமும் தங்கள் குழந்தைகள் தமக்கு இயல்பான நுண்கலைகளுடன் நவீன உலகிற்கு வேண்டிய பல்கலைக்கழகப் படிப்புகளிலும் தேர்ச்சி பெறல் எவ்வளவு இன்றி யமையாதது என்பதை நன்குணர்ந்திருந்தனர் என்பதற்கு அவ் வளவுபேரும் பட்டங்கள் பெற்றுப் பல அலுவல்களில் அமர்ந்தது சான்றாகும். பொதுத் துறையில் திறம்படப் பணியாற்றியும் கணவரைக் கண்போல் காத்து அவரது பொதுத் தொண்டுகளுக்கு உற்ற துணையாயும் அத்துடன் உதவியின்றி வீட்டு வேலைகள் அனைத்தும் செய்து குடித்தன நிர்வாகியாயும் எல்லாவற்றிற்கும் எல்லாமும் ஆகியிருந்த திருமதி குஞ்சிதம் போன்று சளைக்காத ஒரு உழைப்பாளியை நான் கண்டதில்லை.

குத்தூசியாரிடம் படித்துக் கொள்ள வேண்டிய மற்றொரு பாடமும் இத் தலைமுறையினருக்கு உண்டு. துன்பமே நாடி, இன்பந் துறத்தலே 'மேலுலகில்' புகுத்தும் மார்க்கமாகக் கொண்ட மதங்களில் ஊறிய நம்மக்கள் பட்டினி கிடத்தல், சிறை செல்லல், தம் நலன்களைத் தியாகம் செய்தல் போன்றவற்றைக் குறிக் கோளாகக் கொள்ளல் வியப்பன்று. இப்பொழுது அதில் உள்ள மாற்றம் இவ்வுலக நலன்களாக மாறு கொள்வதற்காக அவற்றைப் பயன்படுத்தல். இவ்விரண்டும் பகுத்தறிவுக்கு முரணாகும்; நகைப் பிற்குரிய இழிதகைமையாகும். வள்ளுவர் கூறியாங்கு குறிக்கோளை அடைவதில், கடமையை ஆற்றுவதில், உற்ற நோய் நோன்றலை, அது பட்டினியாயினும் சிறையிருத்தல் ஆயினும் தயங்காமல்

ஏற்றலே அறிவுடைமையாகுமென்பதைக் குருசாமி தனது வாழ்க்கையில் அயராது உழைப்பினையே போற்றியதன் மூலம் விளக்கினார். தேவைப்படும்பொழுது அவர் சிறையில் இருப்பதற்கோ, பிற துன்பங்களை அனுபவிப்பதற்கோ தயங்கவில்லை.

இவ்வாறாக, 'தந்தை பெரியார் ஒரு அடி தாண்டினால் தனயன் குருசாமி இரு அடி தாண்டுவான்' என்பதற்கு இலக்காக வாழ்ந்து காட்டிய வரலாற்றை இந்நூலில் எளிய, தெளிவான, எல்லோருக்கும் புரிகின்ற தமிழ்நடையில் தன் திறல் விளங்கத் தந்துள்ளார்.

இந் நூலாசிரியர் குருவிக்கரம்பை திரு. சு. வேலு அவர்களையும் அவர் குடும்பத்தினர் அனைவரையும் நான் இருபது ஆண்டுகளாக நன்கறிவேன். அவர் குடும்பத்தினர் அனைவரும் பச்சை நாத்திகர்கள். பெண்கள் சமத்துவத்திற்கு எடுத்துக்காட்டு அவர் மனைவி. பெரியார் "தாலி பெண்களின் அடிமைச் சின்னம்" என்று கூறியதை ஏற்றுப் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னாலேயே தாலியைக் கழற்றிப் பெரியாரிடம் கொடுத்துவிட்டவர். திரு. சு. வேலு, குருசாமியின் ஊரினர் என்பதன்றி அவருடன் நெருங்கிய உறவுகொண்டிருந்து இயக்கத்திலும் நெடுகிலும் பங்கு கொண்டு தொண்டாற்றியவர். இந் நூலை எழுதுவதற்கு முற்றிலும் தகுதியுடையவர். இந்நூலின்றிச் சுயமரியாதை இயக்க வரலாறு முழுமை பெறாது.

தமிழகம் இந் நூலை ஆக்கியோருக்கு அதனைப் படித்துப் பயனுற்று நன்றி செலுத்தும் கடப்பாடுடைத்து.

—சோ. இலட்சுமிரதன் பாரதி

# முன்னுரை

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பத்தெட்டாம் ஆண்டு தஞ்சை மாவட்டம் குருவிக்கரம்பையில் ஒரு மாபெரும் காங்கிரசு மாநாடு நடைபெற்றது.

மாநாட்டையொட்டி இளைஞர்கள், சிறுவர்கள் பங்கு கொண்ட, "விவேகானந்தா இளைஞர் சங்கம்" என்ற அமைப்பு ஒன்று நிறுவப்பட்டது. அந்த அமைப்பில் நானும் ஒரு உறுப்பினனாகச் சேர்க்கப்பட்டிருந்தேன். அப்போது எனக்கு எட்டு வயதே ஆகி இருந்தது.

என்னையொத்த இளம் சிறுவர்களுக்கு இட்ட பணி காங்கிரசு இயக்கத்தின் மூவர்ணக் கொடிகளைப் பிடித்துக்கொண்டு ஊர்வலங்களில் 'காங்கிரசுக்கு ஜே'—'காந்திஜீக்கு ஜே' என்று பேரொலி எழுப்பி முழக்கமிடுவதேயாகும்.

இந்த மாநாடு, வேதாரண்யம் சர்தார் வேதரத்தினம்அவர்கள் தலைமையில் நடைபெற்றது. மாநாட்டு சிறப்பு சொற்பொழிவாளராக திருவாளர்கள் வி. வி. கிரி, ப. ஜீவானந்தம் முதலானோர் கலந்து கொண்டனர்.

அண்ணாமலைப் பல்கலைக் கழக மாணவரான பேராவூரணித் தோழர் கே. முத்தையா அவர்கள் மாநாட்டு வரவேற்பாளராகப் பணியாற்றினார்.

இப்படிப்பட்ட கிராமச் சூழ்நிலையில் வளர்ந்த நான், சிறுவயது முதற்கொண்டே அரசியலில் ஆர்வமுடையவனாக இருந்தேன்.

குருவிக்கரம்பையை யடுத்த பேராவூரணி காங்கிரசு இயக்கத்திற்கு மட்டுமன்றி சுயமரியாதை, பொதுவுடைமை இயக்கங்களுக்கும் நிலைக்களனாகத் திகழ்ந்தது.

பேராவூரணி பொதுவுடைமை இயக்கத்தோழர் எம். கே. முத்துக்கருப்பன் எனது உறவினர். அவர் தமது இல்லத்தில் அரியதோர் நூலகம் வைத்திருந்தார். அந்நூலகத்திலிருந்த

நூல்களில் என்னைக் கவர்ந்த முதல் நூல் 'மாமேதை லெனின்' அவர்களின் வாழ்க்கை வரலாறேயாகும்.

எனது பதினைந்து வயதில் நான் படித்த முதல் அரசியல்நூலும் அதுவே. அதையடுத்து ராகுலசங்கிருத்தியாயனின் 'பொதுவுடைமை தான் என்ன?'' (What then is communism?) என்பதே. இப்படியாகத் தொடர்ந்து நான் படித்த நூல்கள் அனைத்துமே பொதுவுடைமைக் கருத்துக்கள் நிறைந்தனவாக இருந்த போதிலும், நான் முற்றிலும் நாத்திகக் கருத்துடையவனா மாறுவதற்கு எனது பள்ளி ஆசிரியர் குருவிக்கரம்பை திரு. எஸ். பி. தங்கவேலு அவர்கள் காரணமாவார்கள். எனது பகுத்தறிவுக் கண்ணைத் திறந்துவிட்டவரும் இவரேயாகும்.

1947-ம் ஆண்டு ராஜாமடம் உயர்நிலைப் பள்ளியில் நான் பயின்று வரும்போது, 'விடுதலை' நாளிதழைத் தொடர்ந்து படிக்கும் வாய்ப்புக் கிட்டியது. அதுமுதற்கொண்டு தந்தை பெரியார் அவர்களைப் பற்றியும், திராவிடர் கழகம் பற்றியும் அறிந்துகொள்ளத் தொடங்கினேன்.

ஒவ்வொரு நாளும் 'விடுதலை' இதழில் வெளிவந்த 'குத்தூசிக் கட்டுரைகள்' என்னை மிகவும் கவர்ந்தன. குத்தூசியாருடைய பாணியும், சுயமரியாதைக் கருத்துகளும் எனக்கு மிகப் பிடித்திருந்தன.

பள்ளிவிடுமுறையில் கிராமத்திற்குச் செல்லும்போது, அதுவரை வாங்கிச் சேர்த்திருந்த அனைத்து 'விடுதலை' இதழ் களையும் உடன் எடுத்துச் சென்றிருந்தேன்.

என்னுடைய தந்தையார் ஒரு கடவுள் பக்தர். உருத்திராட்சம் அணிந்தவர். (இந்த உருத்திராட்சம் குத்தூசியாரின் தந்தை யாரால் என் தந்தையாருக்கு வழங்கப்பட்டது என்பதனைப் பின்னர் அறிந்தேன்) 'கந்தர் சஷ்டிக் கவசம்' 'மீனாட்சியம்மை கலிவெண்பா' முதலியவற்றை நாள்தோறும் பாராயணம் பண்ணு பவர். எனக்கும் அந்தச் சிறுவயதில் இந்த மாதிரித் தண்டனைகள் உண்டு.

நான் கொண்டு வந்திருந்த 'விடுதலை' இதழ்களில் கடவுளைக் கிண்டல் செய்து வெளியாகியிருந்த குத்தூசிக் கட்டுரைகளைப்

படித்துவிட்டு என்னுடைய தந்தையார் குலுங்கக் குலுங்கச் சிரித்தார்.

கோபம் கொள்ள வேண்டியவர் சிரிப்பதைக் கண்டதும் பெரிதும் வியப்படைந்தேன். என் தந்தையார் ''இந்தக் கட்டுரைகளை எழுதியவர் யார் என்று உனக்குத் தெரியுமா?'' என என்னைக் கேட்க, நானோ ''தெரியாது'' என்று பதிலளித்தேன்.

''நம்ம முதலியார் மகன்...நான் தூக்கி வளர்த்த பையன்''—என்று உள்ளம் பூரிக்க அவர் சொன்னார்.

என் தந்தையார் அவ்வாறு கூறியதும் அக்கணமே என்னையறியாமலேயே என் மனம் குத்தூசியார் மீது ஈடுபாடு கொண்டது.

குருசாமியின் தந்தையார் சாமிநாத முதலியாரும் என்னுடைய தாத்தா குமாரசாமித் தேவரும் நெருங்கிய நண்பர்கள் மட்டுமல்ல; ஒரே குடும்பம் போல் பழகியவர்கள்.

இவற்றையெல்லாம் என்னுடைய தந்தையார் மூலம் அறிந்த நான், அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே கிடையாது.

1948-ல் எனது உயர்நிலைப் பள்ளிப் படிப்பைப் பட்டுக்கோட்டையில் தொடர்ந்தேன். அரைகுறை நாத்திகனுன என்னைப் பட்டுக்கோட்டை ஒரு முழு நாத்திகனுக மாற்றியது.

1950 ஜூலைத் திங்களில் பல ஆண்டுகளாக நான் நேரில் சந்திக்க வேண்டுமென்று, எதிர்பார்த்து, காணத் துடிதுடித்துக் கொண்டிருந்த எனது ஆசானை,—ஆம், குத்தூசியாரை நேரில் சந்தித்து மகிழ்ந்தேன்.

பட்டுக்கோட்டை தபால்—தந்தி ஊழியர் மாநாட்டில் பங்கு கொள்ள வந்திருந்த குத்தூசியாரிடம் சென்று 'ஆட்டோகிராபில்' கையெழுத்து கேட்டுப் பெற்றேன்.

'ஜாதியை ஒழிப்பதற்கு கலப்பு மணம் ஒன்றுதான் வழி''—என்று எழுதி கையெழுத்திட்டிருந்தார் குத்தூசியார். திருமணத்தைப் பற்றி எழுதி இருந்ததைப் படித்த எனக்குக் கூச்சமாக இருந்தது. அவர் அருகிலிருந்த திரு. டி. வி. டேவிஸ் அவர்களிடம் ''படிக்க வேண்டிய பையனுன எனக்குப் போய் இவ்வாறு எழுதியிருக்கிறாரே குத்தூசியார்'' என்று கேட்டேன்.

நான் கேட்டதை டேவிஸ் அவர்கள் அப்படியே குத்தூசியாரின் காதில் போட்டுவிட்டார்.

"அந்த மாணவரின் முகவரியைப் பார்த்தேன். குருவிக்கரம்பை வேலு என்றிருந்தது. என்னுடைய ஊரைச் சேர்ந்த மாணவருக்கு உரிமையோடு கூறுகின்ற அறிவுரையே அது"—என்று சொல்லி விட்டுஎன்னைப்பார்த்துப் புன்முறுவல் பூத்தார். நானும் சிரித்தேன்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு என் இதயத்தின் பெரும்பகுதியைக் குத்தூசியார் ஆக்கிரமித்துக் கொண்டார்.

குத்தூசியாரை எப்படியும் குருவிக்கரம்பைக்கு அழைத்து மீண்டும் அவருக்கும்– ஊருக்கும் உள்ள நெருக்கத்தை அதிகப் படுத்த விரும்பிய நான் கடிதமூலம் தொடர்பு கொண்டு ஊருக்கு அழைத்தேன்.

அக்டோபர்த் திங்கள் இருபத்தோராம் நாள் குத்தூசியார் தம்பதிகள், மகள் ரஷ்யா, மகன் கவுதமனுடன் வந்து சேர்ந்தனர்.

அன்றைய தினம் குருவிக்கரம்பையினர் கட்சிப் பாகுபாடும் கருத்து மாறுபாடும் இன்றி அனைவருமாகச் சேர்ந்து நல்ல தொரு வரவேற்பைக் கொடுத்தனர்.

அன்றிலிருந்து சாமிநாதர், குமாரசாமியார் — குடும்பங்களுக் கிடையே இருந்த பழைய தொடர்பு குருசாமி வேலு—என்று எங்கள் தலைமுறையில் மீண்டும் தழைக்கத் தொடங்கியது. "குஞ்சிதம் குருசாமி" இல்லத்தில் நானும் ஒருவன் என்ற அளவுக்கும் எங்கள் நெருக்கம் வளர்ந்தது.

1952-ல் பள்ளிப்படிப்பை முடித்து, கல்லூரிப் படிப்புக்குத் தொடர்ந்தேன். குத்தூசியார் ஆலோசனைப்படி பச்சையப்பன் கல்லூரியில் சேர்ந்தேன். கல்லூரி நாட்களிலிருந்தே, முழு நேரத் தொண்டனாக இல்லாது போனாலும், பகுதி நேரத் தொண்டனாக இருந்து, திராவிடர் கழகத்தில் தந்தை பெரியாரின் தலைமையின் கீழ் 1962 ம் ஆண்டு வரை என்னால் முடிந்த பொது நலத்தொண்டுகளைச் செய்திருக்கிறேன். நான் மட்டுமல்ல எனது குடும்பமே நாத்திகக் குடும்பம்.

குத்தூசியாரின் நற்பண்புகளை, நாத்திகப் பொருளாதாரக் கொள்கைகளை, எழுத்தாற்றலைப் பாராட்டுவதில் பின்பற்றுவதில்

முதன்மை பெற்றவர்களில் நிச்சயம் நானும் ஒருவன், அவர் தமிழகத்திற்காக உழைத்துச் செயலாற்றிய செயல்கள் தியாகங்கள் அத்தனையும் எனதுள்ளத்தில் மாறாத பசுமை நிறைந்தவை. அவர் பெருமைகளையும் தியாகங்களையும் மறைக்கவோ மறக்கவோ முடியாது என்பதிலும் அசைக்க முடியாத எண்ணம் எனக்குண்டு.

நமது சமுதாயத்தில் நாற்பதாண்டுகளுக்கு மேலாக நெருப் பாற்றில் நீந்தி, எதிர் நீச்சடித்து முன்னேறிய பெருமை குத்தூசி யாருக்குண்டு. மூடநம்பிக்கைகளும், சாதிப் பிரிவுகளும், பொருளாதார ஏற்றத்தாழ்வுகளும் ஒழிய விரும்பி அதற்காக வாழ்க்கையை அமைத்துக் கொண்டவர் அவர்.

எழுத்து பேச்சோடு மட்டுமன்றி செயலிலும் கொள்கைகளை அதிதீவிரமாகக் கடைபிடித்தவர். கொள்கைகளிலிருந்து தமது கழகத் தோழர்கள் சிறிது வழுவினாலும் கூட, தவற்றைச் சுட்டிக் காட்டிக் கண்டித்த பெருமை அவருக்குண்டு. அதன் காரணமாக எத்தனையோ இடையூறுகளை ஏற்றவர் அவர்.

வருங்கால இளந்தலைமுறையினர் முன்மாதிரியாகக் கொள்ளத் தக்க ஓர் உண்மைச் செயல் வீரர் குருசாமி.

தந்தை பெரியாரின் வரலாற்றையோ, சுயமரியாதை இயக்கம், திராவிடர் கழகம் ஆகியவைகளின் வரலாற்றையோ, குத்தூசி குருசாமி அவர்களின் வரலாற்றையோ—தனித்தனியே பிரித்து எழுதுவதென்பது இயலாத செயலாகும். ஒன்றோடொன்று ஊடுருவிப் பின்னிப்பிணைந்து கொண்டிருக்கும் ஒரு வரலாற்றுச் சிறப்பு இது.

குத்தூசியார் 1928 ஆம் ஆண்டில் நாத்திகர் ஆன பின்பு இறுதி மூச்சு உள்ளவரை கணக்கிட்டுக் கூற வேண்டுமானால் பதிமூன்று ஆயிரம் நாட்கள் தன்மானமுள்ள, பொதுவுடைமைச் சமுதாயத் தைப்பற்றியே சிந்தனை செய்து செயலிலும் காட்டிய மாபெரும் சிந்தனையாளர்.

குத்தூசியார் மறைந்து பத்து ஆண்டுகள் ஆகின்றன. அவருடைய சிறப்புகள் பற்றி எழுதுவதற்கு. என்னைவிடச் சிறந்த ஆற்றலும் தகுதியும் உடையவர்கள் அவருடன்

நெருங்கிப் பழகியவர்கள், அவரால், தங்களது வாழ்க்கைத் தரங்களை உயர்த்திக் கொண்டவர்கள் மிகப் பலர் உள்ளனர். அவர்களில் எவராவது ஒருவர், குத்தூசியாருடைய வரலாற்றை நிச்சயம் எழுதுவார்கள் என்று இது நாள் வரை நான் எதிர்பார்த்திருந்தேன். எவரும் முன்வரவில்லை. எனவே, குருசாமியுடன் ஓரளவு நெருங்கிப் பழகிய நான், அந்தப் பொறுப்பை என்மேல் போட்டுக்கொண்டு இந்நூலை எழுதி யுள்ளேன்.

இந்த வரலாற்றில் எந்த ஒரு நிகழ்ச்சியும் என்னுடைய கைச் சரக்கு அல்ல. அத்தனை செய்திகளும் எவைகளிலிருந்து திரட்டப்பட்டன என்பதை இந்நூலின் முடிவில் தந்துள்ளேன்.

குத்தூசியாருடைய வரலாறு மட்டுமல்ல இது. எப்படி 'குஞ்சிதம்-குருசாமி' என்று இருவரையும் பிரித்துரைக்க முடியாத நிலை தமிழகத்தில் இருந்ததோ, அதுபோலவே குஞ்சிதம் அம்மை யாரின் வரலாறும் பிரிக்க முடியாதபடி சம அளவில் இந்நூலில் அமைந்திருக்கிறது.

அந்தநாள் சுயமரியாதைக் காரர்கள் எத்தகைய எதிர்நீச்ச லடித்தார்கள் எவ்வளவு கொள்கை உறுதியுடனிருந்தார்கள் என் பதைக் குஞ்சிதம் குருசாமி தம்பதிகளின் வாழ்க்கை நமக்கு எடுத்துக்காட்டுகிறது.

பொறுப்புள்ள பல அலுவல்களுக்கிடையேயும் இந்நூலுக்கு உளம் கனிந்து அணிந்துரைகள் தந்துள்ள சென்னை, பல்கலைக் கழகத் துணைவேந்தர். திரு. நெ. து. சுந்தரவடிவேலு அவர் களுக்கும், தமிழறிஞரும், ஆராய்ச்சி வல்லுநருமான திரு. மயிலை. சீனி வேங்கடசாமி அவர்களுக்கும், நாவலர் சோமசுந்தர பாரதி யாரின் திருமகனார் சோ. இலட்சுமிரதன் பாரதி அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் எழுதுவதற்குரிய ஒரு சில வரலாற்று உண்மைகளை எனக்குத் தந்துதவிய தோழர்கள் நாகை. கே. முருகேசன், கே. டி. கே. தங்கமணி, கே. முத்தையா, புதுவை ம. நோயல். நாகை. காளியப்பன், பாவேந்தர் மகனார் மன்னர்-மன்னன், குத்தூசியார் தங்கை திருமதி சுப்புரத்தினம் அம்மையார் முதலானோருக்கும்

நான் நன்றி கூறக் கடமைப்பட்டவன்.

இந்நூலை நூல் வடிவில் அமைப்பதற்குப் பக்கத்துணையாய் அமைந்த திராவிடர் இயக்கங்களில் மிகுந்த ஆர்வமுடையவரும் சென்னை மாநில கல்லூரித் தமிழ்த்துறையைச் சார்ந்த ஆசிரியர் திரு. தி. வ. மெய்கண்டார் அவர்களுக்கும்.

எனது கைப்பிரதியை நல்லமுறையில் படி எடுத்துத் தந்த பாவை எஸ் ஜெயசந்திரன் அவர்களுக்கும்,

இந்நூலை நல்லமுறையில் அச்சிட்டு உருவாக்கித்தந்த 'நாவல் ஆர்ட் பிரிண்டர்ஸ்' - கவிஞர் நாரா-நாச்சியப்பன் அவர்களுக்கும் எனது நன்றி உரித்தாகுக.

நூல் வெளியிடுவதில் ஊக்கம் காட்டிய சென்னை திரு. டி.வி. சுந்தரமூர்த்தி அவர்கள் சுயமரியாதை இயக்கச் செயலாளர் கே. பஞ்சாட்சரம் அவர்கள் ஆகிய இருவருக்கும் என் வணக்கம்.

இந்நூல் வெளிவந்து பல ஆயிரம் குருசாமிகளை உருவாக்க வேண்டும் என்ற ஆசை எனக்கில்லை. ஆனால் ஒரே ஒரு குத்தூசி யாரை உருவாக்குமானால் அது ஒன்றே இந்நூலுக்குக் கிடைத்த மாபெரும் வெற்றி என்று கருதி மகிழ்ச்சி அடைவேன்.

—குருவிக்கரம்பை வேலு

'' மற்றவர்களுக்குப் போதிக்கின்றபடி ஒருவர் தன்னைப் பண்படுத்திக் கொள்ளட்டும். தன்னை நன்கு அடக்கியாண்ட பிறகுதான் பிறரை அடக்கியாள முடியும்.

' பேரறிவாளர் விடாமுயற்சியினால் மடமையை விரட்டி விட்டு, அறிவின் உச்சியில் இருந்து கொண்டு, கீழே அறியாமையில் ஆழ்ந்துள்ள மக்களைக் காண்கிருர். மடிமையில் ஆழ்ந்தவர் நடுவே முயற்சியுடையோராகவும், உறங்குவோர் நடுவே விழிப்புள்ளவராகவும் இருக்கின்றார்.

''அவர் கண்டிப்பார், அறிவு புகட்டுவார். தீயோரிடமிருந்து விலக்குவார். நல்லோர் அவரை நேசிப்பர். தீயோரே வெறுப்பர்.''

புத்தர்



கொண்ட குறிக்கோளும் ஒன்றே — பட்டம்
பெற்ற நாளும் ஒன்றே!

கிராமத்தின் 'காவல் தெய்வ'மென்றும், 'குல தெய்வ' மென்றும், மிக்க 'சக்தி வாய்ந்த' 'பொல்லாத தெய்வ'மென்றும் ஊர் மக்கள் அனைவரையும் நடுங்க வைத்துக் கொண்டிருந்த அந்தத் 'தெய்வ'த்தை, அவ்வூரிலுள்ள ஒருவர் வீட்டிற்கு, விருந்தினராக வந்திருந்த கல்லூரி மாணவர் ஒருவர் எடுத்து நொறுக்கிவிட்டார்.

நொறுக்கியதோடுமல்லாமல், அத் தெய்வத்தின் உடைந்த பகுதி ஒன்றை எடுத்துச் சென்று, தனது வீரச் செயலுக்கு அடையாளமாக ஊர் மக்களுக்கும் காட்டினார்.

மக்கள் பதைபதைத்தனர். 'ஊருக்கு என்ன கெடுதல் நேரிடுமோ' என்று அஞ்சினர்.

இச் செயலைச் செய்தவர் யார்?

அவர்தான் குத்தூசி குருசாமி.

## பிறந்த ஊர்

குத்தூசி குருசாமி 1906-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 23-ம் நாள் குருவிக்கரம்பை என்னும் சிறு கிராமத்தில் பிறந்தார். அன்னை யார் குப்பு அம்மாள். தந்தையார் சாமிநாத முதலியார்.

தஞ்சை மாவட்டம், பட்டுக்கோட்டை வட்டத்திலுள்ள குருவிக்கரம்பை, அந்தக் காலத்தில் விவசாயத்தை நம்பித்தான் வாழ வேண்டியிருந்தது. பெரும்பாலும் மழையை நம்பியே விவ சாயமும் நடந்து வந்தது. நீர்ப்பாசன வசதிகள் அன்று கிடை யாது. ஏரி, குளங்களில் மழை நீரை நிரப்பி, அதன் மூலமே விவசாயம் செய்யப்பட்டது. மேட்டுப் பாங்கான பகுதிகளில் கடலை, துவரை, கேழ்வரகு, சோளம் போன்ற புஞ்சைப் பயிர்கள் பயிரிடப்பட்டன. ஒரு சில செழிப்பான பகுதிகளில் சிறு சிறு தென்னந்தோப்புகளும் உண்டு.

சிவன் கோயில் ஒன்றும், மாரியம்மன் கோயில் ஒன்றும், சில குட்டித் தேவதைகளின் கோயில்களும் இருந்தன; இன்றுமிருக் கின்றன. சிவன் கோயில் மாசி மகம் திருவிழாவும், மாரியம்மன் கோயில் சித்திரைத் திருவிழாவும் தவறாது நடத்தப்படும். குட்டித் தேவதைகளுக்குப் பலி, பூஜை நடப்பதும் தவறாது. படையல் பொருள்களில் கள், சாராயம், சுருட்டு முதலியனவும் அவசியம் இருக்கும். ஆதிகாலக் கிராமங்களில் என்னென்ன சம்பிரதாயங்கள் உண்டோ, அத்தனையும் உண்டு குருவிக்கரம்பையில்.

இவை தவிர, கூரை வேய்ந்த சிறு ஆரம்பப் பள்ளியும் ஒன்று இருந்தது.

குருவிக்கரம்பையிலிருந்த சைவக் குடும்பங்களில் சாமிநாத முதலியார் குடும்பமும் ஒன்று. அவர் குருவிக்கரம்பையின் கர்ண மாகவும், ஊர்ப் பொதுக் காரியங்களை முன்னின்று நடத்துபவர் களில் ஒருவராகவும் இருந்தார். அவரின் தந்தை குருசாமி முதலி யார் 'அஷ்டாவதானம்' செய்கின்ற அளவுக்குத் தமிழில் நல்ல புலமை வாய்ந்தவர். எனவே,சாமிநாத முதலியாரும் தமிழில் நல்ல புலமை வாய்ந்தவராகவும், சைவத்தில் மிக்க ஈடுபாடுடையவராக வும் இருந்தார்.

சைவமும் தமிழும் இணைந்த சாமிநாத முதலியார் குருவிக் கரம்பை இளைஞர்களில் பலரைச் சைவராக்கினார். சிலரை உருத்திராட்சம் அணியச் செய்தார். 'தேவாரக் கோஷ்டி'யொன் றையும் ஏற்படுத்தினார். இத் தேவாரக் கோஷ்டி நல்ல முறையில் நாட்டின் பல பகுதிகளுக்கும் சென்று 'பஜனை' செய்யும் அளவுக்கு வளர்ந்தது. ஊரின் எந்த நிகழ்ச்சிகளும் இவரின்றி நடக்காது. இவருக்குத் துணையாக 'குருவிக்கரம்பை சுவாமிகள்' என்ற பாலயானந்த சாமியும் இருந்தார். பெரும்பாலான நிகழ்ச்சிகள் யாவும் முதலியாரிள் இல்லத்திலேயே நடக்கும். 'பஜனை' கோஷ்டியும் அங்குதான் நடைபெறும். பஜனை கோஷ்டி வலுக்க வலுக்க இல்லம் இடம் கொடுக்காமல் போகவே, புதியதோர் இட மொன்று ஏற்படுத்த எண்ணினார் முதலியார்.

ஊராரின் துணைகொண்டு, ஊரின் மையப் பகுதியில், ஊருக்கே சிறப்புத் தருகின்ற வகையில் 'மடம்' என்ற பெயரால் ஒரு புதிய கட்டிடத்தைக் கட்டி முடித்தார். 1912-ம் ஆண்டு இம் மடத்தின் 'கும்பாபிஷேகத்'தையும் வெற்றிகரமாக நடத்தினார். இந் நிகழ்ச்சி ஊருக்கு மிக்க புகழைத் தேடித் தந்தது.

இத் தகைய குடும்பத்தில் பிறந்த சிறுவன் குருசாமி கிராமச் சூழ்நிலையிலேயே வளர்ந்தான். சைவக் குடும்பப் பாணியிலேயே வளர்க்கப்பட்டான். சுட்டியாகவே இருந்தான். ஊரில் இவனைச் சுமக்காத தோள்களே இல்லை. நாள் பூராவும் ஊராரின் முன் னேற்றத்திற்காக, உழைத்தவரின் மகனல்லவா! எனவே, சிறுவன் குருசாமியை மக்கள் அனைவரும் மிகச் செல்லமாகவே கொண்டாடினார்கள்

குருசாமி, சைவத் திருமேனியாகத் தலையில் குடுமி, நெற்றி யில் பட்டை, கழுத்தில் உருத்திராட்சக் கொட்டை—இப்படியாகத் தான் காட்சியளித்தான். சைவத் தமிழால் ஊட்டம் பெற்று, சைவமும் தமிழுமாக இணைந்து வளர்ந்தான். மற்றக் குழந்தை களோடும் சேர்ந்து, அன்றாடம் 'மடத்தில்' நடக்கும் தேவாரக் கோஷ்டி 'பஜனை'களிலேயும் கலந்து கொண்டான்.

### பள்ளி வாழ்க்கை

1911-ம் ஆண்டு அய்ந்து வயதில் பள்ளிக்கு அனுப்பப்பட்

டான். பள்ளியும் வெகு தூரத்தில் இல்லை. அப்போது புதிதாகக் கட்டப்பட்ட 'மடத்'தின் அருகேதான் இருந்தது. அப்போது பள்ளியின் ஆசிரியராக இருந்தவர் தாச்சியப்ப வாத்தியார் என்பவர் ஆவார். அவர் ஒரு சிறந்த தமிழ் அறிஞர். அவர் குருவிக் கரம்பையை அடுத்த கழனிக்கோட்டை கிராமத்தைச் சேர்ந்தவர்.

'மதம்', 'கடவுள்', 'சாதி' சம்பிரதாயங்கள் சம்பந்தப்பட்ட விவரங்களும், மூடப் பழக்க வழக்கங்களைச் சித்தரிக்கும் கதைகளுமே அன்றையப் பாடத் திட்டங்களாக அமைந்திருந்தன.

இவன் தச்சன் — இவன் மரவேலை செய்கிறான்.

இவன் குயவன் – இவன் பானை-சட்டி செய்கிறான்.

இவன் வண்ணான்—இவன் துணி வெளுக்கிறான்.

இவன் கொல்லன் —இவன் இரும்பு வேலை செய்கிறான்.

இவன் அம்பட்டன்—இவன் க்ஷவரம் செய்கிறான்.

இவன் வாணியன் –இவன் எண்ணெய் ஆட்டுகிறான்.

இவன் சேணியன் —இவன் துணி நெய்கிறான்.

இவன் பறையன் – இவன் தப்படிக்கிறான்.

இவன் சக்கிலியன் — இவன் செருப்புத் தைக்கிறான்.

இவர் அய்யர்!—இவர் வேதம் ஓதுகிறார்!

'இவன் தச்சன்' என்று ஆரம்பிக்கும் இடத்திலேயே அத் தொழிலைச் செய்கிற மாதிரி புத்தகத்தில் படமும் போடப்பட்டிருக்கும். அதுபோலவே, எல்லாத் தொழிலுக்கும் அதற்குரிய படங்கள் காணப்படும். இம் மாதிரியான வர்ணாசிரமக் கொள்கைகளைப் புகுத்துகின்ற பாடத் திட்டங்கள்தான் அன்று தொடக்கப்பள்ளி மாணவர்களுக்குக் கற்றுத் தரப்பட்டன. இவைகளைத்தான் அன்றைய இளஞ்சிறார்கள் படித்தார்கள்.

சிறுவன் குருசாமியின் நிலையும் அதுதான்.

வீட்டுக்குத் தெரியாமல் கூட்டாளிகளுடன் கூடிக்கொண்டு, கொய்யாக்காய், புளியங்காய், மாங்காய் பறித்துத் தின்பது குருசாமிக்கு மிகவும் சுவையான பொழுது போக்கு. மழைக் காலத்தில் ஓங்கி வளர்ந்த கொன்றை மரங்களில் மேலே ஏறி, பொன் வண்டைப் பிடித்து, அதன் கழுத்தில் நூலைக் கட்டிப் பறக்க விட்டு வேடிக்கை பார்த்து மகிழ்வது விருப்பமான விளையாட்டு.

புரட்டாசி, அய்ப்பசி மாதங்களில் 'காச்சுள்' பறவைகள்-சில இடங்களில் 'பொன்தட்டான்' என்றும் சொல்வார்கள்-மர மடர்ந்த காடுகள் அதிகமுள்ள இடங்களில் வந்து கூடுவதுண்டு. கிராம மக்கள் அந்த மாதங்களில் அவைகளை 'காச்சுள் தட்டு' என்ற-வாழை நாறினால் பின்னப்பட்டுக் கண்ணியமைத்த-ஒரு வகைத் தட்டின் உதவி கொண்டு வேட்டையாடுவர். குருவிக் கரம்பை இந்த வேட்டையாடுதலுக்குப் பெயர் பெற்றது.

சிறுவன் குருசாமியும் இதில் பங்கு பெறத் தவறமாட்டான். இத்தகைய குறும்புகளுக்காக வீட்டில் அவ்வப்போது தக்க 'வெகு மதிகள்' பெறுவதுண்டு.

சிறுவன் குருசாமிக்கு இனிமையான சாரீரம். நன்றாகப் பாடுவான். ஆகையால், தேவாரக் கோஷ்டியில் சேர்க்கப்பட்டான். அவனுடன் கூட்டாளிகளாக இருந்து பாடியவர்கள் மேற்படி கிராமத்தில் இன்றும் பலர் உள்ளனர். குருசாமியினுடைய குறும் புத் தனங்களையும், முந்திரிக் கொட்டைச் செயல்களையும் இன்றும் கிராமப் பெரியவர்கள் சொல்லிச் சொல்லி மகிழ்வர்.

குருசாமியின் தந்தையாருக்கு நாகைப்பட்டினத்தையடுத்த குறிச்சி என்கிற கிராமத்தில் சுமார் இருபது ஏக்கர் நஞ்சை நிலம் இருந்தது. அது அவரின் நெருங்கிய உறவினர் ஒருவர் மேற்பார்வை யில் இருந்து வந்தது. அவர் ஒழுங்காக வருவாயைக் கொடுப்ப தில்லை. எனவே, குருசாமியின் தந்தையார், தானே அந்த நிலத் தின் பொறுப்பை ஏற்றுச் சாகுபடி செய்வதற்கும், தனது ஒரே மகன் குருசாமி, மகள்கள் சவுந்தரவல்லி, சுப்புரத்தினம் ஆகியோரின் படிப்பு வசதி கருதியும், நாகைக்குக் குடியேறினார்.

''பொன்வண்டு, மாங்காய், கொய்யாக்காய், புளியங்காய், கூட்டாளிகளான விளையாட்டு நண்பர்கள் ஆகியோரைப் பிரிய மனமில்லாத நிலையில்தான் நாகை சென்றேன்'' என்று குருசாமி பிற்காலத்தில் கூறியுள்ளார்.

நாகைப்பட்டினம் சென்ற சில மாதங்களில் குருசாமியின் தந்தையார்—சாமிநாத முதலியார் நோய்வாய்ப்பட்டு இறந்தார். தலைவனை இழந்த, தக்க வயதுக்கு வராத சிறுவர்களைக்கொண்ட குருசாமியின் குடும்பம் துன்பக் கடலில் மூழ்கியது. நாகை

யில் நெருங்கிய உறவினர்கள் யாருமில்லை. ஆகையால் குருசாமியின் அத்தை மங்களம் அம்மையாரின் முயற்சியினால் திருவாரூர் சென்று அரண்மனையை அடுத்த தெருவில், மாதம் பத்து ரூபாய் வாடகையில் வீடொன்று பிடித்துத் தங்கினர்.

மங்களம் அம்மையார் சாமிநாத முதலியாரின் உடன் பிறந்த தங்கையாவார். அய்ம்பத்தைந்து வயது கடந்தவர்; கணவனை இழந்தவர். அவருக்குக் குழந்தைகள் எதுவுமில்லை. அம்மையார் தன் கணவரின் குடும்பச் சொத்திலிருந்து வரும் வருவாயைக் கொண்டு, அண்ணனின் குடும்பத்தைப் பாதுகாக்கும் பொறுப்பைத் தானே ஏற்றுக்கொண்டார்.

குருசாமியும் அவரது தங்கைகளும் தமது படிப்பைத் திருவாரூர் தொடக்கப் பள்ளியில் தொடர்ந்தனர். தொடக்கக் கல்விக்குப் பிறகு, குருசாமி தனது உயர்நிலைப் படிப்பைத் திருவாரூர் அரசினர் உயர்நிலைப் பள்ளியில் தொடர்ந்தார். (அந்தப் பள்ளி இன்று 'வட பாதிமங்கலம் சோமசுந்தரம் ஆண்கள் உயர்நிலைப் பள்ளி' — என்று பெயர் மாற்றம் செய்யப்பெற்றுள்ளது) பள்ளியில் வகுப்புத் தோழர்கள் அனைவரின் அன்புக்கும் பாத்திரமானார். பிறவிக் குறும்பும் தொடர்ந்து வளர்ந்தது. தொட்டில் பழக்கமல்லவா! எதிலும் முந்தி நின்றார். குருசாமி முந்தி நின்றால் அதில் நியாய மிருக்கும்; நேர்மையுமிருக்கும்.

பள்ளி விளையாட்டுகள் அனைத்திலும் கலந்து கொள்வார். பூப் பந்தாட்டம் (*Badminton*) தான் அவருக்குப் பிடித்த விளை யாட்டு. பள்ளியிலும் சரி, பள்ளிக்கு வெளியிலும் சரி, திருவாரூரில் அந்த நேரத்தில் நடந்த இளைஞர் பூப் பந்தாட்டப் போட்டிகள் அனைத்திலும் கலந்து கொண்டு குருசாமியே வெற்றி பெற்றார். அதற்கான பரிசுகளையும் தட்டிச் சென்றார்.

எட்டாம் வகுப்பில் படித்துக் கொண்டிருக்கும்போது அன்னை குப்பு அம்மாள் காலமானார். அப்போது குருசாமிக்கு வயது பதினான்கு. குருசாமிக்கும் அவரது தங்கைகளுக்கும் அத்தை மங்களம் அம்மையார் தாயும் தந்தையுமானார். குருசாமியும் பொறுப்பை உணர ஆரம்பித்தார். தங்கைகளை நல்ல முறையில் வளர்க்க வேண்டுமென்று சபதம் எடுத்துக்கொண்டு, அவர்களை

நன்றாகப் படிக்கத் தூண்டியதுடன் தானும் நன்கு படித்தார்.

சைவர்களுக்குத் தலைநகரம் போன்றது திருவாரூர். நாயன் மார்கள் பலருக்கு உறைவிடமாக இருந்தது. சுந்தரருக்காக தியாகேசப்பெருமான் 'பொன் விலைப் பாவையர்' வீட்டுக்குத் தூது போனதும் இந்த ஊரிலேதான்! எனவே, திருவாரூரில் எங்காவது ஓரிடத்தில் நாள் தவறாமல் பன்னிரு திருமுறைகள் பற்றிய 'உபன்யாசங்கள்' நடந்த வண்ணமிருக்கும். தேவாரக் கோஷ்டி களின் 'பஜனை'களும் நடக்கும். அதுபோன்றே, வைணவ அன்பர்கள் இராமாயண கதாகாலட்சேபங்களை நடத்துவர். மக்களைச் சிந்திக்க விடாமல், எதையும் 'என்ன எப்படி, ஏன்' என்று கேட்டு, காரண காரியங்களை அறிந்து கொள்ளமுடியாத மடையர்களாக ஆக்கி வைத்து,—அவர்களை அடிமைப்படுத்திச் சுரண்டி வாழ்கின்ற மக்களும், சாதி அகம்பாவம் பிடித்த 'பூதேவர்களும்' வாழ்ந்த அக்காலத் திருவாரூர் வீதிகளிலேதான் குருசாமி உலாவி வந்தார்.

அவரது சமுதாயச் சிந்தனையும் அதை யொட்டித்தான் இருந்தது. அங்கு நடக்கும் தேவாரக் கோஷ்டிகளிலும் கலந்து கொண்டு குருசாமி பலமுறை பாடியிருக்கிறார்.

எண்கண் வெங்கடாஜல முதலியார் என்பவர் அச்சமயம் திருவாரூரில் இருந்தார். கம்ப ராமாயணப் பாட்டுகள் அத்தனை யும் அவருக்கு மனப் பாடம். பல பாட்டுகளுக்கு நாலய்ந்து வித மான பொருள்களை இலக்கிய ஆதாரங்களோடு கூறக்கூடியவர். இவருடைய இராமாயண காலட்சேபங்கள் திருவாரூரில் அடிக்கடி நடக்கும். அப்படியொரு நாள் நடந்து கொண்டிருந்தபோது வைதீகத் திருமேனி குருசாமி மிகவும் சுவைத்துக் கேட்டுக் கொண் டிருந்தார். கதாகாலட்சேபத்திற்கிடையே வெங்கடாஜல முதலி யாரின் கவனம் குருசாமியினிடம் சென்றது. சைவத் திருக்கோல இளைஞரைப் பார்த்ததும் மேடையருகே வருமாறு சைகை காண் பித்தார். இவரும் சென்றார். முதலியாரும் ஆர்மோனியத்தைக் கொடுத்துச் சுதி போடச் சொன்னார். இளைஞர் குருசாமியும் பதிலேதும் சொல்லாமல் சுதி போட ஆரம்பித்தார். இதன் விளை வாக, குருசாமிக்கு எண்கண் வெங்கடாஜல முதலியாரின் அன்பும்

ஆதரவும் நட்பும் கிடைத்தது. அதன் காரணமாகப் பல்லாயிரக் கணக்கான கம்பராமாயணப் பாடல்களை முதலியாரிடத்தில் குரு சாமி இசையோடும் இலக்கண இலக்கிய முறையோடும் கற்றுத் தேர்ந்தார். அதுமட்டுமல்லாமல், கதாகாலட்சேப நேரத்தில் தாமே பக்கப் பாட்டுப் பாடுகின்ற அளவுக்கும் வளர்ச்சி பெற்றார். விளையாட்டாக ஆரம்பித்தது குருசாமியை வித்தகனாகவும் மாற் றியது. அவரது திறமையைக் கண்ட 'எண்கண்'வியந்து பாராட்டி மகிழலானார்.

விளையாட்டிலும் கேளிக்கைகளிலும் மட்டுமே முதல்வனாக நின்றவர் அல்லர் குருசாமி. பொறுப்பான காரியங்களிலும் முன் னின்று, சிறப்பாக நடத்தக்கூடிய ஆற்றலையும் இளம் வயதி லேயே பெற்றிருந்தார். இது அவருடைய இயற்கையான பிறவிக் குணம்.

பத்தாம் வகுப்பில் படித்துக்கொண்டிருந்தபோது, 1923-ம் ஆண்டில் தானே முன்னின்று மூன்று நாட்கள் தொடர்ச்சியாக ஒரு 'ஸ்ட்ரைக்' — வேலை நிறுத்தம் — நடத்தினார். கோரிக்கைகள் அத்தனையிலும் வெற்றியும் பெற்றார். அப்போது எம்.டி. துரை சாமி சாஸ்திரி என்பவர் தலைமை ஆசிரியராக இருந்தார். குருசாமி வகுப்பில் ஆசிரியர்களிடம் தனது சொந்தக் கருத்தை வலியுறுத்திக் கூறக் கூடியவராகவே இருந்தார். இவர் திருவாரூர்ப் பள்ளி மாணவராக விளங்கியபோது இவருடன் 'மலேயா தமிழ்முரசு' ஆசிரியர் கோ. சாரங்கபாணி, அமிர்த கணேச முதலியார், டி. அமிர்தலிங்கம் முதலியோர் உடன்படித்தனர். குருசாமியைப் பற்றி டி. அமிர்தலிங்கம் கூறுகிறார்:

''குருசாமி உயர்நிலைப் பள்ளியிலேயே புரட்சிகரமான காரியங் களில் ஈடுபட்டார். அது பிறர் தூண்டுதலினால் அல்ல; இயற்கை யிலேயே ஆய்ந்தறியும் தன்மை கொண்டவர். நான் அவருடன் ஆரம்பப்பள்ளி முதல் வாழ்நாட்களில் நெருங்கிய தொடர்பும், பழக்கமும் கொண்டிருந்தேன். நாங்கள் ஒரே ஆசிரியரிடம் 'டியுஷன்' படித்தவர்கள்; படிப்பிலும் விளையாட்டுகளிலும் சிறு பிள்ளைத் துடுக்குத்தனங்களிலும் ஈடுபடும்போதெல்லாம் அவ ருக்கு யூகங்களும் ஆராய்ச்சிகளும் வரும். தக்க பதில் சொல்லும்

திறனும் அவருக்கு இயற்கையிலேயே அமைந்திருந்தது.

இவரது திறமையை நாங்கள் அப்போது உணரவில்லை: அதற்கு மாறாக அவரைக் 'குயுத்தி—குருசாமி' என்று பெயரிட்டு அழைத்தோம். இப்பெயர் வகுப்பு ஆசிரியரும், இரட்டை மதகடி அருணாசல முதலியாரும், மற்றவர்களும் குருசாமியின் திறமையைத் தவறாகப் புரிந்து கொண்டு வைத்த பெயர். பிற்காலத்தில்தான் 'குயுக்தி'என்று மதிப்பிட்டது தவறு என்றும் அது அவரின் ஆய்ந்தறியும் இயற்கைத் தன்மையால் ஏற்பட்ட அறிவு என்றும் உணர்ந்தோம்''.

பள்ளி இறுதித் தேர்வில் தோல்வி அடைந்தார் குருசாமி. மறுமுறையும் அதே பள்ளியில் அதே வகுப்பில் படிக்க அவரது சுயமரியாதை உள்ளம் இடம் தரவில்லை. எப்படியும் வேறு ஊர் சென்றுதான் படிக்க வேண்டுமென்று பிடிவாதமாக இருந்தார். அத்தையிடத்தில் திருச்சிக்குச் செல்லலாம் என்று வேண்டினார். அண்ணன் குழந்தைகள் மீது உயிரையே வைத்திருந்த அத்தையும் அன்பு மருமகன் சொல்வதைத் தட்டமுடியாமல் திருச்சி செல்வதற்கு ஒப்புக் கொண்டார். திருச்சி மலைக்கோட்டையை அடுத்த வன்னியர் தெருவிலிருந்த ஒரு சிறு வாடகை வீட்டிற்கு குருசாமியின் குடும்பத்தினர் குடியேறினர்.

இந்நேரத்தில், நாகைப்பட்டினத்தை யடுத்த குறிச்சி கிராமத்திலிருந்த உறவினர், குருசாமிக்குச் சேர வேண்டிய நஞ்சை நிலங்களைத் தனக்குச் சொந்தமாக்கிக் கொள்கின்ற வழிமுறைகளைத் தேடிக் கொண்டார். நிலத்தின் பேரில் அதிகக் கடனை வாங்கி, அந்தத் தொகையில் குருசாமி குடும்பத்தாருக்கு ஏராளமாகச் செலவு செய்ததாகக் கணக்குக் காட்டிவிட்டார். இதையறிந்த உறவினர் பலர் குருசாமியிடம் கோர்ட்டில் வழக்குத் தொடரும் படித் தூண்டினர். வழக்குத் தொடர்ந்திருந்தால் உறுதியாகக் குருசாமிக்குத் தான் வெற்றி கிட்டியிருக்கும். ஆனால், குருசாமியோ, வழக்காட மறுத்துவிட்டார். வழக்காடினால் தனது படிப்புக் கெட்டுவிடும் என்றும், முடிந்தால் தானே சொத்துக்களைத் தேடிக் கொள்வேன் என்றும் கூறிவிட்டார்.

குருசாமிக்கென சில கொள்கைகள் உண்டு. மேலும் தன்

முயற்சியில் தளராத நம்பிக்கையும் அவருக்கு இருந்தது.

தனது அத்தையின் குறைந்த வருமானத்தில்,— மிக்க பணத் தொல்லைகளுக்கிடையேதான்— தன்னிரு தங்கைகளையும் படிக்க வைத்துக் கொண்டு, தன் படிப்பையும் தொடர்ந்தார் குருசாமி. பணம் படைத்த செல்வந்தரான உறவினர்கள் பலர் இருந்தும், எவரிடத்திலும், எந்த உதவியும், எந்த நேரத்திலும் அவர் நாடிய தில்லை. இதில் அவர் இறுதிவரை மிக்க உறுதியாகவே இருந்தார்.

திருவாரூரில் இருந்த போது அங்குள்ள பெரும் பணக்காரர் ஒருவர், வீட்டில் வாரிசாக ஆண் குழந்தை யில்லை யென்ற காரணத்திற்காக வெள்ளிக்கிழமைகள் தோறும் பூஜை செய்து, குழந்தைகளுக்கு இலவச உணவு கொடுத்து வந்தார். குருசாமியின் தங்கையர் இருவரும் அந்தப் பெருந் தனக்காரரின் வலுக் கட்டாயத் தின் பேரில் அவ்வீட்டுக்குச் சென்று சாப்பிட்டு வந்தனர். இதை யறிந்த குருசாமி மிக்க ஆத்திரமடைந்தார். அதனால், அன்று முழுவதும் தங்கைகள் இருவரையும் வீட்டிற்குள் நுழைய விடாமல் தண்டித்தார். இத்தனைக்கும் அந்தப் பெருந் தனக்காரர் நெருங் கிய உறவினராகவே இருந்தார். குருசாமியின் சுயமரியாதைஉள்ளமே அவ்விதம் கடுமையாகத் தங்கைகளைத் தண்டிக்கத் தூண்டியது.

திருச்சிக்குச் சென்ற பின், முன்பு தவறிவிட்ட பள்ளி இறுதி வகுப்பில் மீண்டும் சேர்ந்து படித்துத் தேர்ச்சியும் பெற்றார்.

## கல்லூரி வாழ்க்கை

1924-ம் ஆண்டு திருச்சி தேசியக் கல்லூரியில் (*National College*) இண்டர்மீடியட் வகுப்பில் சேர்ந்தார். கல்லூரி மாணவ ராகி, ஆங்கில நாகரிகப் படிப்பு படித்தபோதிலும், குருசாமி தமது சைவக் கோலத்தை மாற்றிக் கொள்ளவில்லை. தலையில் குடுமி யுடனும், நெற்றியில் பட்டையுடனும் கழுத்தில் உருத்திராட்சக் கொட்டையுடனும், கையில் தேவார- திருவாசகச் சுவடிகளுடனும் காட்சியளித்தார்.

ஆம். குருசாமி அப்போதும் பரம பக்தர் தான்!

கல்லூரி வாழ்க்கை குருசாமிக்குப் புதிய சிந்தனையைத் தூண்டியது. தன்னைப் பற்றியும், சைவ சமயத்தைப் பற்றியும்

எண்ணிக் கொண்டிருந்தவர் தன்னைச் சுற்றிலுமுள்ள சமுதாயத்தைப் பற்றியும், நாட்டின் நடப்பு பற்றியும் சிந்திக்கத் தொடங்கினார்.

விவேகானந்தர், ராம் மோகன்ராய் போன்ற 'இந்து' மதச் சீர்திருத்தக்காரர்களின் வாழ்க்கை வரலாறுகளையும், கட்டுரைகளையும் படிக்கத் தொடங்கினார். இதுவரை புராணக் கதைகளிலும், இதிகாசங்களிலும், நாயன்மார் வரலாறுகளிலும் மூழ்கிக் கிடந்த குருசாமிக்கு இப் புதிய வரலாறுகளும் சிந்தனையைத் தூண்டும் கட்டுரைகளும் புத்தறிவை ஊட்டின. இதனால் எழுச்சி பெற்ற குருசாமி, மேலும் மேலும் புதிய கருத்துகளைத் தெரிந்து கொள்ள, புதிய சிந்தனையாளர்களின் வரலாறுகளையும், நூல்களையும் தேடிப் பிடித்துப் படிக்கலானார். உண்மையைச் சொல்லப் போனால், குருசாமிக்கு அறிவுப் பசியைத் தூண்டி விட்டது திருச்சி தேசியக் கல்லூரி வாழ்க்கைதான்.

ஆங்கிலேய ஏகாதிபத்தியத்தை எதிர்த்து, இந்திய நாடு முழுச் சுதந்திரம் அடைவதற்குப் பாடுபட்ட தேசிய விடுதலை இயக்கமாகிய காங்கிரசு இயக்கம் வீர நடை போட்ட காலமது; வைக்கம் போராட்டம் நடந்த நேரமது.

எதிலும் முன் நிற்கின்ற ஆர்வமும் துடிதுடிப்பும் நிறைந்த குருசாமி 'மாணவர் தேசிய இயக்க'த்தில் சேர்ந்தார். அதுமுதல் கதராடை அணியத் தொடங்கினார். 'மணி பர்ஸ்' உட்பட எல்லாம் கதரிலேயே வைத்துக் கொண்டார். சைவத் திருமேனி குருசாமி — காந்தியவாதியானார்.

கல்லூரி நாட்களிலும், உயர்நிலைப் பள்ளியைப் போல் பூப் பந்தாட்டத்தில் வெற்றி வீரராகவே திகழ்ந்தார். திருச்சி மாவட்டப் பூப் பந்தாட்ட வீரர் (*District Champion*) என்ற பட்டத்தையும் பல தங்கப் பதக்கங்களையும் தட்டிக் கொண்டு வந்தார். ''கண்ணாடி'' நாராயணசாமி என்ற மாணவரும் எஸ்.கோதண்டராமன் என்ற மாணவரும் 'பார்ட்னர்' ஆக இருந்து விளையாடினார்கள். அதேசமயத்தில் செயின்ட் ஜோசப் கல்லூரியில் படித்து வந்த பட்டுக்கோட்டை விசுவநாதத்துடனும் சேர்ந்து பல பூப் பந்தாட்ட விளையாட்டுகளிலும் கலந்து

கொண்டார்.

கல்லூரி விழாக்களில் 'மிமிக்ரி' (பலகுரல்) செய்வதிலும் மன்னனாக இருந்தார். கிண்டலும், கேலியும் செய்து மற்ற மாணவர்களை மகிழ்ச்சியூட்டுவது இளங் குத்தூசியாரின் சுவையான பொழுது போக்கு.

தங்கைகள் இருவருக்கும் கல்லூரியில் தாம் படித்துக் கொண்டிருக்கும் போதே திருமணத்தை நடத்திவைத்தார். மூத்த தங்கை சவுந்தரவல்லியைத் தன் உடன்பயின்ற உறவினர் ஒருவருக்குத் திருமணம் செய்து கொடுத்தார். தன் அன்னையார் உயிருடன் இருக்கும்போது கேட்டுக் கொண்டதற்கிணங்க, சிறிய தங்கை சுப்புரத்தினத்தைத் தன்னுடைய மாமாவுக்கே திருமணம் செய்து கொடுத்து, அன்னையாரின் ஆசையைப் பூர்த்தி செய்தார்.

குருசாமி தேசிய இயக்கத்தில் தீவிரமாக ஈடுபட ஆரம்பித்து விட்டார். காந்தியார், திரு வி. க, அன்னிபெசன்ட், ஈ.வெ.ரா. போன்றோர்களுடைய கட்டுரைகளையும், பேச்சுகளையும் ஊன்றிக் கவனித்தார். திரு வி.க வின் தமிழ்நடை அவரை மிகவும் கவர்ந்தது. அது போன்றே, மேட்டூர் அணை கட்டுவதற்குத் தக்க இடத்தைக் கண்டுபிடித்துக் கொடுத்த பொறியியல் அறிஞர் பா. வே. மாணிக்க நாயகரின் பேச்சும், எழுத்தும் குருசாமியை அதிகம் ஈர்த்தன.

1925-ல் தமிழ் நாட்டில் சுற்றுப்பயணம் செய்து கொண்டிருந்த காந்தியாரைத் தேசியக் கல்லூரிக்கு அழைத்துச் சிறப்பிக்கவும், பண முடிப்பு ஒன்று தரவும் குருசாமி ஆவல் கொண்டார். அதற்கான ஏற்பாடுகளைச் செய்தார். பணமும் சேர்க்கப்பட்டது; காந்தியாரும் அழைத்து வரப்பட்டார்.

காந்தியாருக்குக் கல்லூரி நிர்வாகத்தினர் வரவேற்புரையொன்று படித்து அளித்தனர். கல்லூரி நிர்வாகம் பார்ப்பனர்களால் நடத்தப்பட்டதால் வரவேற்புரை சமஸ்கிருதத்தில் படிக்கப்பட்டது. வரவேற்புரைக்குப் பதிலளித்துப் பேசிய காந்தியார் தனக்குச் சமஸ்கிருதத்தில் வரவேற்புரை படிக்கப்பட்டதை வன்மையாகக் கண்டித்தார். ''எனக்குப் படித்த வரவேற்புரையை உங்களில் எத்தனை பேர் புரிந்து கொண்டீர்கள்? கைதூக்குங்கள்!

பார்க்கலாம்!'' என்றார். ஒரேயொருவர் மட்டும் கைதூக்கினார். அவரும் அந்த வரவேற்புரையை எழுதிக் கொடுத்த சமஸ்கிருதப் பண்டிதரே!

இதைக் கண்ட காந்தியார், ''உங்களுக்கு வெட்கமாக இல்லையா? உங்கள் தாய்மொழியாகிய தமிழில் ஏன் வர வேற்புரை அளித்திருக்கக் கூடாது?'' என்று கேட்டவுடனேயே, அருகில் இருந்த குருசாமி 'ஹியர். ஹியர்' (கேளுங்கள்... கேளுங்கள்) என்று உரக்கக் கூவினார். காந்தியார் குருசாமியை முறைத்துப் பார்த்து, ''இது அதைவிட மோசமானது'' என்றார்.

இந்த நிகழ்ச்சி, குருசாமியின் 'வெள்ளையுள்ளத் துணிச்சலுக் கும் மொழி உணர்வுக்கும்' ஓர் எடுத்துக் காட்டாக உள்ளது.

திருவாடுதுறை ஆதீனத்தின் மடாதிபதியாக இருந்தவர் குருசாமியின் மிக நெருங்கிய உறவினர். அவர் தனக்கு அடுத்த வாரிசாக குருசாமியை-அவர் கல்லூரியில் படித்துக்கொண்டிருக்கும் காலத்திலேயே பட்டம் கட்டிவிட வேண்டுமென்று மிக்க ஆசை கொண்டார். அந்த எண்ணத்தை அத்தை மங்களம் அம்மை யாருக்குத் தெரியப்படுத்தினார். அத்தையோ மருமகனை நன்கு படிக்க வைத்து, பெரிய உத்தியோகத்தில் அமர்த்தி, செல்வந்தர் வீட்டு மாப்பிள்ளையாக்கிப் பார்க்க வேண்டுமென்பதில் நீங்காத ஆர்வம் கொண்டிருந்தார். எனவே, இந்த ஏற்பாட்டை மறுத்து விட்டார். தனது மருமகனையும் இந்த ஏற்பாட்டிற்கு ஒப்புக் கொள்ள வேண்டாமென்று கண்டிப்பாகக் கூறிவிட்டார். ஒரு வேளை, அத்தையினுடைய முட்டுக்கட்டை இல்லாதிருக்குமானால் குருசாமி மடாதிபதியாக மாறியிருக்கக் கூடும்!

இந்தச் சமயத்தில் தமிழ் நாட்டுக் காங்கிரசு வரலாற்றில் ஒரு திருப்பு முனை ஏற்பட்டது. காங்கிரசு இயக்கத்திற்குள் பார்ப்பனர் — பார்ப்பனரல்லாதார் என்ற பிரிவு தலைவிரித் தாடியது. காங்கிரசிலிருந்த பார்ப்பனத் தலைவர்கள் சாதிவெறி யர்களாகவே இருந்தனர். எந்த இடத்திலும் பார்ப்பனரல்லாத வர்களை இரண்டாம் தரமாக்கியே வந்தனர். இதை அவ்வப் போது ஈ. வெ. ரா. கடுமையாகக் கண்டித்து வந்தார்.

சேரன்மாதேவியில் வ.வெ. சுப்பிரமணிய அய்யர் 'குருகுலம்'

என்ற அமைப்பை நடத்தி வந்தார். அதற்குப் பண உதவி செய்த வர்களில் பெரும்பாலோர் பார்ப்பனரல்லாதார் ஆவர். காங்கிரசி லிருந்தும் பத்தாயிரம் ரூபாய் கொடுக்கப்பட்டது. அன்றையத் தமிழ் நாடு காங்கிரசு கமிட்டியின் தலைவர் ஈ. வெ. ராமசாமி, டாக்டர் வரதராஜலு நாயுடு, திரு வி க. மற்றும் பலர் குருகுலத் தின் வளர்ச்சிக்காக உழைத்தனர். ஆனால், குருகுலத்தில் பார்ப் பனப் பிள்ளைகளுக்குத் தனி உணவு, தனி இடம், தனிப் பிரார்த் தனை என்றும், பார்ப்பனரல்லாதார் பிள்ளைகளுக்கு வேறு உணவு, வேறு வேறு இடம், வேறு வேறு பிரார்த்தனை என்றும் பாகுபாடு செய்து வைத்தனர். இதன் மூலம் வ.வே சு. அய்யரின் குருகுலத்தில் சாதிப் பிரிவுக்கு ஆக்கம் அளித்தனர்.

''இப் பிரிவினை தவறு; குருகுல நோக்கத்திற்கு மாறுபட்டது; தேசிய ஒற்றுமைக்கு ஏற்றதன்று. ஒற்றுமை யுணர்வு அளிக்கப்பட வேண்டும்'' என்று ஈ.வெ.ரா. கூறினார். எஸ். இராமநாதன் முதலானோர் இதை ஆதரித்தனர். வ வே. சு அய்யர் இக்கொள் கையை ஒப்புக் கொள்ளவில்லை. இதன் விளைவாக, 1925 நவம்பர் மாதத்தில் காஞ்சிபுரத்தில் நடைபெற்ற காங்கிரசு மாநாட்டில் பெரும் பிளவு ஏற்பட்டது.

இதையொட்டி பெரியார் ஈ.வெ ரா., எஸ். இராமநாதன் ஆகிய இருவரும் மற்றும் பலருடன் காங்கிரசை விட்டு வெளியேறினர். தமிழர்களின் வளர்ச்சிக்காகப் போராடுவது, சமுதாயச் சீர்திருத் தம் செய்வது, சாதி-மத வேறுபாட்டை ஒழிப்பது, •மூடப் பழக்க வழக்கங்களை அகற்றுவது போன்ற பல கொள்கைகளை உள் ளடக்கிப் பிரச்சாரம் செய்வதற்காக 'சுயமரியாதைச் சங்க'த்தைத் தோற்றுவித்தனர் பெரியார் ஈ.வெ.ரா.வும், எஸ். இராம நாதனும்.

சுயமரியாதைச் சங்கத்தைத் தோற்றுவிக்கும் நிகழ்ச்சி சென்னை இராமநாதனின் இல்லத்தில் நடைபெற்றது. பெரியார் ஈ.வெ.ரா. தம்முடைய கொள்கைகளைப் பரப்புவதற்காக –'குடி அரசு' பத்திரிகையை மீண்டும் தொடங்கினார். குடி அரசில் ஈ.வெ.ரா.,கைவல்யம்,எஸ்.இராமநாதன் மற்றும் பலரும் மதங்கள், மூடப்பழக்க வழக்கங்கள், சாதிப் பாகுபாடுகள் முதலியவைகளைக்

கண்டித்தும், இராமாயண, பாரத இதிகாசங்களை விமர்சித்தும் எழுதினர்.

தமிழகத்து அரசியல், சமுதாய நிகழ்ச்சிகளை ஊன்றிக் கவனித்து வந்த குருசாமி, ஈ.வெ.ரா.வின் இயக்கத்தில் ஈடுபாடு கொண்டு, இயக்கத்தின் நடை முறைகளையும் ஆர்வத்துடன் கவனித்தார்.

'குடி அரசு' பத்திரிகையின் நிரந்தர வாசகரானார். குருசாமியின் வைதீகக் காந்திய உள்ளம்—பகுத்தறிவு உள்ளமாக மாறத் தொடங்கியது.

இதன் விளைவாக, குருசாமியின் குடுமியும், நெற்றிப் பட்டையும், கழுத்து உருத்திராட்சக் கொட்டையும் மறைந்தன. குருசாமி முற்றிலும் புதிய மனிதராக வடிவெடுத்தார்.

பூவாளூர் பொன்னம்பலனார் நட்பும் இந்தக் காலத்திலேதான் குருசாமிக்குக் கிடைத்தது. பொன்னம்பலனார் முன்பே சுயமரியாதை இயக்கத்தில் ஈடுபாடுடையவர். இவரின் நட்பு, குருசாமியை சுயமரியாதை இயக்கத்தின் அருகே நெருக்கமாகத் தள்ளுவதற்கு உறுதுணையாக அமைந்தது.

சுயமரியாதை இயக்கம் அன்றைய சூழ்நிலைக்கு முற்றிலும் புரட்சிகரமான இயக்கமாகவே விளங்கியது. இந்த இயக்கம் இளைஞர்களை—குறிப்பாக முற்போக்கு இளைஞர்களை-தன் வசம் ஈர்த்துக்கொண்டே வந்தது.

இந்தச் சூழ்நிலையில் குருசாமி தான் காந்தியவாதியாக இருப்பதா? அல்லது, சுயமரியாதை இயக்கத்தில் சேர்ந்து பகுத்தறிவுவாதியாக ஆவதா? என்ற கேள்வியைத் தனக்குத் தானே கேட்டுக் கொண்டார்.

தான் பிறந்த கிராமச் சூழ்நிலையை எண்ணினார். நாகை, திருவாரூர், திருச்சி ஆகிய நகரச் சூழ்நிலையை எண்ணினார். தாய் தந்தையற்ற தனது குடும்பச் சூழ்நிலையை எண்ணினார். தன் சிந்தனையையும் ஓடவிட்டார்.

அடிக்கொரு கோயிலும், வாரத்திற்கு ஒரு திருவிழாவும் இருக்கின்ற—நடக்கின்ற ஊர்கள்! பெரிய பெரிய மடாதிபதிகள்! சங்கராச்சாரிகள்! ஆயிரம், இரண்டாயிரம் ஏக்கர் நன்செய் நிலங்

களுக்கு உரியவர்களாகவுள்ள நிலப் பிரபுக்கள்!—நாகூர் சந்தூரி விழா!—வேளாங்கண்ணி மாதா விழா!—திருவாரூரில் தேரிழுப்பு! —கும்பகோணத்தில் மகாமகம்! திருவண்ணாமலையில் தீபம்!— திருப்பதியில் உண்டியல்! ஸ்ரீரங்கம்-திருவானைக்காவலில் முத்துப் பல்லக்கு! திருச்செந்தூரில் முருகன்!—சிக்கலில் சிங்காரவேலன்!— இவை அனைத்தும் குருசாமியின் நினைவில் ஆட்டம் போட்டன.

தடுக்கி விழுந்தால் கடவுள்மீதுதான் விழவேண்டும். குடி தண்ணீர் கிடைக்காத பல ஊர்கள் உண்டு. ஆனால், கோயில் இல்லாத ஊர் ஒன்று கூட இல்லை. தெருவுக்கு ஒரு பிள்ளையார் கோவில். சாணியைப் பிடித்து சாமியென்கிறான் ஒருவன். ஆமாம் என்று ஆமோதிக்கிறான் மற்றொருவன். கல்லைச் செதுக்கி வைத்துக் 'கடவுள்' என்கிறான் 'கடவுளின்' தரகன். அதன் காலில் விழுகிறான் பக்தன்.

மூலஸ்தானத்தைக் கட்டியவன், அதே மூலஸ்தானத்தை எட்டிக் கூடப் பார்க்க முடியாத பரிதாப நிலை.

கிணற்றை வெட்டியவன், அந்தக் கிணற்று நீரைத் தான் எடுத்து அருந்த முடியாத அவலநிலை.

மாட மாளிகைகளைக் கட்டியவன், ஒண்டுவதற்குக் கூடக் குடிசையில்லாத கேவலநிலை.

ஆடைகளை நெய்து தந்தவன், அரை நிர்வாணப் பக்கிரிக் கோலக் காட்சி.

ஆண்டு முழுதும் உழைத்து, உழைத்து அறுவடை செய்து தந்தவன், அரை வயிற்றுக் கஞ்சிகூட இல்லாது அவதி.

—இவை போன்ற பல காட்சிகள் குருசாமியின் கண்முன் நின்றன.

மேல் சாதிக்காரர்களும், நிலப் பிரபுக்களும், வட்டிக் கடைக் காரர்களும் ஏழைகளை வாட்டி வதைத்தனர். மக்கள் அடிமை வாழ்வு வாழ்ந்தனர்.

பள்ளி ஆசிரியர்கள், ஊர்க் கணக்குப் பிள்ளை என்பவர்கள், மணியக்காரர்கள், புரோகிதர்கள், சோதிடர்கள்—ஆகியவர்கள் பார்ப்பனர்களாகவும் நிலப்பிரபுக்களாகவும்-அவர்களுக்குத் தங்கள் அறிவை அடகு வைத்தவர்களாகவுமே இருந்தனர். மக்கள் சாதி

வெறியிலும், குடிவெறியிலும், கேளிக்கைகளிலும் ஈடுபட்டுக் கொண்டும், நடப்பதெல்லாம் ''அவன் செயல்'' – ''அவன் அன்றி ஓரணுவும் அசையாது'' - ''எல்லாம் விதிப்படிதான் நடக்கும்'' – என்று எண்ணுகின்ற அழுகல் மனப்பான்மை கொண் டவர்களாகவுமே இருந்தனர். எங்கு நோக்கினும் தாழ்வு மனப் பான்மையும், தன்னம்பிக்கையற்ற போக்குந்தான் இருந்தது. அன்பு எந்த இடத்திலும் ஆட்சி செலுத்தவில்லை. அகங்காரம் ஆட்சி செலுத்தியது. மேலிடத்தாரின் ஊதாரித்தனம் ஊடுருவிப் பாயாத கிராமங்களே இல்லை.

—இந்தக் காட்சிகளும் அவரது நினைவுக்கு வந்தன.

குருசாமியின் உள்ளம் குமுறியது. நாட்டுக்குச் சுதந்திரம் கிடைக்கச் செய்வது முக்கியமா? அல்லது சுயமரியாதை உணர்ச்சி யுடையவர்களாக—பகுத்தறிவாளர்களாக மக்களை ஆக்குவது முக்கியமா?

எது முந்தி? எது பிந்தி? - என்ற கேள்விகள் கிளம்பின.

மக்கள் பகுத்தறிவாளர்களானால் - சுய சிந்தனையாளர் களானால் - அடிமை விலங்கைத் தாங்களே உடைத்துக் கொள் வார்கள் என்பதே குருசாமியின் சிந்தனைப் போக்கின் உறுதியான முடிவு.

குருசாமி சுயமரியாதை இயக்கத்தில் சேருவது என்று முடிவு செய்தார். சாக்ரடீஸ், எபிக்யூரஸ், லூக்ரிடெஸ், லூசிப்பஸ், டெமோக்ரிட்டஸ், ஜீன் மெஸ்லியா, இங்கர்சால், பிராட்லா, பெட்ரண்ட் ரஸ்ஸல், எச்.ஜி.வெல்ஸ், ஷெல்லி போன்ற மேலை நாட்டு நாத்திகவாதிகளின் — பொருள்முதல்வாதிகளின் நூல் களில் மூழ்கலானார்.

## நாத்திக ஆவேசம்

1928-ம் ஆண்டில் கல்லூரி விடுமுறையின்போது குருசாமி திருக்கண்ணபுரத்திலுள்ள தனது சிறிய பாட்டியார் வீட்டுக்குச் சென்றிருந்தார்: அப்போதுதான், தொடக்கத்தில் குறிப்பிட்ட காவல் தெய்வமாகிய 'முனீசுவரன்' சிலை உடைப்பு வைபவம்

நடைபெற்றது. இந்தச் சம்பவத்திற்குப் பிறகு ஒரு நாள் குருசாமியும், அவரது நண்பர் சவுரிராஜனும் வேறு சிலரும் சேர்ந்து 'சாவு' வீட்டிற்குத் துக்கம் விசாரிக்கச் சென்றிருந்தனர்.

திரும்பி வந்த பிறகு குளிக்காமல் திண்ணையில் உட்கார்ந்த படியே, பேசிக் கொண்டிருந்தனர். சாவுத் தீட்டைப் பொருட் படுத்தவில்லையே என்று ஆத்திரப்பட்ட அவரது சிறிய பாட்டி யார் - ஒரு சட்டி நிறைய மாட்டுச் சாணத்தைக் கரைத்து வந்து குருசாமி மீதும் ஏனையோர் மீதும் தெளித்து, மீதம் இருந்த சாணத்தை குருசாமி மீது அப்படியே கொட்டிவிட்டார். இத்தகைய கொடுமைகள், பழிப்புகள் ஒன்றல்ல இரண்டல்ல, பலப் பல குருசாமிக்கு.

இந்த ஊரில் வழக்கம்போல் அந்த ஆண்டும் பெருமாள் கோவிலில் திருவிழா நடைபெற்றது. சாமி ஊர்வலமாக வந்தது. அந்த ஊர்வலத்தில் சாமியின் முன் தீச்சட்டி (கப்பரை) ஏந்தியபடி பூசாரி நடந்து வந்தார். குருசாமியும், சவுரியும் பக்தர்களைப் போல் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர். தமது அருகில் தீச் சட்டியுடன் பூசாரி வந்ததும் அந்தத் தீச் சட்டியில், குருசாமி மறைவாக ஒளித்து வைத்திருந்த மண்ணெண்ணெய்க் குவளையைக் கவிழ்த்துவிட்டுக் கூட்டத்தில் மறைந்துவிட்டார். தீச் சட்டி குப்பென்று தீப் பிடித்து எரிந்தது. அஞ்சிய பூசாரி தீச் சட்டி யைக் கீழே போட்டுவிட்டார். சட்டி தூள் தூளாகச் சிதறியது.

இன்னொரு முறை, குருசாமி அவரது நண்பர் சவுரியுடன் இவ்வூரிலுள்ள சவுரிராஜப் பெருமாள் கோயிலுக்குச் சென்று, அங்குள்ள மடப்பள்ளிக் கிணற்றில் குளித்தார். சூத்திரர்கள் குளிப்பதைக் கண்டு ஆத்திரப்பட்ட அர்ச்சகர் அலறிப் புடைத்துக் கொண்டு, சவுரியின் தந்தையாகிய இராசகோபால் முதலியாரிடம் முறையிட்டார். இந்த ''திருவாரூர் ஒல்லிப் பயல்'' இருக்கிற வரைக்கும் ஊரே உருப்படாது'' என்று கூவியபடி, நடந்ததை விவரமாகச் சொன்னார். கிணறு தீட்டுப்பட்டு விட்டதே என்று சொல்லி அர்ச்சகர் வருத்தப்பட்டார். தீட்டுக் கழிப்பதற்கு முதலியாரிடம் பணம் கேட்டார். முதலியாரோ 'தீட்டைக் கழி; பிறகு பணம் தருகிறேன்' என்றார். அர்ச்சகர் தீட்டைக் கழித்

தாரோ இல்லையோ, முதலியார் பணம் மட்டும் கொடுக்க வில்லை.

பின்னர் ஒரு முறை, திருச்சி மாவட்டம் கடம்பங்குறிச்சி என்ற கிராமத்திலுள்ள தனது சிறிய தங்கை சுப்புரத்தினம் வீட்டிற்கு குருசாமி சென்றிருந்தார், அவ்வூர் அக்கிரகாரத்திலுள்ள குளத்தில் பார்ப்பனர்களுக்கென்று ஒதுக்கியிருந்த துறையில் குருசாமி குளித்தார். பார்ப்பனர்கள் குளிக்கும் துறை என்பதைத் தெரிந்தே அந்த இடத்தில் குளித்தார். குருசாமியின் குடும்ப வைதீக ஆச்சாரம், பார்ப்பனர்களையும் மிஞ்சக் கூடிய அளவுக்கு உள்ளது தான்! பெரும்பாலும் தொண்டை மண்டல முதலியார்களை "ஒன்றரைப் பார்ப்பனர்கள்" என்று குறிப்பிடுவதுண்டு! அதாவது பார்ப்பனர்களைவிட வைதீக சாதி மத சம்பிரதாய ஆச்சாரத்தில் அரை மடங்கு உயர்ந்தவர்கள் என்பதே இதன் பொருள். அப்படிப் பட்ட "ஒன்றரைப் பார்ப்பனர்" சாதியில் வந்தவரான குருசாமி யையே குளிக்காமல் தடுத்தனர் பார்ப்பனர். மற்றவரின் நிலையோ......?

ஆரம்பமாகியது ரகளை.

"இங்கே தான் குளிப்பேன், இங்கே குளிக்க எல்லோருக்கும் உரிமையுண்டு" என்றார் குருசாமி. இதனை அறிந்த அவரது தங்கையின் மாமனார் குளத்தடி சென்று, மிக்க சமாதானத்துக் கிடையே குருசாமியை வீட்டுக்குக் கொண்டு வந்து சேர்த்தார். அன்றிலிருந்து படிப்படியாக அந்தக் குளத்தின் சட்ட திட்டங்கள் குலைந்தன.

இன்று இச்செய்தி வேடிக்கையாகத் தெரியலாம். ஆனால் அந்தக் காலத்தில் 'மேல்சாதி' அகம்பாவம் எந்த அளவுக்குத் தலை தூக்கி நின்றது என்பதை இச் சம்பவம் விளக்கும்.

அந்த நிலையை அடக்கி ஒடுக்கியவர்கள் சுயமரியாதை இயக் கத்தவர்தான். அதில் குருசாமிக்கு மகத்தான பங்குண்டு.

குருசாமியின் இளம் உள்ளம் புரட்சி உள்ளம்; எதற்கும் அஞ்சாத உள்ளம்; பழமையையும் மூடத்தனங்களையும் சாடி அழிப்பதிலே ஆவேசம் காட்டிய உள்ளம்.

சுயமரியாதைக் கொள்கைகளிலே மனத்தைச் செலுத்திவிட்ட

குருசாமி, பெரியாரைச் சந்திப்பதற்கு முன்பாகவே—கல்லூரி மாணவராக விளங்கிய காலத்திலேயே—இயக்கப் பிரச்சாரத்தில் ஈடுபடத் தொடங்கிவிட்டார்.

1928-ல் கல்லூரி விடுமுறை நாட்களில் திருக்கண்ணபுரம் சென்றிருந்தார், குருசாமி. அப்போது அச்சிற்றூரில் ஒரு சுயமரியாதைப் பொதுக்கூட்டத்தைக் கூட்டி, அதில் தன் மாமா இராசகோபால் அவர்களைப் பேச வைத்ததோடு தானும் மிக்க ஆர்வத்துடன் பேசினார்.

இராசகோபால் அவர்களின் மகன் நாராயணசாமி—பிற்காலத்தில் நெடுஞ்செழியன்—உட்பட, ஊர்ச் சிறுவர்களை ஊர்வலமாக அழைத்துக் கொண்டு, பகுத்தறிவுப் பிரச்சார ஒலி முழக்கம் செய்தார். அவர் எடுத்து மொழிவார். சிறுவர்களெல்லாம் தொடுத்து முழங்குவர்.

அவர் 'வைக்கம் வீரருக்கு' என்பார்— கூட்டம் 'ஜே'! என்று ஒலிக்கும். அப்பொழுது 'வாழ்க' என்ற சொல் பழக்கத்திற்கு வரவில்லை. குருசாமி 'சுயமரியாதை இயக்கத்திற்கு' என்பார். கூட்டத்தினர் 'ஜே!' என்பர். அவர் 'பார்ப்பனர் ஆதிக்கம்!' என்பார். கூட்டத்தினர் 'ஒழிக!' என்பர். அந்தக் கூட்டம்கூட ஊராரின் எதிர்ப்புக்கிடையேதான் நடந்தது.

இச் சமயத்தில் மேற்கண்ணமங்கலம் என்னும் ஊரில் ஓர் உறவினர் வீட்டில் திருமணம் ஒன்று நடைபெற்றது. திருமணத்திற்கு குருசாமி சென்றிருந்தார். திருமணம் வைதீக முறையில் நடைபெற்றது. திருமணம் முடிந்து உற்றார் உறவினர் எல்லோரும் பந்தலில் கூடியிருக்கும்போது, உணர்ச்சியால் உந்தப் பெற்ற குருசாமி திடீரென்று எழுந்து நின்று ஆவேசத்துடன் கடவுள், மதம், சாதி பற்றி நீண்ட தொரு சொற்பொழிவு நிகழ்த்தத் தொடங்கி விட்டார். கூடியிருந்த அனைவரும்—திகைப்புணர்ச்சியோடும், வியப்புணர்ச்சியோடும் ஆடாமல் அசையாமல் இருந்து கேட்டுக் கொண்டிருந்தனர்.

அந்த அளவுக்கு அந்த இளம் வயதிலேயே கொள்கையில் ஊன்றித் திளைத்திருந்தார் குருசாமி.

மாறுபட்ட கருத்துடையோர் கூட்டமாக இருந்தாலும், தம்

கருத்துகளைத் துணிவுடன் நிலை நாட்டுவதிலே மிகத் துடிப்புடன் விளங்கினார்.

### பெரியார் சந்திப்பு

பகுத்தறிவுக் கொள்கையில் மூழ்கிப் போயிருந்த குருசாமி சுயமரியாதை இயக்கத்தின் தலைவர் ஈ. வெ. ரா. பெரியாரை ஈரோட்டில் சந்தித்தார். இச் சந்திப்பு அவருடைய வாழ்க்கையை அடியோடு மாற்றி விட்டது.

ஒரு வேளை குருசாமி பெரியாரைச் சந்திக்காமலேயே இருந்திருப்பாரானால், அக் காலத்திலேயே பட்டப் படிப்புப் படித்திருந்த குருசாமி மிகப் பெரிய அரசாங்க உத்தியோகஸ்தராக ஆகி இருக்கலாம். அதற்கேற்ற பெரிய அந்தஸ்துள்ள இடத்தில் திருமணம் செய்து கொண்டிருக்கலாம்; மாதம் இரண்டாயிரம் ரூபாய்க்கு மேல் வருமானம் பெறும் பெரிய பதவியில் ஆடம்பரமாக வாழ்ந்து ஓய்வு பெற்றிருக்கலாம்; கார், பங்களா, பட்டம், பதவி என்ற சுகபோகங்களில் மூழ்கி இருக்கலாம்.

அல்லது, காங்கிரசு ஆதரவாளராகவே இருந்திருப்பாரானால் அமைச்சர் போன்ற பெரும் பதவிகளை வகித்திருக்கலாம். அல்லது, மதத் துறையிலேயே ஈடுபட்டிருப்பாரேயானால் மடாதிபதியாகி, மதத்தலைவருக்கே உரிய 'சுகபோகங்களை' அனுபவித்து மகிழ்ந்திருக்கலாம்.

ஆனால், பெரியாரின் சுயமரியாதை இயக்கம் ஒரு மாபெரும் நாத்திகரை இழந்திருக்கும்.

குருசாமி பெரியாரைச் சந்தித்ததன் மூலம் பெரியாருக்கு ஒரு பாஸ்வெல் கிடைத்தார். 1928 முதல் இறுதிக் காலமான 1965 வரைஓய்ச்சல் ஒழிவின்றி உழைக்கும் செயல் வீரரானார்; சுயமரியாதை இயக்கத்தை வளர்த்தார்; எழுதி எழுதி வளப்படுத்தினார்; பேசிப் பேசிக் கொள்கைகளைப் பரப்பினார்.

இச் சந்திப்பு 1928 மே மாதத்தின் பிற்பகுதியில் நடைபெற்றது.

இச் சந்திப்புக்குச் சில காலத்திற்கு முன்பு சுயமரியாதை இயக்

கத்தில் சேர்ந்து அதி தீவிரவாதியாக விளங்கிய பூவாளூர் பொன்னம்பலனார்தான் குருசாமியைப் பெரியாரிடம் அழைத்துச் சென்று அறிமுகம் செய்து வைத்தார்.

இவ்விருவரும் சேர்ந்து ஈரோடு நாயக்கர் இல்லம் சென்ற போது, ஈ.வெ. ரா பெரியார் தன் வீட்டின் கொல்லைப் புறத்தில் வேலையாட்களை வேலை 'ஏவிக் கொண்டிருந்தார்.' இருவரும் கொல்லைப்புறம் சென்றனர்.

குருசாமியைப் பொன்னம்பலனார் ஈ.வெ.ரா வுக்கு அறிமுகம் செய்துவைத்தார்.

இச் சந்திப்பைப் பற்றிக் கூறும்போது ஜான்சனைச் சந்தித்த பாஸ்வெல்லுக்கு என்னென்ன உணர்ச்சிகள் தோன்றியதோ அத்தகைய உணர்ச்சிகளெல்லாம் தமக்குத் தோன்றியதாக குருசாமி பிற்காலத்தில் குறிப்பிட்டார்.

''வாங்க'' என்று இளைஞர் குருசாமியை மரியாதையுடன் அழைத்தார் தலைவர் பெரியார்.

இளைஞனாகிய தம்மை 'வா' என்று கூறாமல் 'வாங்க' என்று மரியாதையுடன் அழைத்த பெரியாரின் பண்பு குருசாமியின் உள்ளத்தை எடுத்த எடுப்பிலேயே ஈர்த்துவிட்டது.

குருசாமியிடம் சில கேள்விகளைக் கேட்கலானார் பெரியார்.

''நீங்க எதுவரை படிச்சீங்க?''

''நான் பி. ஏ. எகனாமிக்ஸ் படிச்சிருக்கேன்; கடைசி வருஷ பரீட்சை எழுதியிருக்கிறேன்.''

''இப்போ என்ன செய்றீங்க?''

''சும்மாதான் இருக்கிறேன்.''

''அப்பா - அம்மா என்ன செய்றாங்க?''

''இருவரும் இல்லை. பல ஆண்டுகளுக்கு முன்பே இறந்து விட்டனர்.''

''அப்போ எப்படிப் படிச்சீங்க?''

''அத்தை என்னைப் படிக்க வைத்தாங்க.''

''குடி அரசு எவ்வளவு நாளா படிக்கிறீங்க?''

''ஆரம்பத்திலிருந்தே தான் படிக்கிறேன்.''

''கொள்கை பிடிச்சிருக்குங்களா?''

''பிடிச்சிருக்கு''

''இங்கேயே தங்கி நம்ப வேலையைக் கவனிக்கிறீங்களா?''

''கவனிக்கிறேன்.''

—இந்த உரையாடலுக்குப்பின் ஈ.வெ.ரா.வின் வேண்டுகோளுக் கிணங்க, ஈரோட்டிலேயே தங்கி, இயக்கப் பணியில் ஈடுபடத் தொடங்கி விட்டார் குருசாமி.

'குடி அரசு' அலுவலகத்தில் கைவல்ய சாமியார், எஸ். இராம நாதன் முதலியோரின் அன்புக்குப் பாத்திரமானார்; சில நாட்களி லேயே அலுவலகத்தில் எல்லோருடைய அன்புக்கும், மரியாதைக் கும் உரியவரானார்; ஈ.வெ.ரா.வின் குடும்பத்திலும் ஒருவராகி விட்டார்; நாகம்மையாரின் மூத்த மகனானார்; இயக்கத்தின் முன்னணித் தொண்டர்களிலும், தலைவர்களிலும் ஒருவரானார்; அப்போது அவருக்கு வயது இருபத்திரண்டு.

'குடி அரசி'ல் தொடர்ந்து கட்டுரைகளும் அவ்வப்போது தலை யங்கங்களும் எழுதினார். ஈ.வெ.ரா.வுடன் சென்று பிரச்சாரத் திலும் ஈடுபட்டார். அவருடைய எழுத்தும் பேச்சும் 'வெட்டு ஒன்று; துண்டு இரண்டு' என்ற முறையிலே—ஆணித்தரமாகவும் கொள்கைத் தெளிவுடனும் தக்க சான்றுகளுடனும் இருந்தன. எந்த ஒரு கருத்தையும், எந்த ஒரு பிரச்சினையையும் அணுகும் போது, சுற்றி வளைக்காமல் எடுத்த எடுப்பிலேயே 'பளிச்' சென்று படும்படியாக விளக்குவார்.

இம் மாதிரியான இவருடைய பேச்சும், எழுத்தும் எதிரி களுக்குச் சுள்ளென்று உறைக்க ஆரம்பித்தன. மக்கள் இதுவரை கேட்காத பாணியாக குருசாமியின் பாணி இருந்தது.

### ஆர். பி. ஏ.

*Rationalist Press Association* என்ற பெயரால் இலண்டனி லுள்ள ஓர் அமைப்பின் முன்னெழுத்துகளே ஆர். பி. ஏ. என் பதாகும். இன்று உலகில் தொடர்ந்து பகுத்தறிவுப் பிரச்சாரம் செய்து வருகின்ற இயக்கங்களில் இதுவும் ஒன்றாகும்.

1899-ல் இது முதன் முதல் துவங்கப்பட்டபோது வெறும் புத்தக வெளியீட்டுக் கழகமாகவே இருந்தது.

இவ்வமைப்பு, பழமை விரும்பிகளால் விரும்பப்படாத சில அரிய நூல்களை அச்சிட்டு, மலிவான விலைக்கு விற்க வேண்டு மென்னும் நோக்குடன் பன்னிரண்டு பேர்களால் தொடங்கப் பெற்றது.

இதன்மூலம் வரலாறு, தத்துவம், சமுதாயம், மதம் ஆகிய துறைகள்பற்றி மலிவுப் பதிப்பு நூல்கள் ஏராளமாக மக்களிடையே பரவின. இலட்சக் கணக்கான பாமர மக்கள் இவற்றை வாங்கிப் படித்து விளக்கம் பெற்றனர். இச் சங்கத்தார் எந்தக் கருத்தை யும் தம் இச்சையாகவோ, பிடிவாதமாகவோ கூறுவதில்லை. தக்க வர்கள் கூடி ஆராய்ந்த பிறகுதான் எந்தப் பிரச்சினை பற்றியும் முடிவு காண்பர்.

நூல்கள் எழுதுவதுடன் கூட, அடிக்கடி கூட்டங்கள் நடத்தியும் விவாத அரங்குகள் நடத்தியும் பகுத்தறிவுக் கொள்கைகளைப் பரப்பி வந்தனர். மதத்தைக் கண்டிப்பதுடன் மட்டுமே நிற்காமல் ஒவ்வொரு துறையிலும் உருவான, ஆக்க பூர்வமான ஆலோசனை களையும் அவ்வப்போது வழங்கி வருகிறது இக் கழகம்.

இக் கழகத்தின் குறிக்கோள்:—

(1) மனித சமூகப் பிரச்சினைகளுக்குப் பகுத்தறிவுப் பாதை யைக் காட்டி ஊக்க மூட்டுவது;

(2) மத நம்பிக்கையோடு கூடிய வாழ்வுக்குப் பதிலாக, ஆக்க முறையில் வழி காண்பது;

(3) மனித நல்வாழ்வுக்கான வகையில் விஞ்ஞான அறிவை எவ்வளவு மிகுதியாகப் பயன்படுத்த முடியுமோ அவ்வளவு மிகுதி யாகப் பயன்படுத்தத் தூண்டுவது;

(4) கருத்திலும், வாழ்க்கையிலும் மனித உரிமைக்காகப் போராடுவது.

மேற்கண்டவற்றுக்காகப் புத்தகங்கள், துண்டு வெளியீடுகள், பத்திரிகைகள் முதலியவற்றை வெளியிடுவதும் இதன் பணியாகும்.

இன்று இக் கழகம் குறைந்த விலையில் பல அரிய ஆராய்ச்சி நூல்களை வெளியிட்டு வருகிறது. 'தி ஹியூமானிஸ்ட் (*The Humanist*) என்ற மாத வெளியீட்டையும் நடத்தி வருகிறது. இக்கழ கத்திற்கு பெட்ரண்ட் ரஸ்ஸல் போன்றவர்கள் தலைவராக இருந்

திருக்கிறார்கள்.

இக்கழகத்தில் குருசாமி 1928-ல் உறுப்பினரானார். இக் கழகம் அதுவரையில் வெளியிட்டிருந்த நாத்திக நூல்களையும் நாத்திக வாதிகளின் வரலாறுகளையும் குருசாமிக்கு அனுப்பி வைத்தது. இவை தவிர, அவ்வப்போது தொடர்ந்து வெளியிடுகின்ற துண்டு வெளியீடுகளையும் கட்டுரைகளையும் நூல்களையும் இலவசமாக இடை விடாமல் அவருக்கு அனுப்பியது

இலண்டனிலும், மற்ற மேலை நாடுகளிலும் உள்ள கிறிஸ்தவர் களிடத்தில் பெரும்பரபரப்பை உண்டாக்கியதும் 1927-ல்இலண்டன் பகுத்தறிவுக் கழகத்தின் சார்பில் பெட்ரண்ட் ரஸ்ஸலால் பேசப் பட்ட சொற்பொழிவு நூலுமான '*Why I Am Not A Christian*'— என்ற தலைப்பிட்ட நூல் அவைகளில் மிக முக்கியமானதாகும். இந்தக் கழகத்தின் தொடர்பும் இத்தகைய நூல்களும் மதத்தின் சீர்கேடுகளை மிக நல்ல அளவில் புரிந்து கொள்ள குருசாமிக்குப் பயன்பட்டன.

1928-ம் ஆண்டிலிருந்தே குருசாமி முக்கியமான சுயமரி யாதை இயக்கக் கூட்டங்களிலும் மாநாடுகளிலும் கலந்து கொண்டார்.

குருசாமியின் கேலியும், கிண்டலும், குத்தலும் கலந்த பேச்சு இளைஞர்களை வெகுவாகக் கவர்ந்தது. ஆனால், பகுத்தறிவு வாத எதிரிகளையும் பழமை விரும்பிகளையும் குலை நடுங்கச் செய்தது.

இக் காலத்தில், குருசாமி கோவை மாவட்டம் பொள்ளாச்சி தாலுகாவில், (3.8.1928 ஆம் தேதியிலிருந்து) தொடர்ந்து சுற்றுப் பயணம் செய்து, பல ஊர்களில், ராமாயண எதிர்ப்புக்காலட்சேபம் செய்தார். பள்ளி வாழ்க்கையில் எண்கண் வெங்கடாஜல முதலி யாரிடம் கதாகாலட்சேபம் செய்ய முறையோடு பெற்ற பயிற்சி இதற்குப் பெருந் துணையாக அமைந்தது.

குருசாமியின் புதுமுறை கதாகாலட்சேபத்தினாலும் அவரு டைய வாதப் பிரதி வாதங்களாலும் பலர் ஈர்க்கப்பட்டு இயக் கத்தில் சேர்ந்தனர். அவருடைய காலட்சேபம் மக்களைச் சிரிப்புக் கடலில் ஆழ்த்தியது. 'பாதுகாபட்டபிஷேகம்' சிறப்பாகக் கொண் டாடப்பட்டது. சுயமரியாதைக்காரர்கள் குருசாமிக்குப் புத்தாடை

தந்து, மலர் மாலையிட்டுத் தங்களது மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டனர். (இச் செய்தி 'குடிஅரசி'ல் வெளி வந்துள்ளது.)

இந் நிகழ்ச்சி இராமனைக் கடவுள் என்று கூறித்திரியும் மனிதர்களைத் திடுக்கிட வைத்தது.

தமிழ் நாட்டு இளைஞர்களில் பெரும் பகுதியினரைச் சுயமரியாதை இயக்கம் தன் வசமாக்கிக் கொண்டது. ஈ.வெ.ரா.பெரியார் இளைஞர்களின் தலைவராகி விட்டார். காங்கிரசு இயக்கத்திலுள்ள இளைஞர்கள் பலரும் மிக வேகமாக இவ் வியக்கத்தில் சேர ஆரம்பித்தனர். சாதி உயர்வு பாராட்டியவர்களின் தலைக் கனம் குறைந்தது. பார்ப்பனர்களுக்கிருந்த தனி மரியாதை சிதையத் தொடங்கியது. ''கடவுள்'' பெயரைச் சொல்லி ஏமாற்றிக் கொண்டிருந்தவர்கள் ஒய்ந்து ஒடுங்கினர்.

இயக்கத்தின் முன்னணி வீரர்களான எஸ். இராமநாதன், குருசாமி, சாமிசிதம்பரனார், பட்டுக்கோட்டை அழகிரிசாமி, பொன்னம்பலனார், எஸ்.வி. லிங்கம், ஏ.எஸ். அருணாசலம்,சொ. முருகப்பா, மாயவரம் நடராசன், நாகை மணி, நாகை காளியப்பன், கோவை அய்யாமுத்து, கோவை ஏ. ஆர். சிவானந்தம், சித்தர்க்காடு ராமய்யா, அருப்புக்கோட்டை கருப்பய்யா, ஜே.எஸ். கண்ணப்பர், பூவாளூர் செல்வமணி, மூவலூர் இராமாமிர்தம் அம்மையார் - போன்ற பலரும் நாடெங்கும் சுற்றிப் பகுத்தறிவுக் கொள்கையைப் பரப்பி வந்தனர்.

'சுயமரியாதை இயக்கம் பாமரர்களைத் தட்டியெழுப்ப வேண்டிய இயக்கம்; மேல் சாதிக்காரர்களுக்கோ, படித்த மேதாவிகளுக்கோ உரியதல்ல இந்த இயக்கம்; கீழ் மட்டத்திலுள்ள மக்களைத் தட்டியெழுப்பினாலொழிய நாடு முன்னேறாது' என்பதை குருசாமி திட்டவட்டமாகவும் தெளிவாகவும்-ஈ.வெ.ரா. பெரியாரைப் போலவே-மிகமிக நன்றாகத் தெரிந்து வைத்திருந்தார்.

ஆகவே, குருசாமி சொல்லலங்காரங்களையோ, பசப்பு மொழிகளையோ விரும்பவில்லை. மாறாக, அதை வெறுத்தார். தனது பேச்சிலும், எழுத்திலும் மக்கள் மொழியையே கையாண்டார். ''கேட்பவர்களைத் திருப்திப்படுத்த வேண்டுமென்று கருதிப் பேசுவோரால் விளைக்கப்படுகின்ற தீங்குகளைவிட அதிகமாகத்திருடர்

ளாலும் – கொலைகாரர்களாலும் கூட இழைக்கப்படுவதில்லை'' என்று எழுதினார். ''மாதம் முப்பது ராத்திரியும் அமாவாசையாகவே இருக்கவேண்டுமென்று நினைக்கிறவர்கள் இல்லையா? அதுபோல், பொதுமக்கள் மனம் எப்போதும் இருட்டாகவே இருக்க வேண்டுமென்று நினைப்பவர்களும் இருக்கிறார்கள்'' – என்று பேசினார்.

''அந்நியர்கள் நம்மை மதிக்கமாட்டார்களே- பழிப்பார்களே- எதிர்ப்பு பலமாகிவிடுமே என்கிற உலக அபிமானமும், பயமும், பலக் குறைவும் எவரிடத்திலிருக்கிறதோ அவர்கள் ஒருக்காலும் உண்மையான சீர்திருத்தத்திற்கு உதவ மாட்டார்கள். எந்தவொரு அபிப்பிராயத்தையும் அதனால் ஏற்படும் பலனைக் கொண்டுதான் மதிக்க வேண்டுமே யொழிய சொல்லலங்காரத்தைக் கொண்டும் செல்வாக்கைக் கொண்டும் மதிப்பது அறிவுடைமையாகாது'' – என்ற தனது தலைவர் ஈ. வெ. ரா.வின் கருத்தை குருசாமி ஒருவர்தான் நன்குணர்ந்து அதன் வழியிலே தன்னையும் தான் சார்ந்த இயக்கத்தையும் நடத்திச் சென்றார். அந்நியர்களுக்கு மட்டுமல்லாமல், தனது உறவினர்களுக்கும் அவர்களுடைய எதிர்ப்புகளுக்கும் ஏளனங்களுக்கும் ஒருபோதும் அஞ்சியதில்லை குருசாமி.

கொள்கை, இயக்கம் என்று வரும்போது உற்றார்- உறவினர் என்றோ, நண்பர்கள் என்றோ, இரத்தபாசம் என்றோ, ஏழை- பணக்காரன் என்றோ அவர் பார்த்ததே கிடையாது. அவருக்குத் தெரிந்ததெல்லாம் ஒரேயொரு பாதைதான்: அதுதான், சமுதாய சீர்திருத்தப் பொதுவுடைமைப் பாதை; மக்களை நாத்திக வழி செலுத்தும் பாதை- அறிவுப் பாதை!

### திரு. வி.க.வுக்கு மறுப்பு

1928-ல் ஜூன் மாதம் 27-ந்தேதி 'நவசக்தி' இதழில் 'தொடர் முடங்கல்' என்னும் பகுதியில் திரு. வி. கலியாண சுந்தரனார் பெரியாரின் 'குடிஅரசு' இதழின் கருத்துகளுக்குக் கண்டனம் தெரிவித்துக் கட்டுரைகள் எழுதினார்.

குருசாமி திரு. வி. க. நடையிலேயே கிண்டலாக இதற்குப் பதிலளித்துக் கட்டுரைகள் எழுதினார்.

இளங் குத்தூசியாருக்குக் கடுமையான நடையிலேயும் எழுதத் தெரியும் என்பதற்கு இக் கட்டுரையே சான்றாகும். குருசாமி எழுதியதாக அச்சில் கிடைக்கும் முதல் கட்டுரை இதுவேயாகும்.

8-7-1928 'குடிஅரசி'ல் 'நவசக்தியின் தடுமாற்றம்' என்ற தலைப்பிட்டு, குருசாமி எழுதிய கட்டுரையில் ஒரு பகுதி:

''திரு. முதலியார் அவர்கள் ஆண்டவன் திருவருளை முன்னிட்டே போர்த் துறையில் இறங்கிவிட்டார். 'குடி அரசி'ன் தலைவருடன் சமயச் சீர்திருத்தத்தின் பொருட்டு மாத்திரம், போர் தொடங்கி விட்டாராம். திரு. முதலியார் அவர்களின் எதிர்ப்புக்கு ஒன்று விடாமல் பதில் கூறத் தயராக இருக்கிறேன்.''

''முதலாவதாக, 'குடி அரசி'ன் வசைபுராணத்தைப் பற்றி, அது ''ஆண்டகைமையாகாது'' என்பது ஆம். எல்லாஅறிவாளிகளும் திரு.முதலியாரவர்களைப் போன்று மறை பொருளுள்ள மொழிகளாலும், மேற்பார்வை வைக்கு மங்களகரமான சொற்களாலும் உள்ளே வசை மொழி மாத்திரையை வைத்து அவருடைய தமிழ்ப் பாண்டியத்தினால் மேலே வெல்லத்தை வைத்து, அறி வாளர்களுக்கும், ஏனையோருக்கும் கொடுக்கும் பழக்கம் பெற்றிருக்க முடியாது.''

''திரு. நாயக்கர் அவர்களுக்கு மனதிற்தோன்றியதை அவ்விதமே ஒரே பொருள் படும்படி சொல்லுவதும் எழுது வதும்தான் முடியும். தெருக் கூத்துக்கும், கழைக் கூத்துக்கும், குத்துச் சண்டைக்கும் கூட்டம் சேர்வது இயல்பே. ஒரு நாள் சென்று பிராமணத் துவேஷப் பிரச் சாரம் செய்யினுங் கூட்டம் சேரும் நிலையில் நாடிருக் கிறது.''

''இவ்வாறான மொழிகள் வசைபுராண மாகா, பிற றொருவருக்கும்படாது என்பது திரு. முதலியாரவர்களின் கருத்துப் போலும். இவ்வளவு பெரிய பாண்டித்தியமும்

மறைவாகக் கூறும் பேராற்றலும் திரு. நாயக்கருக்குக் கிடையாது என்பதை வணக்கமாய்த் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.''

''கம்பர் கவிவனப்பையும், சேக்கிழார் அன்பின் திறத்தையும் உணரும் தவம் 'குடிஅரசு'த் தலைவருக்கு மறுபிறவியிலாவது உண்டாகவும்—என முதலியார் எழுதியுள்ளார். இவ்வாறு எழுதுவது கல்விச் செருக்கி னாலோ,அல்லது திரு.நாயக்கர் பேரிலுள்ளஅன்பினாலோ என்பதை அறிவுடையோர் உய்த்துணர்வாராக.''

''இதிகாச புராணங்கள் எந்த நாட்டிலும் இருக் கின்றன. ஆனால், அவைகளின் காரணமாய் சன சமூக முன்னேற்றம் தடைபெறக்கூடியதாக இருந்ததே இல்லை. அக் கொடுமை நம் நாட்டில்தான் உள்ளது, அத்தகைய புராணங்களுள் முக்கியமானது இராமா யணம். இதைப் படிப்பவர்களுக்குச் சுயமரியாதை உணர்ச்சி உண்டாகுமா ?''

''நாயக்கரின் மேல் முதலியாருக்கு இருக்கும் பொறாமையின் காரணமாகத்தான் இவ்வாறு எழுது கிறார் என்று பலர் சொல்வது போல் யான் சொல்ல வில்லை. ஆனாலும் வேறு காரணமும் தெரிய வில்லை.''

''திரு. முதலியார் அவர்களே, தாங்கள் சமயச் சீர் திருத்தங்களைக் குறித்து அறமுறையில் நடத்தப் புகுந் திருக்கும் போர்க்கு யாமும் ஆயத்தமாகிவிட்டோம். எங்கள் தலைவரே போர் புரிய வேண்டுமென்பதில்லை யாயின், தாங்கள் எம்போன்ற சிறு தொண்டர்களோடு தங்கள் சமயப் போரை நடத்த முந்துங்கள். ஆராய்ச்சி, பாண்டித்தியம் ஆகிய பூச்சாண்டிகளைக் காட்டி இனி எங்களை வீணே அச்சுறுத்த வேண்டாம்''

இம்முறையில் 14-10-1928 'குடி அரசு' இதழில் 'மக்களும் சமயமும்' என்னும் தலைப்பில் குருசாமி மீண்டும் எழுதினார்:

''உலகம் தோன்றிய காலத்திலிருந்து பல சமயங்கள்

தோன்றி, பல அழிந்து, பல அழியும் தருவாயிலும் இருப்பதை யாரும் மறுக்கமுடியாதென நம்புகிறோம். மனித அறிவு வளர வளர, சில மதங்களிலுள்ள அதிகமான ஊழல்களும், முரண்பாடான கொள்கைகளும் விளக்கமாய்த் தோன்றுகின்றன. பாவம், புண்ணியம் என்னும் இரண்டு வார்த்தைகளால் அடங்கிவிடக்கூடிய பல விஷயங்கள், அறிவு முதிர்ச்சி காரணமாகப் பல அய்யப்பாடுகளை உண்டாக்கிவிடுகின்றன. உதாரணமாக, புலால் உண்ணல் பஞ்ச மாபாதகங்களில் ஒன்று என்று கூறும் நமது சமயங்கள், கிரீன்லாந்திலுள்ள எஸ்க்கிமோ கூட்டத்தார் (அங்கு தாவரங்கள் வளருவதின்மையால்) தங்கள் உயிர் வாழ்வின் பொருட்டுப் பச்சை மாமிசங்களையே உண்டு வாழவேண்டியிருக்கின்றதே என்ற வினா எழுங்காலத்துப் பதில் கூறமுடியாது திகைக்கின்றன. அன்பின் சொருபமாகிய தனிப் பெருங் கருணை வள்ளல், எஸ்க்கிமோ சாதியாரை எந்தப் பிறவியில் மேம்படுத்த முடியும் ? அவர்களோ பஞ்சமா பாதகத்தில் ஒன்றைச் செய்தே உயிர் வாழ வேண்டிய நிலையில் இருக்கின்றார்கள்.''

''இன்னும், சமீப காலத் தாவரநூல் வல்லுநர்கள் தாவரத்திற்கும் உயிர் உள்ளதெனக் கூறுகின்ற முகத்தான், அதனை அழித்தலும் பாவமெனக் கொள்ளல் வேண்டுமன்றோ? ஆகவே, உடற்கூற்று நூற் புலவர். மனித அமைப்பிற்குப் புலால் உணவு ஏற்றவை என்று கூறுவதால் அது பொருத்த முடைத்து என்று கொள்ளக் கிடக்கும். இவ்வுண்மையை உற்று நோக்குங் கால், இது 'பகுத்தறிவுகாலம் என்பது வெள்ளிடைமலை. மனிதனின் தூய வாழ்விற்கும், மனச் சமாதானத்திற்கும், பற்றுக் கோடாக ஒரு மதம் வேண்டுவது அவசியமா ?''

''நம் முன்னோர்கள் அவர்கள் காலத்திற்கு ஏற்றவாறான கொள்கைகளை நிலவச் செய்து போந்தனர். நம் முன்னோர்கள் வாழ்ந்த நிலையில் நாம் வாழவில்லை;

வாழவிரும்பவுமில்லை. சக்கிமுக்கிக் கல் உதவியால் தீயுண்டாக்கிய முன்னோர்களைப் பின்பற்றி வாழ இச்சையுள்ளவர் உளரோ? தீக் குச்சியின் உதவியல்லவா இன்றியமையாததாய் இருக்கிறது!''

## 'ரிவோல்ட்'துணை ஆசிரியர்

சுயமரியாதை இயக்கத்தின் கொள்கையைப் பரப்புவதற்காக ஒரு ஆங்கில வார ஏடு வேண்டுமென்ற இன்றியமையாமையை உணர்ந்த இராமநாதனும், குருசாமியும் அக் கருத்தைத் தலைவர் பெரியாரிடம் எடுத்துச் சொன்னார்கள். அதன்படி 7-11-1928 முதல், ஈரோட்டிலிருந்து (*Revolt*) 'ரிவோல்ட்' என்னும் பெயரில் வார இதழ் ஒன்று வெளிவந்தது. அதற்குப் பெரியாரும் இராமநாதனும் ஆசிரியராகவும், குருசாமி துணை ஆசிரியராகவும் இருந்தனர். இது முதல், குருசாமி 'ரிவோல்டி'ன் துணை ஆசிரியர் என்றே அறிமுகப்படுத்தப்பட்டார். 'ரிவோல்டி'ன் முழுப் பொறுப்பையும் குருசாமியேதான் கவனித்து வந்தார்.

16-6-1929 முதல் 'குடிஅரசு' 'ரிவோல்ட்' ஆகிய இரு இதழ்களும் சென்னையிலிருந்து வெளிவந்தன! அதன் அலுவலகம்—சென்னை மவுண்ட் ரோட்டில் காஸ்மாபாலிடன் கிளப் கட்டடத்திற்கு அடுத்த கட்டடத்தில் இருந்தது பத்திரிகை வேலையைக் கவனிப்பதற்காக குருசாமி சென்னைக்குக் குடியேறினார்!

'ரிவோல்டி'ல் குருசாமியின் எழுத்துகள் பகுத்தறிவு அனலைக் கக்கின. ஒவ்வொரு வாரமும் அக் கனல் வைதீகத்தையும், 'மவுண்ட் ரோடு மகாவிஷ்ணு' என்று குருசாமியால் பெயர் சூட்டப்பெற்ற 'இந்து', 'மித்திரன்', 'ஆனந்தவிகடன்' போன்ற பார்ப்பனப் பத்திரிகைகளையும், திரு.வி.க.வின், 'நவசக்தி' போன்ற இதழ்களையும் தாக்கின. அவ் விதழ்களின் ஆதரவாளர்கள், அந்த அனலின் வேகம் தாங்காமல் அலறித் துடித்து ஓலமிட ஆரம்பித்தனர், குருசாமியின் எழுத்தைப் படித்த மதவாதிகள் தீப்பொறி பட்டதுபோல் உள்ளந் திடுக்கிட்டுத் துடித்தனர்.

இக் காலத்தில் காந்தியார் மக்களை அறிவு வழியில் செல்லத் தூண்டுவதற்குப் பதிலாக வர்ணாசிரம வழியைப் பின்பற்றும்

வகையில் தூண்டினார். மக்களை 'ராம்துன்' பஜனையில் ஈடு படச் செய்தார். இராமராஜ்யத்தைப் பற்றியும், இராமனுடைய சிறப்பைப் பற்றியும் வெகுவாகப் புகழ்ந்து பேசியும் எழுதியும் வந்தார். காந்தியாரின் பேச்சுகளையும் எழுத்துகளையும் ஊன்றிப் படித்து வந்த குருசாமி, இராமாயணம் கற்பனைக் கதை என்று உணர்ந்திருந்த போதிலும், காந்தியாருக்குப் பதில் சொல்ல வேண்டுமென்ற காரணத்திற்காக அந்தக் கதையிலுள்ள இராம னுடைய குறைகளைச் சுட்டிக்காட்டி, இப்படிப்பட்ட இராம னுடைய 'ராமராஜ்யத்தை'த்தான் காந்தியார் விரும்புகிறாரா? காந்தியாரைப் போன்ற பெரியவர்கள் இம்மாதிரித் தவறான கருத்துகளை மக்களிடத்தில் புகுத்தலாமா?' என்ற முறையில் 'ரிவோல்ட்'டில் தொடர்ந்து தக்க ஆதாரங்களுடன் எழுதினார்.

ரிவோல்ட் 21-11-1928 இதழில் இவ்விதம் தொடங்கினார்:

['இதிகாசம்' என்றால் பழைய கதை என்பது பொருள். ஆனால், பழைய கதைகளெல்லாவற்றையுமே இதிகாசம் என்பதில்லை. வட ஆரிய மன்னர்களின் சரித்திரமாகிய இராமாயணம், மகாபாரதம் ஆகிய இரண்டும்தான் இதிகாசம்என்று கூறப்படுகிறது. இவை இரண்டும் இந்து மதக் காவியங்களாகும்''.

''இவைகளை அறிவுக் கண்கொண்டு படிப்போ மானால், வட ஆரியர்களின் நாகரிகத்தைப் பற்றியும் பழக்க வழக்கங்களைப் பற்றியும் அறிந்து கொள்ள லாம்.''

''தெய்வீகத் தன்மையானது, புனிதமானது என்று ஏற்கெனவே கொண்டிருக்கின்ற கருத்துகளை அகற்றி விட்டு, அவை மனிதனால் எழுதப்பட்டது, – 'தெய்வீக மாய்ப் பிறந்தது; குற்றங்களுக்கு இடமில்லாதது; எனவே அவை அப்படியே கண் மூடித்தனமாகப் பின்பற்ற வேண்டியவை'—என மதிக்காமல், ஆய்வுக்கு உட்பட்ட தாகக் கருதிப் படிக்க வேண்டும்; அப்போதுதான் அதன் உண்மை நிலை புரியும். நாம் முதலில் இராமாயணத்தை எடுத்துக்கொள்வோம்'']

ITHIHASAS: THE HINDU EPICS

"Ithihasa means an old story. But all the old stories do not come under this head. Both the Ramayana and the Mahabharatha, the histories of the Aryan Kings of the North, are the Hindu Epics. An intelligent reading of them will give an idea of the customs, manners, and civilisation of the ancient Aryans. An examination of both the epics is attempted here. The readers are requested to discard their preconceived notions about the sanctity of these epics and consider them as human documents whose value is open to question and not as divine inspirations whose infallibility ought to be blindly accepted as an article of faith. Only then will be truth of contention be evident to them. Let us first take the Ramayana"

(*Revolt*: *21-11-1928*)

இம் முன்னுரையுடன் தொடர்ந்து இராமாயணத்தை 'ரிவோல்ட்டில்' ஆங்கிலத்தில் எழுதினார்

கட்டுரை வெளியான ஒவ்வொரு இதழிலும் சிவப்பு மையால் கோடிட்டுக் காட்டி, காந்தியாருக்கு வாரந்தோறும் தவறாது அனுப்பி வைத்தார். அந்தக் கட்டுரைகளைப் படித்த பின்புதான் காந்தியார் ''என்னுடைய ராமன் வேறு; தசரத ராமன் வேறு. நான் சொல்லும் ராமன் தசரத ராமன் அல்ல''—என்று தன் பேச்சையும், எழுத்தையும் மாற்றிக் கொண்டார்.

குருசாமியின் தொடக்க கால எழுத்துகளே காந்தியார் போன்ற பெருந் தலைவர்களை அசைத்து ஆட்டி வைத்தன.

குருசாமியின் இராமாயணத்தைப் பற்றிய கட்டுரைகள் இந்தியாவில் மட்டுமின்றி—அய்ரோப்பிய,அமெரிக்கநாடுகளிலுள்ள வர்களையும் கவர்ந்தன. இதன் தொடர்பாகப் பாராட்டுதல் களையும், கண்டனங்களையும் இவர்களிடமிருந்து சுயமரியாதை இயக்கம் பெற்றது.

இக் கண்டனங்களுக்குப் பதிலளிக்கும் முறையில் குருசாமி

விளக்கக் கட்டுரைகள் பல எழுதினார்.

தேசத்தின் வளர்ச்சியில் அக்கறை உடையவர்கள், இராமாயணம் பற்றிய கருத்துகளை மறுபரிசீலனை செய்யவேண்டும் என்னும் கருத்தினை இக் கட்டுரைகளில் விவரித்தார்.

13-2-1929 'ரிவோல்ட்' இதழில் எழுதியதாவது :

''சிலருடைய அய்யப்பாடுகளையும், தவறான எண்ணங்களையும், அகற்றுவதற்காக இதிகாசங்களைப் பற்றிய எங்கள் கருத்துகளை மீண்டும் வலியுறுத்துகிறோம். இதிகாசங்களில் செல்லரித்துப்போன மூடநம்பிக்கைகளைப் போற்றும் 'இந்து' மனப் பான்மைகளில் மாறுதல்களை ஏற்படுத்த முனைகிறோம் என்ற குற்றச்சாட்டுகளை நாங்கள் ஏற்றுக் கொள்கிறோம். ராமாயணப் பாத்திரங்களின் மூலமாக, நற்பண்புகள் என சித்தரிக்கப்படுபவைகளில் பெரும்பாலானவை பூர்வீக சமுதாயத்திற்கே பொருந்தும். அவற்றை இந்தக் காலத்தில் ஏற்றுக்கொள்ளுவது நம்மை இழிந்த நிலைக்கே கொண்டு செல்லும். ராமாயணத்தில் நல்லனவற்றை எடுத்துக் கொண்டு, கெட்டனவற்றைப் புறக்கணிக்கலாம் என்று சொல்லப்படுசிறது. அது இயலுமானால், நாம் தாராளமாக ஏற்றுக் கொள்ளலாம். அப்படி ஏற்றுக் கொள்வதில் இடையூறுகள் பல நேரிடும்.

உதாரணமாக, ராமன் இரு பிறப்பாளருக்கே (பார்ப்னருக்கே) உரித்தான தவத்தை ஒரு 'சூத்திரன்' புரிந்ததற்காக அவனைக் கொன்று விட்டான். ராம பக்தர்கள், ''இந் நிகழ்ச்சி உண்மை எனினும் எங்கள் ராமன் அப்படிச் செய்யவில்லை. அத்தகைய கொடுமைச் செயலுக்கு ராமன் குற்றவாளியல்ல'' என்று கதறுகிறார்கள்.

ராமாயணக் கதையிலுள்ள இத்தகைய நிகழ்ச்சிகளையெல்லாம் அகற்றிவிட முனைந்தால் எலும்புக் கூடுதான் மிஞ்சும். அதனால்தான் ராமாயணம் இக் காலத்திற்கு ஒத்தது அல்ல என்பதைத் தெளிவு படுத்துகிறோம்.''

“இன்றைய இந்து சமுதாயத்தின் கேடுகளுக்கெல்லாம் உரம் ஊட்டிக் கொண்டிருப்பது ராமாயணக் கதையிலுள்ள கருத்துகள்தான். சாதிப்பிளவு, தீண்டாமை, பெண்களின் கணவன் வழிபாடு, உடன்பிறந்தோரை வணங்குதல் போன்ற கோழைத்தனமானவைகளுக்கு மூலகாரணமே இதிகாசங்கள்தான். சீர்திருத்தக்காரனுக்கு அதிலுள்ள கருத்துகளைத் தேடிக் கொண்டிருப்பதற்கு நேரமில்லை

தேசத்தின் வளர்ச்சியைப் பற்றி ஆர்வமுடையவர்கள் இதிகாசங்களை அடியோடு ஒழித்தே ஆக வேண்டும்.

ராமனை வணங்குகிற இளைஞர், நாட்டுக்காகத் தியாகம் செய்ய வேண்டுமென்பதை ஒரு போதும் அறிய மாட்டார்கள்.அவர்கள் ராமனைப் பின்பற்றித் தந்தையை வணங்குவார்கள் ராமன் காட்டுக்குச் சென்றது போல்-நாட்டைக் கைவிட்டு விடுவார்கள். எனவே, இந்திய நாட்டு வளர்ச்சிக்கு ராமாயணக் கருத்து என்றுமே இடையூறாகத்தான் இருக்கும். தேசநலம் கருதுகிறவர்கள், இதிகாசங்களால் ஏற்படுகின்ற ஒழுக்கக் கேடுகளிலிருந்து மக்களைக் காப்பாற்ற வேண்டும். தேசத்தின் அடிப்படைக் கேடுகளுக்கான இழி செயல்களிலிருந்து-நமது குழந்தைகளையும் காப்பாற்ற வேண்டும்.”

“To allay doubts and misgivings we shall restate our attitude towards the Ithihasas. We plead guilty to the charge that our object is to effect a change in Hindu ideals by drawing people away from the teachings of the Ithihasas, which idealise outworn superstitions. The virtues, so called delineated through the characters of the Ramayana suit only a primitive society. Their adoption to modern spells national disaster. It is often said that we should retain the good things in the Ramayana and eschew the bad. We do not desire to

படித்துப் பட்டம் பெற்றுப் புகழ் பெற்றிருந்தமைதான்.

இம்மூவரும் உயர்தரக்கல்வி பயின்றது, ஜியார்ஜ் டவுனிலுள்ள 'டேஸ் ஸ்கூல் (*Day's School*)' என்று அன்று அழைக்கப்பட்டதும் 'ஆன்டர்சன் பெண்கள் உயர்நிலைப் பள்ளி' யென்று இன்று அழைக்கப்படுவதுமான பள்ளியாகும். குஞ்சிதம் எஸ். எஸ். எல் சி. தேர்வில் பள்ளியில் முதல்தரமான மதிப்பெண்கள் வாங்கித் தங்கப் பதக்கம் பரிசு பெற்றவர். ஆங்கிலத்திலும் தனித் திறமை பெற்றிருந்தார்.

பள்ளிப் படிப்பு முடிந்ததும் மேரி ராணி கல்லூரியில் சேர்ந்து பொருளாதாரம், அரசியல் சிறப்புப் பாடங்களாக எடுத்துப் படித்தார். கல்லூரி நாட்களில் டென்னிஸ் விளையாட்டிலும் சிறந்து விளங்கினார். போட்டிகளிலும் பல பரிசுகளைப் பெற்றார்.

1929-ல், குஞ்சிதம் பி.ஏ. இறுதியாண்டில் படித்துக் கொண்டிருந்தார். இந்த நேரத்தில்தான் பெரியார் ஈ.வெ ரா. பொன்னம்பலனார், இராமாமிர்தத்தம்மையார் ஆகியோர் குருசாமிக்காக அவரைப் பெண் பார்க்கச் சென்றனர்.

பெண் பார்க்கச் சென்ற நிகழ்ச்சி பற்றி பொன்னம்பலனார் கூறுகிறார்:

"குருசாமி அவர்களுக்கு நானும் பெரியார் அவர்களும், மற்றவர்களும்—குஞ்சிதம் அவர்களைப் பெண் கேட்கச் சென்றிருந்தோம். நல்ல பழுத்த வைதீகக் குடும்பம். துளசி மாடம் வைத்து, லட்சுமி படம் வைத்துக் கும்பிட்டுக் கொண்டிருந்த இடம். வைதீக முறைகளும், ஆசார அனுஷ்டானங்களும் மிகமிக அதிகம்,

முதலில், சுப்பிரமணியபிள்ளை ஒத்துவராது என்று மறுத்தார் பெரியார் அவர்கள் அவரை மாற்றி ஒத்துக்கொள்ள வைத்தார்."

சுப்பிரமணிய பிள்ளையும், மாப்பிள்ளை குருசாமியை நேரில் பார்த்து வரச் சென்றார். அப்போது மாப்பிள்ளை குருசாமி சென்னை 'ரிவோல்ட்' அலுவலகத்தில் சுறுசுறுப்பாக எழுதிக் கொண்டிருந்தார். குருசாமியிடம் பிள்ளையவர்கள் சிறிது நேரம் ஊடாடிப் பேசி, வருங்கால மாப்பிள்ளையின் அறிவுத் திறனைக்

கண்டு, உள்ளூர மகிழ்ந்து வீடு திரும்பினார்.

## குருசாமி—குஞ்சிதம் திருமணம்

1929 டிசம்பர் 8-ல், ஈரோட்டில் ஈ.வெ.ரா. இல்லத்தில் குருசாமி—குஞ்சிதம் திருமணம் நடைபெற்றது. திருமணத்தை ஈ.வெ.ரா.வும், நாகம்மையாரும் முன்னின்று நடத்தி வைத்தனர், தமிழ் நாட்டில் 'தொண்டை மண்டல முதலியார்' வகுப்பைச் சேர்ந்த மாப்பிள்ளைக்கும் 'இசை வேளாளர்' வகுப்பைச் சேர்ந்த பெண்ணுக்கும் நடந்த புரட்சிகரமான முதல் கலப்புத் திருமணம் இதுவே.

இத் திருமணம் நடக்கச் சில மணிநேரம் இருக்கும்போது, திருச்சியிலிருந்து குருசாமிக்கு ஒரு தந்தி வந்தது. தந்தியில், குருசாமி யின் தங்கை கிணற்றில் விழுந்து இறந்து விட்டதாகச் செய்தி இருந் தது. தந்தியை அனுப்பியவர் அவருடைய தங்கையின் கணவராவார்.

ஈ.வெ.ரா. உட்பட எல்லோரும் திடுக்கிட்டனர். தந்தியைக் கண்ட குருசாமி, 'எனது இரண்டு தங்கைகளில், தந்தியில் குறிப்பிட்டுள்ள தங்கைதான் நல்ல தைரியசாலி. நிச்சயம் அவள் உயிருடன் இருப்பாள்' என்று கூறிவிட்டார். குருசாமி சொல்லியதே பின் உண்மையாக இருந்தது. அந்தத் தங்கை இறக்கவில்லை. குருசாமியின் திருமணத்தை நிறுத்துவதற்குத் தங்கையின் கணவர் செய்த தந்திரமே அது!

இச் சுயமரியாதைக் கலப்புத் திருமணம், ஈரோட்டில் ஈ.வெ. ராமசாமிப் பெரியார் மாளிகையில் நடைபெற்றது.

திருமணத்திற்கு முதல் நாள் மாலை, மணமகள் குஞ்சிதத்தை கோச்சு வண்டியில் அமர்த்தி, ஈரோடு நகரின் பெரிய வீதிகள் வழி யாக ஊர்வலமாக அழைத்து வந்தார்கள். இப் புதுமைத் திருமணத்தைப் பற்றி ஊரே வியந்து பேசியது.

திருமண நாளான 8-12-1929 அன்று காலை 9 மணியளவில் ஈரோட்டில் பெரியாரின் இல்லத்தில் ஏராளமான சுயமரியாதை இயக்க இளைஞர்கள் கூடியிருந்தனர். அம் மாளிகை தோரணங்களா லும் செடி, கொடிகளாலும் அலங்கரிக்கப்பட்டு, வெகு அழகாக விளங்கியது. குருசாமி-குஞ்சிதம் சுயமரியாதைக் கலப்புத் திரு

மணத்தை முன்னிட்டு வந்திருந்தவர்களைக் காணும்போது, அனைவரும் ஒரு பெரும் மாநாட்டிற்கு வந்திருந்து ஈ. வெ. ரா. மாளிகையில் முகாமிட்டிருந்தது போன்றேயிருந்தது.

காலை 9 மணிக்கு மாளிகையில் கலியாண மண்டபம் எள் விழ இடமின்றி, இயக்கத் தலைவர்களால் நிரம்பியிருந்தது. திருமணக் கூடத்தில் இடமில்லாமல் வெளியிலும் அநேகர் கூடியிருந்தனர்.

சரியாக 9-30 மணிக்கு மண மகன் குருசாமியும், மணமகள் செல்வி குஞ்சிதமும், ஆடம்பரமற்ற மணக்கோலத்துடன், மண மேடையிலுள்ள நாற்காலிகளில் அமர்ந்தனர். பெரியார் அவர்கள் திருமண நடைமுறைகளை விளக்கிப் பேசினார். மணமகன் குருசாமி நீண்ட கையொலிக்கிடையே எழுந்து, தாம் செய்து கொள்ளவிருக்கும் திருமணத்தைப் பற்றிச் சிலகூறி, மணமகளிடம் இனித் தாம் நடந்து கொள்ளவிருக்கும் முறைகளையும் கூறி, உறுதிமொழி சொல்லிய பின், செல்வி. குஞ்சிதம் பேச எழுந்தார். அப்பொழுது நீண்ட கையொலியும் ஆரவாரமும் எழுந்தது. மலர்கள் வாரி இறைக்கப் பட்டன. குஞ்சிதமும் தமது உறுதிமொழியைக் கூறியபின் திரு. குருசாமியவர்களால் 'மாங்கல்ய தாரணம்' செய்யப்பட்டது.

பின்னர், திருவாளர்கள் ஜே. எஸ். கண்ணப்பர், கி ஆ.பெ. விசுவநாதம், முத்துக் கருப்பண்ணன் செட்டியார், முனிசிபல் கவுன்சிலர் நரசிம்மாச்சாரி, இராமாமிர்த அம்மாள், தாசில் தார் வெங்கிடபெருமாள் நாயுடு, கே. வி. அழகர்சாமி, மாசிலாமணி, பங்காரு அம்மாள், சாமி.சிதம்பரனார், ஈ. வெ. கிருஷ்ணசாமி திருவாரூர் ராமன், கரந்தைத் தமிழ்ச் சங்கம் ஆர். மாணிக்கவாசகன், சி. டி. நாயகம், எஸ். வி. லிங்கம் ஆகியவர்கள் இத் திருமணத்தைப் பற்றிச் சொற்பொழிவாற்றி மணமக்களை வாழ்த்திப் பேசினர். எஸ். இராமநாதன் நன்றி கூறினார்.

ஈ.வெ.ரா. நாகம்மையார் மணமக்களுக்குச் சரிகை மாலை சூட்டிய பின், சுயமரியாதை இயக்கத்துக்கும் ராமசாமிப் பெரியாருக்கும் 'ஜெய கோஷத்துடன்' திருமணம் இனிது முடிவுற்றது.

அன்று மாலை, ஈரோடு காரை வாய்க்கால் கரையில் ஒரு

பொதுக்கூட்டம் நடந்தது. ஏராளமான ஆண்களும் பெண்களும் கலந்து கொண்டனர். ஈ.வெ.ரா. பெரியார் முன்னுரையாக சிறிது பேசி, ''இன்று திரு. குருசாமிக்கும் குஞ்சித அம்மாளுக்கும் நடைபெற்ற திருமணத்திற்கு விஜயஞ் செய்துள்ள நமது சுயமரியாதை நண்பர்கள் பலர் 'சீர்திருத்தம்' என்பது பற்றிப் பேசுவார்கள். இக்கூட்டத்திற்கு திரு எஸ். இராமநாதன் அவர்களைத் தலைமை வகிக்க வேண்டுமென கேட்டுக் கொள்ளுகிறேன்'' எனக் கூறினார். திரு. எஸ். இராமநாதன் அவர்கள் தலைமை உரை ஆற்றினார்.

''அரசியலுக்கும், சமுக இயலுக்கும் தமிழ் நாட்டில் நல்லுயிர் அளித்துவரும் பெரியார் உள்ள இந்த நகரில், இன்று நடைபெற்ற பிரபல திருமணத்திற்கு வருகை தந்துள்ள நண்பர்கள் நமது கொள்கையைப் பற்றிப் பேசுவார்கள். அதன்பின் அவசியமானால் நான் பேசுகிறேன்;''

என்றதன்பின், திரு. சுப்பிரமணிய யோகீஸ்வரர் திருமண வாழ்த்துப் பாட்டு பாடினார்.

பின்னர் மணமகன் குருசாமி பேசியது வருமாறு; —

''சகோதர, சகோதரிகளே! இன்றையத் திருமணத்திற்குப் பின் எங்களிருவரை அளவுக்கு மீறிப் புகழ்ந்ததில், என்னைப் பொருத்தமட்டில் சொல்லப்பட்ட புகழுரைகளுக்குக் காலையில் ஏதும் சொல்ல முடியாமல் போயினும் இப்பொழுது சில கூற விரும்புகிறேன்.''

''இன்று காலையில், நான் மிகத் தைரியசாலி என்றும், சீர்திருத்தக்காரன் என்றும் மற்றும் என் மீதுள்ள அன்பினால் ஏதேதோ சொல்லி, அளவுக்கு மேல் என்னைப் புகழ்ந்தீர்கள். அளவு கடந்த தியாகி என்றும் தீரனென்றும் கூறினீர்கள். அது தவறு. இத் திருமணத்தில் எனக்கு நஷ்டமெதுவுமில்லை. எனக்கு மனைவியாகக் கிடைக்கப் பெற்ற திருமதி குஞ்சிதம் போல் என் சமூகத்தில் ஒரு பெண்ணும் கிடையாது. சுயமரியாதை இயக்கம் வீறு கொண்டிருக்கும் இந்த நாளில் என் சமூகத்தில் ஒரு பார்ப்பனனைத் தள்ளி வைத்துத் திருமணம் நடத்த

முடியவில்லை. எனது சமூகம் என்று சொல்லப்படும் சேக்கிழார் பிறந்த சாதியில், எனது மனமொத்த ஒரு பெண்ணை அடைய முடியவில்லை என்பது எனக்கே அவமானமாக இருக்கிறது. எனது சமூகத்தின் மாணவர், மாணவிகளையும் என்னைப் போலவே ஆண் மக்களாக்க விரும்புகிறேன். என் சமூகக்தில் எண்ணற்ற பேரும் புகழும் உடைய பெரியவர்கள் பலர் இருந்தும், கல்வியறிவு உடைய பெண் ஒன்றுகூட இல்லை என்பது சமூகத்தின் பெரும் கேவல நிலையைக் காட்டுகிறது. எனது திருமணம் காதல் மணமாகும்—சமூகத்தின் நிலை நன்கு தெரிந்தவனாதலினாலேயே இம் மணம் கலப்பு மணமாக முடிய நேர்ந்தது ''

''அளவுக்குமீறி காலையில் நீங்கள் புகழ்ந்ததுபோல் நான் எந்தத் தியாகமும் செய்துவிடவில்லை. இந்த நிலைக்கு நான் வர நமது சுயமரியாதை இயக்கமும், ராமசாமியாரும், சகோதரர் ராமநாதனுமே காரணஸ்தர்களாவர் (பலத்த கையொலி). இன்றைய மணவாழ்த்துத் தந்திகளில் ஒன்று எனது கலப்பு மணத்தை ஆதரித்ததுடன், மாகாணம் விட்டு மாகாண மணங்களும், கண்டம் விட்டுக் கண்டமும் உள்ள பெண் ஆண்களுக்கும் திருமணம் நடைபெற வேண்டுமெனக் கூறி இருந்தது. இத்தகைய திருமணத்தை அதிகப்படுத்தவும் எண்ணுகிறேன்.'' என்று கூறி முடித்தார்.

பின்னர் மணமகள் செல்வி குஞ்சிதம் ஆங்கிலத்தில் பேசியதை திரு. ஜே. எஸ். கண்ணப்பர் தமிழில் மொழி பெயர்த்துச் சொன்னார். மணமகள் பேசியது :

''இன்றைய திருமணத்தின் கொண்டாட்டக் கூட்டத்தில் பேச எனக்குச் சக்தி கிடையாதாயினும் எனது அவாவை வெளியிட விரும்புகிறேன். நான் தமிழில் பேச முடியாமைக்கு வருந்துகிறேன்''.

''பெண்கள் நிலையைக் குறித்துப் பேசுமுன் எனக்கு முன் பேசிய நண்பர்கள் சொன்னதை நான் முழுதும் ஆதரிக்கிறேன்.

இந்தியப் பெண்கள் மிருகங்களாகவே இதுவரை கருதப்பட்டு வந்தார்கள். இதற்கு, பெண்கட்குக் கல்வியின்மையே காரண மாகும். பெண்கட்குக் கல்வியறிவு இல்லாமற் போனதற்கு, தாய் தந்தையர்களே காரண கர்த்தாக்கள். அறிவிலும் பலத்திலும், ஆண்களோடு பெண்கள் போட்டி போட முடியாது என நம்பிய காலமுண்டு. அக்காலம் இப்போது மலையேறிப் போய்விட்டது (கையொலி). இந்திய நாட்டுப் பெண் மக்கட்கு கல்வி இன்றியமை யாதது. ஆண் மக்களைப் போல் பெண் மக்களும் முன்னேற்ற மடைய வேண்டுமானால் அவர்களுக்குக் கல்வி கற்பதில் அவா இருக்கவேண்டும். உலகப் போட்டியில் நாம் கலந்துகொள்ளவேண்டு மானால் குடும்பத்தில் தகுந்த ஒற்றுமை இருக்க வேண்டும். இங்கு வரும்போது, பேச வேண்டுமென்று நான் வரவில்லை. தலைவர் கட்டளைக்கிணங்கி சில வார்த்தைகளைக் கூறினேன்: எனது பேச்சைத் தமிழில் மொழி பெயர்த்து உதவி புரிந்த கனம் கண்ணப் பரவர்களுக்கு நன்றி செலுத்தி எனது உரையை முடித்துக்கொள்ளு கிறேன்''

மணமக்களை வாழ்த்தி கண்ணப்பர் பேசியதாவது: —

'சகோதர, சகோதரிகளே! இன்று நான் சீர்திருத்த மடைந்த வனாகவே இருக்கிறேன். இதுவரையில் கனம் மந்திரிகள், பிரபலஸ் தர்களின் இத்தகைய ஆங்கிலப் பேச்சுகளை மொழி பெயர்த்துக் கூறச் சந்தர்ப்பம் கிடைத்ததுண்டு. ஆனால் இதுவரையில் நமது சுயமரியாதை இயக்கத்தில் ஈடுபட்டு, அதிலும் உயர் கலாசாலையில் பட்டம் பெறப்போகும் ஓர் சகோதரியின் ஆங்கிலப் பிரசங்கத்தை மொழி பெயர்த்துக் கூறும் பாக்கியம் எனக்குக் கிட்டியதில்லை. அது இன்று கிட்டியமைக்குப் பெருமையடைகிறேன் (கையொலி). துருக்கியில் வீரர் கமால் பாட்சா தோன்றினார். அன்னிய நாட்டுக் கொடுமையிலிருந்து துருக்கி இன்று விடுதலையடைந்து கம்பீரமாக சுதந்திரத்துடன் இருக்கக் காரணம் கமால் பாட்சாவே யன்றோ? அவருக்கு உதவியாக விளங்கியவர்கள் இளைஞர் களே ஆவர். நமக்கு திரு. குருசாமி தக்க சீர்திருத்த வீரரான இளைஞராகத் தோன்றியது போலவே, அங்கு எண்ணற்ற இளை ஞர்கள் தோன்றி கமால் பாட்சாவின் பொதுத் தொண்டிற்கு ஒத்த

துணைவர்களாக விளங்கினார்கள். அது போல, நமது குருசாமி போன்ற இளைஞர்களின் சமூகப் புரட்சியினாலேயே நாடு விடுதலை பெறவேண்டும்.

பெரியார் தமது வாழ்த்துரையில் ''சென்னையில் இத் திருமணத்தை நடத்த முடிவு செய்யப்பட்டிருந்தது. ஆனால், இத்தகைய சீர்திருத்தத் திருமணம் நடைபெறுவதால் உண்டாகும் உற்சாகத்தை இங்கு உபயோகப் படுத்திக் கொள்ளக் கூடிய அளவு சென்னையில் பயன் படாது போகும் என்பதாலேயே இத்திருமணத்தை இங்கு நடத்த நேர்ந்தது. திருமணத்திற்கு 60-க்கு மேற்பட்ட தந்திகளும் 200-க்கு மேற்பட்ட வாழ்த்துக் கடிதங்களும் வந்தன. இவைகளை அனுப்பியவர்கள் வேஷக்காரர் களல்லர். பொறுப்பற்றவர்களும் சாதாரணமானவர் களும் அல்லர். நமது மாகாணத்தின் அறிவாளிகள் என்பவர்களாலும், பொறுப்புள்ளவர்கள் என்பவர் களாலும் அச்செய்தி அனுப்பப் பட்டுள்ளது.

''இதுவரை நாம் சொல்லி வந்த நமது லட்சியங்களை காரியத்திலும் நடத்த ஆரம்பித்து விட்டதால், மிகப்பெரியவர்கள் எல்லோரும் இதை ஆதரிக்க ஆரம்பித்து விட்டார்கள்.

''குருசாமி தனது திருமணத்தைப் பற்றிப் பேசின போனது, ''இத் திருமணத்தினால் தனக்கு ஒரு கஷ்டமுமில்லை'' என்று கூறினார். அது தவறு. அவருக்குக் கலப்பு மணம் நடத்தவேண்டும் என்ற செய்தி வெளிவந்ததிலிருந்து வந்த கஷ்டங்கள் சொல்லக் கூடியதல்ல. கடைசியாக அவரது திருமண நாள் நெருங்கியதும், அவரது நிலக் குத்தகைக்காரர் அவருக்குச் சேரவேண்டிய இவ்வருட நெல் விற்ற பணத்தை அனுப்பாதிருக்குமாறு, அவர் சாதியார் தடுத்து விட்டார்கள். இன்னும் வெளியே சொல்லக்கூடாத பல தொல்லைகளுக்கிடையே தான் குருசாமி இத் திருமணத்தை நடத்திக் கொள்ள முடிவு செய்தார்.

''குருசாமிக்கு 50 ஆயிரம் ரூபாய்க்கு மேல் சொத்துடன் ஒரு பெண் கிடைக்க இருந்தது. அதை அவர் விரும்பவில்லை''

(குடியரசு. 15-12-1929)

திருமணத்திற்கு முன்பே ஆரம்பமான உறவினர்களின் எதிர்ப்பு பின்னும் பல்லாண்டுகள் நீடித்தது குருசாமியின் உறவினர் இல்லங்களில் குருசாமி இறந்ததாகக் கருதி அழுது, எண்ணெய் முழுக்கு வரை முழுகி, அவரை அவமானத்துக்கு ஆளாக்கினர்.

குருசாமியை வளர்த்துப் படிக்க வைத்து ஆளாக்கிய அத்தை மங்களம் அம்மையார் திருமணத்தில் கலந்து கொண்டு, கண் குளிரக் கண்டு மகிழ விரும்பினார். ஆனால் உறவினர்கள் திருமணத்தில் கலந்து கொள்ள முடியாதவாறு தடுத்துவிட்டனர். குருசாமிக்குத் திருமணமாகி சில ஆண்டுகள் வரை, அவருடைய உறவினர்களான முதலியார்கள் தங்கள் குடும்பங்களில் நடைபெறும் எந்த ஒரு நிகழ்ச்சியிலும் குருசாமியைச் 'சாதியைக் கெடுத்தவன்' என்று இகழ்ந்து பேசி மன ஆறுதல் பெற்றனர்.

தன்னை அழைக்காத பல உறவினர்கள் வீட்டுக்கு, வேண்டுமென்றே குருசாமி தம்பதி சமேதராகச் சென்றார்.

புது மணத் தம்பதிகள் திருக்கண்ணபுரத்திற்கு குருசாமியின் சிறிய பாட்டியார் இல்லத்திற்கு முதன் முதலாகச் சென்றபோது, அவரது பெரியம்மாவும் பாட்டியாரும் 'மரண ஒப்பாரி' வைத்து அழுதார்கள். மேலும் மதுரை, சோழவந்தான், பட்டுக்கோட்டை முதலிய ஊர்களிலுள்ள உறவினர் இல்லங்களுக்குச் சென்றபோதும் சுற்றத்தார் பல அவமரியாதைகளைச் செய்தனர்.

உறவினரின் இல்லங்களில் விருந்து சாப்பிட்ட போதெல்லாம், தம்பதிகளை வெளித் திண்ணையில் உட்காரவைத்துத்தான் சாப்பாடு போட்டனர். தன் மனைவியின் எச்சில் இலையை மட்டுமல்லாமல் கூட வந்த நண்பர்களான பட்டுக்கோட்டை விசுவநாதன், நாகை காளியப்பன் போன்றவர்களின் இலைகளையும் சேர்த்தெடுத்து எறிந்துவிட்டு, அந்த இடத்தில் சாணியிட்டு மெழுகும் வேலையையும் குருசாமியே செய்தார்.

குருசாமிக்கு, அவர் செய்து கொண்ட கலப்புத் திருமணம்,

தமிழ்நாட்டு இளைஞர்களிடையே பெருஞ் செல்வாக்கைத் தேடிக் கொடுத்தது.

திருமணமான ஒரு சில நாட்களில் நாகர்கோயில் மாநாட்டில் கலந்துகொள்ளச் சென்ற குஞ்சிதம்—குருசாமி தம்பதிகளை மதுரைக் கல்லூரி மாணவர்கள் கே.டி.கே. தங்கமணி தலைமையில் திருமங்கலம் புகைவண்டி நிலையத்தில் திரளாகக் கூடி 'குஞ்சிதம் குருசாமி வாழ்க' என்று வாழ்த்தொலி எழுப்பி வரவேற்புக் கொடுத்தனர்.

பாலதண்டாயுதம், அவ்வை டி.கே. சண்முகம் போன்றவர்கள் குருசாமியை உதாரணமாகக் கொண்டு தாங்களும் கலப்புத் திருமணம் செய்து கொண்டனர்.

பாலதண்டாயுதம் கலப்புத் திருமணம் செய்துகொண்டபோது, உறவினர்கள் கடுமையாக எதிர்த்தார்கள். உறவினர்களை மீறிக் கலப்புத் திருமணம் செய்துகொண்டார்.

அதைப்பற்றி அவரே விவரிக்கிறார் :

"என்னுடைய கலப்புத் திருமணத்தைப்பற்றி உறவினர்களுக்குத்தான் அருவருப்பு; மற்றவர்களுக்கு அதைப்பற்றிப் பெருமையே. ஆனால், உறவினர்களின் எதிர்ப்புத்தானே நம்மை நடுத் தெருவில் நிறுத்துகிறது. அநாதரவான அந்த நேரத்தில், தடுக்க முடியாத தங்கள் அன்பை மீண்டும் என்னிடம் செலுத்த அவர்கள் ஒரு சாக்குப் போக்குத் தேடவேண்டியிருந்தபொழுது, 'குருசாமி கலப்புத் திருமணம் செய்துகொள்ளவில்லையா? அவர் நன்றாகத்தானே இருக்கிறார்' என்று உலகத்திற்குப் பதில் சொல்லவும், தங்கள் மனத்தைச் சமாதானப் படுத்திக்கொள்ளவும் ஆபத்துபாந்தவராக வந்தவர் குருசாமி."

1929-ம் ஆண்டு டிசம்பர் மாதம் பெரியார் ஈ.வெ.ரா., நாகம்மையார், எஸ். இராமநாதன், பொன்னம்பலனார், சாமி, சிதம்பரனார், மாயவரம் நடராஜன் முதலானோர் மலாய் நாட்டுக்குச் சென்றனர். இந்த நேரத்தில் இயக்க வேலைகளையும் குடி அரசு — பத்திரிகை எழுத்து வேலைகளையும் குருசாமியே கவனித்துவந்தார்.

திருமணத்திற்குப் பிறகு புதிய தம்பதிகள் இருவரும் முதன்

முதலாக சலந்துகொண்ட மாநாடு நாகர்கோவிலில் நடந்த 'அகில திருவாங்கூர் சமுதாய சீர்திருத்த மாநாடுதான்! இந்த மாநாடு 1929 டிசம்பர் இறுதி வாரத்தில் நடைபெற்றது. மாநாட்டில் 'ரிவோல்ட் ஆசிரியர் குருசாமி' என்று அழைக்கப்பட்டார்.

இம் மாநாட்டில் குருசாமி பேசிய நாத்திக வாதப் பேச்சு கேரள நாட்டிலிருந்தும், தமிழ் நாட்டிலிருந்தும் வந்திருந்த பகுத்தறிவு வாதிகளுக்கும், தொண்டர்களுக்கும் புத்துணர்ச்சியை ஊட்டுவதாக இருந்தது. மாநாட்டில் கலந்துகொண்ட முக்கிய மானவர்களில் மன்னத்து பத்மநாபன், ஓய்வுபெற்ற உயர்நீதி மன்ற நீதிபதி டி.கே மாதவன், டாக்டர் எம்.ஏ. நெட்டோ, சி. அச்சுத மேனன், கே.பி. சையாலக், டி. ஃபிரான்சிஸ், முகமது முஸ்தாபா, டி.கே. சிதம்பரனார், பி.டி. ராஜன் முதலானோர் குறிப்பிடத் தக்கவர்கள்.

## குடும்ப வாழ்க்கை

திருமணத்திற்குப் பிறகு குருசாமி என்றால் குஞ்சிதம், குஞ்சிதம் என்றால் குருசாமி என்று ஆயினர். தமிழகத்தில் இருவரில் யார் அறிமுகமானாலும் 'ஈருடல் ஒருயிர்' என்ற நிலையில், தனித்தனியே பெயர் சொல்லி அழைக்கப்பட்டாமல் 'குஞ்சிதம்—குருசாமி என்றே அறிமுகம் ஆயினர். இந்த முறையில் வேறு எவரும் அழைக்கப்பட்டதாகச் சரித்திரம் இல்லை.

இருவரும் பகுத்தறிவு பற்றிப் பேசுவதும் எழுதுவதும் மட்டுமின்றி, அதிதீவிரவாதிகளாக வாழ்க்கையின் அனைத்து நடைமுறையிலும் நடந்தும் காட்டினர்.

பகுத்தறிவு மேதை பெட்ரண்டு ரஸ்ஸல் கணவன்-மனைவி உறவு பற்றிக் கூறுகிறார்.

"கணவனுக்கும் மனைவிக்குமிடையே முழுமையான சமத்துவ உணர்ச்சியிருக்க வேண்டும். ஒருவர் உரிமையில் மற்றவர் தலையிடவே கூடாது. இருவரிடையிலும் அப்பழுக்கில்லாத உடல் நெருக்கமும், உள்ளவொருமைப்பாடும் இருக்க வேண்டும். வாழ்க்கை நோக்கம் பற்றி ஒருமுகமான ஒற்றுமைக் குறிக்கோள் இருக்க வேண்டும்.

''உதாரணமாக, ஒருவர் பணத்தை மட்டுமே குறிக்கோளாகவும், மற்றொருவர் நற்பணியை மட்டுமே குறிக்கோளாகவும் கொண்டிருப்பது இல்லறத்துக்கே ஆபத்தாகும். கணவன், மனைவி இருவருள் ஒருவர் மற்றொருவரிடம் 'போலீஸ்காரராக' நடந்து கொள்வது தான் இல்லற இன்பத்துக்குக் கேடுதரும்.'''

''மணவாழ்க்கையென்பது வெற்றிகரமாக இருக்கவேண்டுமானால், சட்டம் என்ன கூறினாலும் சரி, தனிப்பட்ட வாழ்க்கையில் இருவரும் முழு உரிமையுடையவர்களாக இருக்க வேண்டுமென்பதை இரு சாராரும் அறிந்து கொள்ள வேண்டும்.''

பகுத்தறிவாளர்களான குருசாமி — குஞ்சிதம் தம்பதிகள் இதற்கு எடுத்துக்காட்டாக விளங்கினர்.

அம்மையார் நகைகள் அணிய வாய்ப்பைப் பெற்றிருந்தும் அணிவதில்லை. அதுமட்டுமல்ல, பூச்சுடுதல், பொட்டு வைத்தல் முதலியவற்றையும் நிறுத்திவிட்டார். இவைகள் மத சம்பிரதாயங்கள் என்றும், பகுத்தறிவுக்கு ஏற்றதன்று என்றும் கணவர் குருசாமி கூறியதைக் குஞ்சிதம் ஒப்புக்கொண்டார். பெண்களுக்குத் தாலி தேவையில்லை என்று குருசாமி கூறியதும் தன் கணவர் கொள்கைக்கு எத்தகைய களங்கமும் ஏற்படக் கூடாதென்பதற்காக உடனே கழற்றி விட்டார்! இப்படி இவர் நகை, பூ, பொட்டு, தாலி முதலிய சடங்குகளைச் செய்யாமல் பொது நிகழ்ச்சிகளுக்கும், புதிய நண்பர்களின் இல்லங்களுக்கும் செல்லும் போது குஞ்சிதத்தை அமங்கலமான விதவையென்று கருதி ஒதுக்கி விடுவர். இத்தகைய அனுபவங்கள் குஞ்சிதத்துக்கு வாழ்வில் இறுதிக்காலம் வரை கிடைத்தன. அப்போதெல்லாம் அம்மையார் சினம் கொள்ளாமல் சிரித்த முகத்துடன் இருந்து விடுவார்.

குஞ்சிதம்-குருசாமி திருமணத்திற்குப் பிறகு நடந்த சுயமரியாதைத் திருமணங்களில் எல்லாம் 'பெரியாரும் நாகம்மையும் போல்', 'குஞ்சிதமும் குருசாமியும் போல்'—என்று மேற்கோள் கூறி வாழ்த்துகின்ற அளவுக்குச் சிறப்படைந்தனர். நாடெங்கிலும் பெரியாரும் சுயமரியாதை இயக்கத்தினரும் இவர்களது சிறப்புகளையும் பெருமைகளையும் சொல்லிச் சொல்லி, பல கலப்புத் திருமணங்களையும், விதவைத் திருமணங்களையும் நடத்தினர்.

சொல்லப்போனால், பல ஆண்டுகள் சுயமரியாதை இயக்கம் வளரு வதற்கு 'குஞ்சிதம் குருசாமி' என்ற சொல் ஒரு ஊற்றாகவே அமைந்தது.

சென்னை திருவல்லிக்கேணி சிவராமன் தெருவில் குருசாமி தம்பதிகள் தங்கள் குடும்ப வாழ்வைத் தொடங்கினர். குருசாமியின் மாமனார் சுப்பிரமணிய பிள்ளை குடும்பமும் இவர்களுடன் வந்து சேர்ந்து கொண்டது.

1930 ஏப்ரலில், முன்பு தோல்வி யடைந்த பி.ஏ. வகுப்புத் தேர்வை மீண்டும் எழுதி வெற்றி பெற்றார் குருசாமி. குஞ்சிதம் குருசாமியும் இதே ஆண்டில்தான் பி.ஏ. வகுப்பில் தேர்வு பெற்றார். அம்மையார் முதல் தடவையிலேயே முதல் வகுப்பில் வெற்றி பெற்றார்.

பட்டமளிப்பு விழாவில் இருவரும் இணையாகவே சென்று கலந்து கொண்டு தங்களது பட்டங்களைப் பெற்றுக்கொண்டனர்.

ஈரோடு ஈ. வெ. ரா. இல்லம் சுயமரியாதை இயக்கத்தின் பாசறையாக இருந்ததென்றால், சென்னை குஞ்சிதம் குருசாமியின் இல்லம் சுயமரியாதை இயக்கத்தின் இரண்டாவது பாசறையாக அமைந்தது.

பெரியார் ஈ. வெ. ரா. சென்னை வரும்போதெல்லாம் இங்குதான் தங்குவார். மற்றும் பட்டுக்கோட்டை அழகிரிசாமி, ப, ஜீவானந்தம், பொன்னம்பலனார், சாமி சிதம்பரனார், எஸ். வி. லிங்கம், மாயவரம் நடராஜன், நாகை காளியப்பன், நாகை கே. முருகேசன், பாரதிதாசன் — போன்றவர்களுக்கும் குஞ்சிதம் குருசாமியின் இல்லம் சொந்த இல்லம் போல் ஆகியது.

சுயமரியாதை இயக்க வீரர்கள் தங்கும் காலங்களில் ஏற்படும் குடும்பச் செலவை ஈடுகட்ட, வீட்டு நகைகள் பக்கத்து வீட்டு மார்வாடிக் கடைக்கு அடிக்கடி போய் வரும். சில சமயங்களில் அண்டாவும், தவலையும் கூடப் போய் வருவதுண்டு. சில சந்தர்ப் பங்களில், குஞ்சிதம் அம்மையாரின் தங்கை காந்தம்மாளின் நகை களும் அடகுக் கடைக்குப் போய் வந்தன. இப்படிப்பட்ட நேரங் களிலும் விருந்தினர்களிடம் குஞ்சிதம் குருசாமி இனிய முகத்துடனே நடந்து கொள்வார்.

**பிறந்த ஊரில் வரவேற்பு**

பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு, பள்ளிச் சிறுவனாக சைவத் திருமேனியுடன், தமது தாய், தந்தை, தங்கைகளுடன், நாகைப் பட்டினத்திற்குச் சென்ற குருசாமி,

ஒரு உண்மைச் சுயமரியாதை வீரராக,

''எண்ணத்தில், எழுத்தில், பேச்சில், செய்கையில் எல்லாவற்றிலும் ஒரே மாதிரியான கொள்கையுள்ள ஒரு பெரியாராக,''

''கன்னற் பிழியொன்றைக் காதல் மணம் பூண்டு''

சாதியை ஒழித்த வீரராகத்

தாம் பிறந்த குருவிக்கரம்பைக் கிராமத்திற்கு 1930-ல் மீண்டும் வந்தார். தாம் குஞ்சிதத்துடன் வரவே நினைத்திருந்தார். சூழ்நிலை காரணமாக, அம்மையார் வர முடியவில்லை. குருசாமி மட்டும் தனியே வந்தார்.

கிராமப் பெரியவர்கள், ஆ.வயி.பாலசுப்ரமணியம் தலைமையில் ஒன்று திரண்டு, நாத்திக வீரரை—இளங் குத்தூசியாரை—ஊரின் எல்லைப் பகுதியில் நிறுத்தி, மாலை போட்டு, குதிரை மேல் ஏற்றி, மேளதாளக் கொட்டு முழக்குடன் கொம்பு ஊதி, வாண வேடிக்கை நடத்தி ஊருக்குள் அழைத்து வந்தனர்.

குருசாமி ஊர் மடத்தின் அருகில் ஒரு நீண்ட சொற்பொழிவாற்றினார்.

''நான் ஏன் நாத்திகனானேன்? ஏன் கலப்பு மணம் செய்து கொண்டேன்?'' என்பது பற்றிச் சிறந்த முறையில்-கிராம மக்கள் புரிந்து கொள்கின்ற வகையில் விளக்கினார்.

இச் சொற்பொழிவைக் கேட்டுக் கொண்டிருந்த இளைஞர்களில் ஒருவர் தான், 1935-ல் கலப்பு மணம் செய்து கொண்ட நாடியம் குழந்தையாவார்.

இக் கூட்டத்திலே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த சிறுவர்களில் ஒருவர், பிற்காலத்தில் 'ஜனசக்தி' ஆசிரியராக இருந்து வரும் 'தீக் கதிர்', 'செம் மலர்' ஆசிரியராக இருக்கின்றவருமான, கே. முத்தையா ஆவார். இவரும் கலப்பு மணமே செய்து கொண்டார்.

தாம் பிறந்த ஊருக்கு மட்டுமல்லாமல், சாதியாருக்கும் 1930

நவம்பர் 16-ல் ''தொண்டை மண்டல முதலியார்களே'' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதி, அந்தச் சாதியாரின் வைதீக மனப்பான்மையையும் மூடப்பழக்க வழக்கங்களையும் விட்டுவிட்டு, பகுத்தறிவுள்ள மனிதர்களாக வாழும்படி கேட்டுக் கொண்டார்.

தாம் பிறந்த சாதியின் பிற்போக்குத் தனத்தைக் கண்டித்து முதன் முதலில் அச்சமின்றி எழுதியவர் குருசாமியே ஆவார்.

## குருசாமியும் சிங்காரவேலரும்

இந்த நேரத்தில் குருசாமிக்கு மேலும் ஒரு புதிய அரசியல் ஆசானும் நண்பருமாகிய மா. சிங்காரவேலரின் அறிமுகம் கிடைத்தது.

சிங்காரவேலர் இந்தியாவின் முதல் பொதுவுடமை வாதி, மீனவர் சமுதாயத்தைச் சார்ந்த இவர், சென்னை, நொச்சிக் குப்பத்தைச் சொந்த ஊராக உடையவர்.

1860-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் பிறந்த சிங்காரவேலர், பெரியாரை விட வயதில் மூத்தவர். இவர் பி,ஏ. பி.எல், ஆகிய பட்டங்களைப் பெற்றவர். சிறந்த வழக்கறிஞர்; பழுத்த நாத்திகர்.

1902 ம் ஆண்டு இலண்டனில் நடந்த அகில உலக புத்தர் மாநாட்டில் இந்தியாவின் பிரதிநிதியாகக் கலந்து கொண்டார். மாநாட்டை முடித்துக்கொண்டு திரும்பிவரும்பொழுதே இலண்டனிலிருந்து நூற்றுக்கணக்கான பொதுவுடமை நூல்களை, 'இந்தியாவுக்குள் பொதுவுடமையைக் குறிப்பிடும் நூல்கள் நுழையக் கூடாது' என்ற பிரிட்டிஷ் அரசினரின் தடையை மீறி-யாருக்கும் தெரியாமல் கொண்டு வந்து சேர்த்தார்.

1907-ல் சூரத் நகரில் அகில இந்திய காங்கிரசு மாநாடு நடைபெற்றது. தீவிரவாத அணியின் தலைவராக இருந்த திலகர் மற்றும் வ. உ. சி., வி. சர்க்கரைச் செட்டியார் ஆகியோரை சிங்காரவேலர் ஆதரித்தார்.

இவர் 1915-ம் ஆண்டு கான்பூரில் நடைபெற்ற இந்தியப் பொதுவுடமை வாதிகளின் மாநாட்டுக்குத் தலைமை வகித்தார்.

1917-ல் நடந்த ரஷ்யப் புரட்சியை ஆதரித்து, முதன் முதலாக

சென்னையில் பொதுக் கூட்டம் நடத்தியவரும் இவரேயாவார்.

இந்தியாவிலேயே முதன் முதலாக 1918-ம் ஆண்டு ஏப்ரல் 27-ல் தொழிற்சங்கம் தொடங்கப்பட்ட காலத்திலிருந்தே திரு.வி.க., சர்க்கரைச் செட்டியார், முகுந்தலால் சர்க்கார் ஆகியோருடன் சேர்ந்து பல வேலை நிறுத்தப் போராட்டங்களை நடத்தியவர்.

1919-ம் ஆண்டு பிரிட்டிஷ் ஏகாதிபத்திய அரசு நடத்திய பஞ்சாப் படுகொலையைக் கண்டித்து, திரு.வி.க., சர்க்கரைச் செட்டியார் முதலானோருடன் அரசியல் தொடர்பான வேலை நிறுத்தத்தைச் செய்தவர். காந்தியாரின் ஒத்துழையாமை இயக்கத்துக்கு ஆதரவு தந்தவர் இவர்

சிங்காரவேலர் 1921 ல் வேல்சு இளவரசர் சென்னை வந்த போது மறியல் செய்தார்.

1923-ல் சென்னையில் விவசாயத் தொழிலாளர் இயக்கத்தை அமைத்து, இந்தியாவிலேயே முதன் முறையாகச் சென்னையில் மே தின விழாவைக் கொண்டாடியவர்.

'லேபர்-கிசான் கெஜட்' என்னும்ஆங்கில மாதமிருமுறை ஏட்டையும்'தொழிலாளர்' என்ற தமிழ் ஏட்டையும் நடத்தியவரும் சிங்கார வேலரே யாவர்.

சிங்காரவேலர், 1924-ம் ஆண்டில் கான்பூரில் நடந்த கம்யூனிஸ்ட் சதி வழக்கையொட்டி சென்னையில் கைது செய்யப்பட்டார். அந் நேரத்தில் அவரது உடல்நிலை பெரிதும் பாதிக்கப்பட்டிருந்ததால் ஜாமீனில் வெளிவந்தார். ஆனால் உடல் நலம் தேறியதும் தன் மீதான வழக்கை நடத்துமாறு ஆங்கில அரசுக்குத் தெரிவித்தார். கான்பூர் சதிவழக்கு முன்பே முடிந்துவிட்டபடியால், சிங்காரவேலர் மீதுள்ள வழக்கை நடத்தினால் மிகச் செலவாகும் என்று கருதி அரசு வழக்கைத் திரும்பப் பெற்றுக்கொண்டது.

1928-ம் ஆண்டு நடந்த தென்னிந்திய ரயில்வே தொழிலாளர்களின் பொது வேலைநிறுத்தத்தில் தலைமை தாங்கி நடத்தினார். இதற்காக 10 ஆண்டுக் கடுங்காவல் தண்டனையும் விதிக்கப்பட்டார். உயர்நீதி மன்றம் அத் தண்டனையை பதினெட்டு மாதங்களாகக் குறைத்தது. இத் தண்டனையைப் பெற்று,சிறையிலிருந்து விடுதலையடைந்தார். சிங்காரவேலர் சிறையிலிருந்து விடுதலை

யான இந்தச் சமயத்தில்தான் இவருடைய நெருங்கிய தொடர்பு குருசாமிக்குக் கிட்டியது. சிங்காரவேலரைப்பற்றி இவ்வளவு விரிவாகச் சொல்லக் காரணம், இவ்வளவு சிறப்பையும் அனுபவத்தையும் பெற்றிருந்த சிங்காரவேலரின் தோழமை குருசாமியின் கவனத்தைப் பொதுவுடமைக் கருத்துகளின் பக்கம் திருப்பியது என்பதை விளக்குவதற்காகவேயாகும். குருசாமியின் தோழமையின் விளைவாகவே, சிங்காரவேலர் 'குடி அரசி'ல் தொடர்ந்து கட்டுரைகள் எழுதலானார். சிங்காரவேலரின் எழுத்துகள் நீராகப் பாய்ந்து சுயமரியாதை இயக்கத்தை வளப்படுத்தின. இத்தனைச் சிறப்புகளையுடைய சிங்காரவேலரை எவ்வளவு புகழ்ந்தாலும் தகும்.

இப்பொழுதிருக்கும் திருவல்லிக்கேணி விவேகானந்தர் இல்லத்துக்கு அருகாமையில்தான் சிங்காரவேலரின் இல்லம் இருந்தது.

சிங்காரவேலர் இல்லத்திலிருந்த 'மார்க்ஸிஸ்ட்—லெனினிஸ்ட்' நூலகம் தமிழகத்திலேயே தனி நபரால் நடத்தப்பட்ட நூலகங்களிலேயே மிகப் பெரிய ஒன்றாகும். இதில் இருந்த சுமார் இருபதினாயிரம் நூல்களில் மிக அரிதான நூல்கள் பல்லாயிரக் கணக்கில் இருந்தன. இந் நூல்களில் பொதுவுடமைத் தொடர்புடையவை மட்டும் இரண்டாயிரத்துக்கு மேல் இருந்தன.

இந் நூலகத்திற்கு திரு.வி.க., சர்க்கரைச் செட்டியார் போன்றவர்கள் அவ்வப்போது வந்து தங்களுக்குத் தேவையான குறிப்புகளைக் குறித்துச் செல்வதுண்டு. குருசாமியும், குஞ்சிதம் குருசாமியும் இந்த நூலகத்தை முழுதும் பயன்படுத்திக் கொண்டவர்களில் மிக முக்கியமானவர்களாவர். எஸ். இராமநாதன், நாகை முருகேசன், ஏ. எஸ்.கே., ப. ஜீவானந்தம் போன்றவர்களும் இந்த நூலகத்தை நல்ல வண்ணம் பயன்படுத்தினர்.

சிங்காரவேலர் குருசாமி தம்பதிகள்மீது அளவுகடந்த அன்பு கொண்டவராக இருந்தார். மேலே குறிப்பிட்ட அறிஞர்களில், சிங்காரவேலரின் 70 வயது அனுபவத்தை முழுமையாகப் பயன்படுத்திக் கொண்டவர், குத்தூசி குருசாமி ஒருவரே!

வட சென்னையில் 'சென்னை சுய மரியாதைச் சங்கம்' என்ற ஒன்றும், தென் சென்னையில் 'மயிலாப்பூர் சுயமரியாதைச் சங்கம்' என்ற ஒன்றும் ஆக இரண்டு சங்கங்கள் அமைக்கப்பட்டன.

சிங்காரவேலர், குருசாமி, குஞ்சிதம் குருசாமி, கே.எம். பாலசுப்பிர மணியம், மயிலை சீனி வேங்கடசாமி, முத்து, தங்கராஜு, ரங்க நாதன் முதலானோர் உறுப்பினராக இருந்து, நகரத்தில் இயக்க வளர்ச்சியைச் செம்மைப்படுத்தினர். அப்பொழுது சென்னையில் முப்பது 'டிவிஷன்'களே இருந்தன. சென்னை நகரில் தொடக்க காலத்தில் சுயமரியாதை இயக்கத்தை வளர்த்தவர்கள் குஞ்சிதம் குருசாமி தம்பதிகளே யாவர். அவர்கள் கூட்டம் நடக்காத நாளே யில்லை; பாதங்கள் படாத தெருக்களே கிடையா; அவர்களின் குரலைக் கேட்காத மக்களே இல்லை!

## 'புதுவை முரசு' ஆசிரியர் குருசாமியும் புதுவைக் கவி பாரதிதாசனும்

புதுவை சுயமரியாதைக்காரரான நோயல், புதுச்சேரி சுய மரி யாதை இயக்கத்தின் முன்னணி வீரர்களிலொருவர். அவர் 'புதுவை முரசு' என்ற வார ஏடொன்றைத் தொடங்கினார். அந்த ஏட்டுக்கு ஆசிரியராக குருசாமியை இருக்கும்படி வேண்டிக்கொண்டார். அதற் கிணங்க குருசாமி 'புதுவை முரசு' பத்திரிகை ஆசிரியராகப் பொறுப்பேற்றார். 'புதுவை முரசை'யும் அதன் ஆசிரியரையும் பாராட்டிப் பெரியார் 'குடி அரசில்' எழுதி இருந்தார்.

> ''திரு. குருசாமியைப் பற்றி நாம் யாருக்கும் எடுத்துச் சொல்லவேண்டிய அவசியமில்லையென்றே கருதுகிறோம். அவர் பல நாட்களாக 'குடி அரசு'—'ரிவோல்ட்' பிரசுரத் திலும் முக்கியமானவராக இருந்து வருகிறார். சுயமரி யாதை இயக்கக் கொள்கைகளை முழுவதும் நன்றாக உணர்ந்தவர். ஆங்கிலத்திலும், தமிழிலும் போதிய பாண்டித்யம் உடையவர். உலகப் பொது அறிவும் பெற்ற வர். இவ்வியக்கத்திற்கே தனது வாழ்நாளைப் பயன் படுத்த கவலை கொண்டுள்ள ஓர் உண்மைச் சுயமரியாதை வீரர்''
>
> ''அவர் தமது சுயமரியாதை உணர்ச்சிக்கு ஏற்ற துணை நலம் கொண்டவர். ஆகவே அப்படிப்பட்ட ஒருவ ரால் நடத்தப்படும் பத்திரிகை—'புதுவை முரசு'—சுயமரி

யாதை உலகத்திற்குச் சிறந்த பயனளிக்கக் கூடியது என்பதில் யாருக்கும் சந்தேகம் இருக்காது.''

குருசாமி 'புதுவை முரசி'லும் தொடர்ந்து இயக்கக் கொள்கைகளையும், பகுத்தறிவுக் கருத்துகளையும் சிறந்த முறையில் விளக்கி, தக்க ஆதாரங்களுடன் எழுதிவந்தார்.

1931-ஆகஸ்டு மாத இதழ் ஒன்றில் ''அறிவிருக்கிறதா? என்ற தலையங்கக் கட்டுரையில், குருசாமி, கிறிஸ்துவ பாதிரியார்களின் பித்தலாட்டங்களைக் கண்டித்து எழுதினார். ஆத்திரங்கொண்ட பாதிரிகள், பட்டுக்கோட்டை 'சர்ச்சைச்' சேர்ந்த பெர்னாந்தேஜ் என்ற பாதிரியார் தலைமையில் புதுச்சேரியில் உள்ள மூன்று பாதிரிகளும் கூடி, 'புதுவை முரசு' பதிப்பாசிரியர் நோயல்மீது வழக்குத் தொடர்ந்தனர். இந்த வழக்குச் சம்பந்தமான நடவடிக்கையை அறிந்த குருசாமி, நோயலை அஞ்சாமல் தொடர்ந்து வழக்கை நடத்தச் சொன்னார். மூன்று ஆண்டுகள் வழக்குத் தொடர்ந்து நடந்தது. 1934 மார்ச் 4-ம் நாள் புதுவை கீழ்க்கோர்ட் நீதிபதியால் ரூபாய் 500 அபராதமும் ஒருமாத சிறைத் தண்டனையும் தீர்ப்பாக அளிக்கப்பட்டது

பாரிசிலுள்ள உயர்நீதி மன்றத்தில் வழக்கு 'அப்பீல்' செய்யப்பட்டது. வழக்கு சம்பந்தப்பட்ட குருசாமியின் பகுத்தறிவுக் கட்டுரைகள், பிரெஞ்சு மொழியில் மொழி பெயர்க்கப்பட்டு பாரிஸ் சென்றன.

அப்பீலை விசாரித்த பாரிஸ் நீதிபதிகள், 'புதுவை முரசி'ல் எழுதியவைகளில் குறைகள் ஏதுமில்லையென்றும், புதுவைத் தீர்ப்பு முறையற்றது என்றும் கூறி பதிப்பாசிரியர் நோயலுக்கு அளித்திருந்த தண்டனையையும் அபராதத்தையும் ரத்துசெய்தனர்.

இக் காலத்தில் வடநாட்டில் ராவணனுடைய 'பொம்மையைக் கொளுத்தும் சிறுபிள்ளை விளையாட்டுத்தனம்' பற்றி தமிழகத்திலிருந்து முதன் முதலாகக் கண்டனக் குரலை குருசாமி எழுப்பினார். 5-1-1931-ல் 'புதுவை முரசில்' இதுபற்றி அவர் எழுதினார்:

''கான்பூரிலும், வட இந்தியாவின் பல இடங்களிலும் ராவணன் இறந்த தினத்தைக் கொண்டாடுவதற்காக, ராவணனைப் போல் பத்துத் தலை இருபது கைகளோடு

பெரிய விக்கிரகம் செய்து, அதன் மீது ஈட்டிகளைச் செருகி அந்த விக்கிரகத்தைக் கொளுத்தினார்களாம்.

''இராமாயணம் என்பது 'ஆரியர்- திராவிடர்' சண்டையைக் குறித்து எழுதப்பட்ட ஒரு கட்டுக் கதை யென்பது, பகுத்தறிவோடு கூடிய மக்களுக்கு விளங்காமல் போகாது. மேற்கண்ட விஷயம் ஒரு 'மூடச் செய்கை' என்றே தோன்றுவதுடன், அதைச் செய்தவர்கள் 'அறிவில் லாத, பழைய புராணக் குப்பைகளாவார், என்ற சமா தானத்தோடு இருந்து விடலாம். ஆனால், ராமனை ஆரிய அரசன் என்று நினைத்து வணங்கிவரும் கூட்டத்தார் மாதிரி, தமிழ்நாட்டிலும் ராவணனைத் திராவிட அரசன் என்று கருதி அவன்பால் அன்புகொண்டு வரும் கூட்டத் தார், தங்களுடைய விரோதியாகிய ராமனுடைய சிலை யையோ, படத்தையோ வடநாட்டவர் சொல்வதைப் போலச் செய்து (கொளுத்தி) விழாக்கொண்டாடுவது பொருத்தமானது தானே? அவ்விதம் ராமன் சிலைசெய்து கொளுத்துவோர்களைப்பற்றி இனிக் கேள்விப்பட்டால் நாம் சிறிதும் ஆச்சரியப்பட மாட்டோம்''.

இவ்விதம் தொடர்ந்து ஏராளமான கட்டுரைகளை எழுதி, இன உணர்வு, சுயமரியாதை உணர்வுகளைத் தமிழர்களிடையே எழுப்பினார். இதனால் தமிழர்கள் புத்துணர்ச்சியும், புது உற்சாகமும் பெற்றுச் சுயமரியாதை இயக்கத்தில் பெருமளவில் சேர்ந்தனர்.

குருசாமி 'புதுவை முரசி'லும் தொடர்ந்து இயக்கக் கொள்கை களையும், பகுத்தறிவுக் கருத்துகளையும் சிறந்த முறையில் விளக்கி, தக்க ஆதாரங்களுடன் எழுதிவந்தார்.

குருசாமி 1930-ல் 'புதுவை முரசி'ல் ஆசிரியராக விளங்கிய போது, புதுவைக் கவிஞர் கனக சுப்புரத்தினமும் (பாரதிதாசன்) 'புதுவை முரசு' இதழில் தொடர்ந்து எழுதிவந்தார். இதன் விளைவாக, குருசாமிக்கு நல்ல நண்பர் கிடைத்தார்.

கவிஞர் சென்னை வந்தால் குஞ்சிதம் குருசாமி இல்லத்தில் தங்குவதும் வழக்கமாயிற்று. இங்கு வந்து தங்கும் ஏனைய இயக்கத்

தவர்களுக்கும் கவிஞர் நண்பரானார்.

குருசாமியின் அன்பாலும், பேச்சாலும், எழுத்தாலும், வாழ்க்கை நடைமுறையாலும் பெரிதும் கவரப்பட்டவர்களில் கவிஞரும் ஒருவர். கவிஞர் எந்தக் கவிதை எழுதினாலும் குருசாமிக்குப் படித்துக் காண்பிக்காமல் இருக்கமாட்டார். அப்படி எழுதிப் படித்துக் காட்டிய கவிதைகள்ல் பல குருசாமியின் இல்லத்திலேயே தங்கிவிடும். ஒரு சில அவ்வப்போது 'குடி அரசி'லும் வெளிவரும். குருசாமியும் கவிஞரை ஓய்ந்து இருக்கவிடாமல் எதைப் பற்றியாவது இடைவிடாமல் எழுதச் சொல்லித் தூண்டிக் கொண்டேயிருப்பார்.

1930-ல் 'சுயமரியாதைச் சுடர்' என்ற பெயரில் பத்துக் கவிதைகள் அடங்கிய சிறு நூலொன்றை கவிஞர், '**கிண்டற்காரன் C/o பாரதிதாசன்**' என்ற பெயரில் வெளியிட்டார். 'கிண்டற்காரன்' என்பது பாரதிதாசனின் இன்னொரு புனைப்பெயர்.

அச்சிறு நூலை ''**புதுவை முரசு ஆசிரியர் திரு. எஸ். குருசாமி பி.ஏ. அவர்களுக்கு ஸமர்ப்பணம்**'' என்று காணிக்கையாக்கினார்.

நயமறியா மக்கள் நலம் நாடி இனிய
சுயமரியாதைக் கொள்கைத் தூய்மையினைத் தன் அருமைப்
பாரத நாடெங்கும் பரப்பும் திருப்பணியில்
நேரடைந்த நல்லுணர்வு நித்தங்கனிந்துயர்ந்தே,
ஆங்கில 'ரிவோல்ட்டுக்கும்' ஆசிரியனாய் உழைத்தே,
ஈங்குரைப்பேன் மற்றும் உரைத்தபடியான் நடப்பேன்
என்ற நிசத்தைத்தான் எண்பிக்கக் காத்திருந்து,
கன்னற் பிழியொன்றைக் காதல்மணம் பூண்டு,
சமத்துவத்தின் சாரதியாய்த் தாக்குநரைத் தாக்கிச்
சுமக்கின்ற அன்பராய்ச் சொல்லால் எழுத்தால்
**சகம் எதிர்த்தபோதும் தனித்தெதிர்க்கும்** சேயாய்
அகங்கிடந்த வெள்ளத்தால் ஆரார்க்கும் அன்பனாய்த்
தன்நலங் காணக்கண் தவிர்ந்தவராய்த் தாரணியோர்
இன்னலத்தைக் காக்க இருநூறு தோளராய்

''எங்கேயோ சத்தம்! எதுதான் முழங்கிற்றோ
இங்கே நமக்கென்ன'' என்னாமல் பூவின்
மதுவைக் கவனிக்கும் வண்டுபோல் அந்தப்
'புதுவை முரசு' நிலை பொன்போல் அறிந்து
திருவாரூர்த் தேரைத் தெரிசித்துப் போக
வருவார் கழுத்து வளைக்க வளையாதது போல்
நட்டதலை நிமிர்த்தும் நம்பிக்கை யில்லாமல்
தொட்ட எழுதுகோல் தொட்டபடி யுழைக்கும்
**ஆசிரிய ராக அமர்ந்த குருசாமி**
**பேசரிய வாய்மையின் என் நண்பன் அன்னோன்**
உயர் புன் சமர்ப்பித்தேன்! உரைத்த இதன்பேர்
**'சுயமரியாதைச் சுடர்'**

நாற்பது வயதுக்காரரான கவிஞர் பாரதிதாசன், இருபத்து நான்கு வயது இளைஞரான குருசாமிக்கு அவருடைய வயதைக் கணக்கிடாமல், கருத்து வளர்ச்சிக்கும் தொண்டாற்றும் தூய்மைப் போக்குக்கும், துணிச்சலுக்கும், நேர்மைக் குணத்திற்கும் அளித்தது தான் இந்தப் பாராட்டுதலாகும்.

## பேச்சும் எழுத்தும்

சென்னையில் ஒரு சுயமரியாதை இயக்க மாநாடு நடத்த விரும்பிய குருசாமி, அம் மாநாட்டை நடத்தும் பொறுப்பை எஸ். வி. லிங்கத்திடம் ஒப்படைத்தார். சென்னையில் மாநாடு நடத்துவதற்கான இடத்தை எவரும் கொடுக்க முன்வரவில்லை. சுயமரியாதைக்காரர்கள் என்றால் கடவுளைத் திட்டுகிறவர்கள் என்ற அச்சம்தான் காரணம்.

இச் சூழ்நிலையில் எழும்பூரில் எஸ். அய். ஆர். அய்ஸ் பாக்டரிக்கு எதிரில் உள்ள சர்ச்சின் பாதிரியாரைச் சந்தித்து மாநாடு நடத்த இடம் கேட்டார் லிங்கம். பாதிரியார் முதலில் மறுத்துவிட்டார். ஆனால், லிங்கம் ஒரு தந்திரம் செய்தார். 'நாங்கள் இந்து மதத்திலுள்ள குறைகளைத்தான் எடுத்துச் சொல்லிக் கண்டிக்கப் போகிறோம். அது தங்கள் கொள்கைக்கும்

உகந்ததுதானே' என்று கூறினார். இறுதியில் பாதிரியார் ஒப்புக் கொண்டு இடம் அளித்தார்.

சர்ச்சை ஒட்டிய திடலில் மாநாட்டுக்கான பந்தல் போடப் பட்டு அதில் மாநாடு நடைபெற்றது.

மாநாட்டிற்கு மா. சிங்காரவேலர் தலைமை தாங்கினார். அழகிரியார், பொன்னம்பலனார், மாயவரம் நடராசன், லிங்கம், மயிலை சீனி. வேங்கடசாமி, குஞ்சிதம் குருசாமி முதலானோர் இந்துமத ஆபாசங்களையும், பார்ப்பனரின் கொடுமைகளையும் கண்டித்துப் பேசினர். பாதிரியார் உட்பட மக்கள் அனைவரும் சுவைத்து ரசித்தனர்.

இறுதியாகப் பேசிய குருசாமி, இந்துமதக் குறைபாடுகளைச் சிறிதுநேரம் கண்டித்துப் பேசியபின், கிறிஸ்தவ மதத்தின் குறை பாடுகளை, கொடுஞ்செயல்களைக் கடுமையாகக் கண்டித்துத் தக்க ஆதாரங்களைக் காட்டி, மிக்க ஆவேசத்துடன் பேசினார். ஜீன் மெஸ்லியரின் 'மரண சாசனம்,' பெர்ட்ரண்ட் ரஸ்ஸலின் 'நான் ஏன் கிறிஸ்தவனல்ல?'—போன்ற நூல்களிலிருந்து மேற் கோள்களை எடுத்துக்காட்டினார். குருசாமி சொற்பொழிவாற்றிக் கொண்டிருக்கும்போதே பாதிரியார் மெல்ல நழுவிவிட்டார்.

இந் நிகழ்ச்சிக்குப் பின் இம் மாதிரி ஒரு சிலருக்கு இடம் தந்து கொண்டிருந்ததையும் பாதிரியார் நிறுத்திவிட்டார்.

அக் காலத்தில் சென்னையில் கடற்கரையில்தான் பெரும் பாலும் இயக்கக் கூட்டங்கள் நடைபெறும். இக் கூட்டங்களை முன்னின்று நடத்துபவர்கள் எஸ். வி. லிங்கம், பொன்னம் பலனார், மயிலை சீனி. வேங்கடசாமி, ரங்கநாதன் முதலா னோரேயாவர்.

முக்கிய பேச்சாளராக மா. சிங்காரவேலர், குருசாமி, குஞ்சிதம் குருசாமி முதலானவர்களே இருப்பர்.

அழகிரியார், பாரதிதாசன், ஜீவானந்தம், நாகை காளியப்பன், நாகை முருகேசன், சாமி. சிதம்பரனார், சேலம் சித்தய்யன் முதலானோர், சென்னை வருகின்ற வாய்ப்பு ஏற்படும் போதெல் லாம் அவர்களும் கலந்து கொள்வர்.

கடற்கரையில் சுயமரியாதைக் கூட்டம் நடத்துவது மிக்க

வேடிக்கையானதாக இருக்கும். சுவரொட்டி எழுதுவது. ஒட்டுவ தெல்லாம் அழகிரியார், பொன்னம்பலனார், லிங்கம் ஆகியோரின் வேலை ; இந்தச் சுவரொட்டிகளுக்குப் பசை தயாரிக்கும் வேலை 'நாயனா' சுப்பிரமணிய பிள்ளையின் (குஞ்சிதம் தந்தையார்) தலையிலேயே விழும்.

கடற்கரையில் பொதுக்கூட்ட மேடையைத் தேட வேண்டு மானால், பொன்னம்பலனாரைத்தான் தேடவேண்டும் பொன்னம்பலனாரைத் தேட வேண்டுமானால் ஒரு சிறிய பெட்ரோமாக்ஸ் லைட் தனியாக எங்கே ஒளிவீசுகிறதோ, அங்கே தான் இருப்பார். அந்த இடம் தான் பொதுக்கூட்ட மேடை! அங்கே உடைந்துபோன பழைய மேஜை ஒன்றும், நாற்காலி ஒன்றும் இருக்கும். அந்த நாற்காலி ஸ்தானம் பெரும்பாலும் எழுபது வயதான மா. சிங்காரவேலுவுக்குத்தான் சொந்தம். (இன்று அந்த இடத்தில் மெரினா நீச்சல் குளம் இருக்கிறது. அக் காலத்தில் அந்த இடத்திற்கு 'திலகர்காட்' என்று பெயர் இருந்தது.

1930-ல் இராமநாதபுரம் மாவட்டம் திருப்பத்தூரில் ஒரு தாலுகா மாநாடு நடந்தது. இம்மாநாடு ஒரு வட்டத்தில் நடந் தாலும் பெரும் சிறப்பாக அமைந்தது. இந்த மாநாட்டை முன்னின்று நடத்தியவர் தேவகோட்டை சப் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் அன்று வழக்கறிஞராக இருந்த சோ. லட்சுமிரதன் பாரதியாவார். இவர், நாவலர் சோமசுந்தர பாரதியாரின் மகன் என்பது அனைவரும் அறிந்த செய்தியே யாகும்.

மாநாட்டிற்குச் சிறப்புப் பேச்சாளராக குருசாமியும் குஞ்சித மும் அழைக்கப் பெற்றிருந்தனர்.

மாநாட்டை யொட்டி நகரில் பல இடங்களில் வளைவுகள் வைத்திருந்தனர். அவைகளில் ஒன்று, 'சூத்திரன் என்றால் ஆத்திரம் கொண்டு அடி' என்பதாகும்.

இதனைக் கண்ட பார்ப்பனர்கள் திருப்பத்தூர் போலீசாரிடம் முறையிட்டனர். டி. எஸ். பி. யாக இருந்தவர் ஒரு பார்ப்பனர். அவர் திருப்பத்தூர் சப் மாஜிஸ்ட்ரேட்டிடம் சென்று ''இன்று நடக்க இருக்கும் சுயமரியாதை மாநாட்டினால் பெரும் குழப்பமும் கலவரமும் நடக்கப்போகிறது. ஆகையால், மாநாடு நடக்காமல்

தடை உத்தரவு போட வேண்டும்'' என்று வேண்டினார்.

மாஜிஸ்ட்டிரேட் கிறிஸ்தவர். அவர் அரசு வழக்கறிஞர் சொல்லை ஏற்காமல் உடனே மாநாடு நடக்கும் இடத்திற்கே நிலைமையை ஆய்ந்து அறிய வந்து விட்டார். முன்பே மாஜிஸ்டிரேட்டிற்கு அறிமுகம் ஆகியிருந்த லட்சுமிரதன் பாரதி அவருக்கு நன்றி தெரிவித்து, இயக்கத்தின் கொள்கையை விளக்கிக் கூறலானார். அப்பொழுது மாஜிஸ்ட்ரேட் அருகில் இருந்த டி. எஸ். பி. யிடம் குருசாமி, ''இப்பொழுது என்ன நடந்து விட்டது? எதற்காக இவ்வாறெல்லாம் கலாட்டா செய்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

அதற்கு பார்ப்பன டி.எஸ்.பி, ''சூத்திரன் என்ருல் ஆத்திரம் கொண்டு அடி, என்று எழுதியிருக்கிறீர்களே'' என்று சொல்ல, குருசாமி, ''ஆமாம், அதில் தவறு என்ன?'' என்றார்.

டி.எஸ்.பி. மறுபடியும், ''அப்படி எழுதலாமா?'' என்றார். குருசாமி ''நீங்கள் சூத்திரன் என்று சொல்ல விரும்புகிறீர்களா?'' என்று கேட்க, ''அவ்வாறு சொல்லப் போவதில்லை'' என்றார் அவர்.

''அப்படியானால் தங்களை எவரும் அடிக்கமாட்டார்கள். தமிழர்களைப் பார்த்து 'சூத்திரன்' என்று சொல்லுகின்றவன் எவனாக இருந்தாலும் அவனுக்கு குறிப்பிட்டுள்ள 'அடி' நிச்சயம் கிடைக்கும்'' என்றார். அதன் பின்னர் பார்ப்பன டி. எஸ். பி. மறுமொழி ஏதும் சொல்லாமல் திரும்பிவிட்டார்.

லட்சுமிரதன் பாரதி, குருசாமி, குஞ்சிதம் குருசாமி ஆகியோரின் கொள்கை விளக்கத்தைக் கேட்ட மாஜிஸ்ட்ரேட் சிரித்துக் கொண்டே மவுனமாகச் சென்று விட்டார்.

'சுயமரியாதை இயக்கத்திற்குத் தொடக்கத்தில் ஏற்பட்ட இன்னல்கள் பல. இழி சொற்களும், பழிசுமத்தலும், கொடூரப் பார்வையும் ஏளனச் சிரிப்பும், சுயமரியாதை இயக்கத்திற்கு எதிராகப் புறப்பட்ட 'இயக்கங்கள்'! சொல்லடியும், சாணியடியும், கல்லடியும், அழுகிய முட்டையடியும், கிழிந்த பழைய காலணிப் படையெடுப்பும், மிளகாய்ப் பொடி வீச்சும் சுயமரியாதை இயக்கத்திற்கு எதிராக வீசப்பட்ட 'படைக் கருவிகள்' இத்தகைய

வற்றையெல்லாம் துச்சமென மதித்து, எதிர்த்து நின்று, துகள் துகள்களாக்கி, வீறுநடை போட்ட பெரியார் அவர்களின் தூய்மை யான தொண்டர்களில் முதல் தொண்டராய் அக் காலத்திலேயே தன்னை ஆக்கிக்கொண்டவர் குருசாமி. தன்னுடைய பணியை புயல்வேகப் பிரச்சாரம் என்ற அளவில் மட்டும் அவர் நிறுத்திக் கொள்ளவில்லை; செயல் வேகமும் காட்டினார்.'

1931 ஜனவரி 1-ல் புதுச்சேரியில் சுயமரியாதை இயக்க மாநாடு நடந்தது. பெரியார் ஈ.வெ.ரா., சவுந்தரபாண்டியன், எஸ். இராமநாதன், குருசாமி, குஞ்சிதம் குருசாமி முதலானோர் மாநாட்டில் கலந்து கொண்டு பேசினர். சிறந்த சிந்தனை யாளரான குருசாமி, பேசுகின்றபோது, கத்தோலிக்க கிறிஸ்துவப் பாதிரிகளின் பித்தலாட்டங்களையும் சர்வாதிகாரப் போக்கையும் கண்டித்துப் பேசினார்:

> ''பகுத்தறிவு வாதி மதத்தை ஆய்வுக் கண் கொண்டே அணுகுகிறான். மனித இன வளர்ச்சி, சரித்திர சான்று இவைகளைக் கொண்டு மனித இனம் உருப்பெற்றதைக் காண்போமானால், மதம் சமூகத்தின் ஒரு கூறாகயிருந்து படிப்படியாக வளர்ந்து, இன்று — நாம் காணும் பெரும் வளர்ச்சி பெற்ற அமைப்பாக உருக்கொண்டதைக் காண லாம். இறந்த காலத்தில் மதம் வரலாற்றின் ஒரு பகுதி யாக இருந்து, ஒரு குறிக்கோளை நிறைவேற்ற உறுதுணை யாக இருந்தது. இன்று, அந்த மதம் எந்தக் குறிக் கோளையும் நிறைவேற்ற ஒத்துழைக்கவில்லை. மாறாக, மனித இன வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் முட்டுக் கட்டையாக இருந்துவருகிறது. மதத்தின் நீண்ட கால வரலாற்றில் மதம்—அறிவு வளர்ச்சிக்கு எதிராகப் போராடுவதையே தொழிலாகக் கொண்டு வந்திருக் கிறது''—என்று மதத்தைப் பற்றி நல்லதொரு விளக்க மும் கொடுத்தார் குருசாமி
>
> (குடி அரசு: 8—3—1931)

1931 ஏப்ரல் 7—8 தேதிகளில் நடந்த செட்டிநாட்டு முதலாவது சுயமரியாதை மாநாட்டை குஞ்சிதம் குருசாமி திறந்து

வைத்தார். குஞ்சிதம் குருசாமி ஆங்கிலத்தில் பேச, குருசாமி அப் பேச்சைத் தமிழில் மொழி பெயர்த்தார்.

''கனவான்களே, இவ்வியக்கம் தோன்றி நான்கு ஆண்டுகளாகின்றன. இந்தக் குறுகிய காலத்தில் தீவிர மாக முன்னேறி வருவது மிக வியப்பாகத் தோன்றலாம். இவ்வியக்கம் ஆரம்பத்தில் பார்ப்பனீயத்தையும், புரோகி தத்தையும் தாக்கி வந்தபோது, பலர் மகிழ்ச்சியடைந் தனர். பின்னர் சிறிது சிறிதாக சைவத்தையும், வைண வத்தையும் தாக்குவதோடல்லாமல், பொதுவாக இந்து, முகமதியர், கிறிஸ்தவர் முதலிய எல்லா மதத்தினரையும் தாக்க ஆரம்பித்ததும் பலருக்கு அதிருப்தி ஏற்பட்டது. வரவர கடவுளைப் பற்றியும், பலருடைய அபிப்பிராயங் களையும் தாக்க ஆரம்பித்தவுடன் பகுத்தறிவுள்ள சிலர் தவிர, பலர் இயக்கத்தின் மீது அதிருப்தியைக் காட்டினர். ஆனால், நாளாக ஆக அதிருப்தி அடைந்தவர்கள் ஒவ் வொருவராக நம்மியக்கத்திற்கு ஆட்பட்டு வருகிறார்கள்''

மாநாட்டில் குருசாமி பேசுகின்றபோது, இந்து மதத்தின் சீர்கேடுகளையும் அதனால் நாட்டு மக்கள் படுகின்ற அவதிகள் பற்றியும், தக்க ஆதாரங்களோடு அவரது இயல்பான பாணியில் பேசியதுடன், ''கோவில்களையே கட்டிக்கொண்டிருந்த செட்டி நாட்டுக்காரர்கள்—பகுத்தறிவுப் பக்கம் சாய்ந்தது கண்டு மகிழ்ச்சி அடைகிறேன். மேலும் மேலும் சுயமரியாதை இயக்கத்துக்கும் கொள்கைகளுக்கும் ஆதரவு தருமாறு வேண்டுகிறேன். என்று கூறினார்.

(குடியரசு — 19—4—1931)

1931 டிசம்பர் 13ந் தேதி பெரியார் ஈ. வெ. ரா. ராமனாத னுடன் அய்ரோப்பா பயணம் மேற்கொண்டார். இந்த நேரத்தில் சிங்காரவேலர், குருசாமி, குஞ்சிதம் குருசாமி, ப. ஜீவானந்தம், தி. பொ. வேதாசலனார், கா. மு. வல்லத்தரசு, லட்சுமிரதன் பாரதி, சாமி, சிதம்பரனார், மாயவரம் நடராஜன், நாகை முருகேசன், நாகை, காளியப்பன், பட்டுக்கோட்டை அழகிரிசாமி, பாரதிதாசன், இந்திராணி பாலசுப்ரமணியம் லீலாவதி, ராமா

மிர்தத்தம்மையார் முதலானோர் மிகத் தீவிரமான இயக்கப் பணியிலும் பகுத்தறிவுப் பிரச்சாரத்திலும், சமதர்மக் கருத்துகளைப் பரப்புவதிலும் ஈடுபட்டனர்.

குருசாமியும், குஞ்சிதம் குருசாமியும் தமிழகமெங்கும் நீண்டதொரு சுற்றுப்பயணத்தை மேற்கொண்டு, நல்ல முறையிலே பணியாற்றினர்.

1931 டிசம்பர் 26, 27 தேதிகளில் சென்னையில் சுயமரியாதை மாநாடு ஒன்றும், பெண்கள் மாநாடொன்றும் நடந்தன. இந்த மாநாடு பெரியார் ஈ. வெ. ரா. வெளிநாடு சென்றிருந்த நேரத்தில் நடந்த மாநாடேயானாலும் மிகச் சிறந்ததாக அமைந்தது. இந்த மாநாட்டை முன்னின்று நடத்தியவர்கள் - குருசாமியும், குஞ்சிதம் குருசாமியுமே யாவர்.

சுய மரியாதை மாநாட்டை மா. சிங்காரவேலர் தொடங்கி வைத்தார். பெண்கள் மாநாட்டுக்கு குஞ்சிதம் குருசாமி வரவேற்பாளராக இருந்தார்.

சுயமரியாதை மாநாட்டில் 'பொதுவுடைமை' என்பது பற்றி குருசாமி சிறந்ததொரு சொற்பொழிவாற்றினார். அதன் சாரம்:

> ''இன்றைய உலகில் ஒரு கணிசமான மக்கள் பிரிவினர் சமதர்ம ஆட்சிமுறையின் கீழ் வாழ்ந்து வருகின்றனர். மேலும் சிலகோடிப் பேர் இந்த ஆட்சிமுறையை நோக்கி விரைந்து சென்றுகொண்டிருக்கின்றனர். உலகில் புதுமைக்கும் பழமைக்கும் எல்லாத் துறைகளிலும் இடைவிடாத போராட்டம் நடந்துகொண்டே வந்திருக்கிறது. இதுதான் மனித வரலாறு.''
>
> ''பழமை செம்மையான அடிப்படையிலிருந்தால் அதன் மீது புதுமை எழும்புவதுமுண்டு. பழமை உளுத்துப் போயிருந்தால் அதை உடைத்து எறிந்துவிட்டுப் புதிய அடிப்படை எழும்பியிருப்பதுமுண்டு. 'பொருள் இல்லார்க்கு இவ்வுலகமில்லை' என்பது முழு உண்மையல்ல; அரை உண்மைதான். ஏனெனில், தனிப்பட்டவர் பொருளைச் சேமித்துக்கொள்ளாமலே இவ்வுலக வாழ்க்கையின் இன்பங்களை நுகரவும் முடியும். இதுபற்றி ஆராய்ந்த

உலகப் பெரியார்கள் பலர். கடந்த மூன்று நூற்றாண்டுக ளாகவே பொருள் யாரிடம், எந்த அளவுக்கு, எதற்காக, எந்த உருவத்தில் இருக்கவேண்டுமென்பது பற்றி இவர்கள் சிந்தித்திருக்கின்றனர். இச்சிந்தனையின் விளைவாக எழுந்த சமுதாயச் சீர் அமைப்பு முறைதான் சோஷியலிசம் -சமதர்மம்-பொதுவுடைமை என்பது. இக்கொள்கையை வெறும் ஏட்டுத் தேனாக யில்லாமல் நாட்டு நடைமுறை யாக ஆக்கி, விஞ்ஞான முறையில் வகுத்து உருவாக்கியவர் யார்?''

''கவிஞனாகத் தன் வாழ்க்கையைத் தொடங்கினார். வறுமையைப் போக்கும் வழிகாட்டியாகத் தன் வாழ்க் கையை முடித்தார். இவர்தான் கார்ல் மார்க்ஸ்!''

''1917-ல் ரஷ்யப் பெரும் புரட்சி நடந்தது. அதை நடத்தியவர் மாமேதை லெனின். அவருக்குப் பின்னா லிருந்த மாபெரும் சக்திதான் கார்ல் மார்க்ஸ். அவர் எழுதிய நூல்தான் 'மூலதனம்.' அவருக்குத் துணையாய் இருந்தவர் ஏஞ்செல்ஸ். 1847-ல் இலண்டனில் அய்ரோப் பிய கம்யூனிஸ்டுகள் மாநாடு நடைபெற்றது. இங்குதான் அப் மாமேதைகள் 'கம்யூனிஸ்ட் அறிக்கை' என்பதை வெளி யிட்டனர் 'பண்டைக்கால சமுதாயத்தின் வரலாறு முழுவ தும் வர்க்கப் போராட்டத்தின் வரலாறேயாகும் என்ற துவக்கவாக்கியத்தைக்கொண்டதாகும்' அந்த அறிக்கை.''

''பொதுவுடைமைப் புரட்சியைக் கண்டு ஆளும் வர்க்கத் தார் நடுங்கட்டும். இப் புரட்சியினால் பாட்டாளி மக்கள் தங்கள் அடிமைத் தளையைத் தவிர மற்ற எதையும் இழக்க மாட்டார்கள். உலகம் முழுவதையும் பெறுவார்கள். உலகப் பாட்டாளிகளே ஒன்றுபடுங்கள்! என்றனர்.''

''பொருளாதாரப் புரட்சி என்பது இன்றியமையாத இயற்கை நிகழ்ச்சி. பாட்டாளி உலகம் பொறுத்திருக்க வேண்டும். ஆனால், என்றும் ஆயத்தமாயிருக்கவேண்டும். இதுதான் மார்க்ஸிசத்தின் சாரம்''

''புதிய புரட்சிக் கருத்தைச் சூல் கொண்டுள்ள ஒவ்

வொரு பழைய சமுதாயத்துக்கும் பலாத்காரம் என்பவள் தான் மருத்துவச்சி என்றார் மார்க்ஸ்.''

''சுரண்டலும், வறுமையும் நெருக்கடியும் முதலாளித்துவத்தின் இன்றியமையாத தோழர்கள். முதலாளித்துவ உற்பத்திமுறையை ஒழிப்பதன் மூலமாகத்தான் மேற்கண்ட தீமைகளை ஒழிக்கமுடியும் – என்பதையும் மார்க்ஸ் குறிப்பிடுகின்றார்.''

''மதம் என்பது அழுத்திவைக்கப் பட்டுள்ள உயிரின் பெருமூச்சு; இதயமற்ற உலகின் இதயம்; உயிரற்ற சூழ்நிலைகளின் உயிர், மக்களின் அபின்—என்று மதம் பற்றியும் மார்க்ஸ் குறிப்பிடுகிறார்.''

இவ்வாறான நல்லதொரு பீடிகையுடன் தொடங்கிப் பொதுவுடமைச் சமுதாயத்தின் சிறப்புப் பற்றியும் வளர்ச்சி பற்றியும் விரிவாக குருசாமி விளக்கிப் பேசினார்.

தமிழகத்தில் பொதுவுடைமை இயக்கம் கால்கோள் கொள்ளாத 1931-ம் ஆண்டிலேயே பொதுவுடைமைக் கருத்துகளை, இந்தியாவின் முதல் பொதுவுடைமை வாதியான சிங்காரவேலருக்கு அடுத்தபடியாக, மிகமிகத் தெளிவுடன் ஆழமாகப் புரிந்துகொண்டு, தமிழகத்தில் பரப்பியவர்களில் குருசாமி முதன்மையானவர். இப்பேச்சில் பொதுவுடைமைக் கருத்துகளை அழகுத் தமிழில் சரியான முறையில் மொழி பெயர்த்துச் சொல்லி இருப்பது குருசாமியின் மொழிப் புலமைக்கு எடுத்துக் காட்டாக அமைந்துள்ளது.

கம்யூனிசக் கருத்துகளைத் தமிழில் தெளிவாக எடுத்துச் சொல்வதென்பது எளிதானதன்று. ஏராளமான ஆங்கில நூல்களைப் படித்தும், ஏராளமான ஆங்கிலக் கட்டுரைகளைப் பத்திரிகைகளின் தேவைகளுக்கு மொழிபெயர்த்தும் வந்தார் குருசாமி. அவர் ஆங்கில மொழியின் அகலத்தையும் நீளத்தையும் அளந்து உணர்ந்திருந்தார். தமிழிலே பேசுவதுபோல் ஆங்கிலத்தில் நுட்பத்துடனும், உணர்ச்சியுடனும், தெளிவுடனும் பேசக்கூடிய இருமொழி மேதை அவர்.

சுயமரியாதை இயக்கம் பொதுவுடமைக் கருத்துகள் பக்கம்

சாய்வதைக் கண்டு, நீதிக்கட்சித் – தலைவர்கள் ஒதுங்கியிருந்தனர். மா. சிங்காரவேலர், குருசாமி, குஞ்சிதம் குருசாமி, சாமி சிதம்பரனார், ப. ஜீவானந்தம், நாகை முருகேசன், எஸ்.வி. லிங்கம், பொன்னம்பலனார், மாயவரம் நடராஜன், கே. எம். பாலசுப்பிரமணியம் ஆகியோர்தான் முனைப்பாக இருந்து செயலாற்றி வந்தனர்.

பெரியார் ஈ.வெ.ரா. இராமநாதனுடன் எகிப்து, கிரீஸ், துருக்கி, ரஷ்யா, ஜெர்மனி, இங்கிலாந்து, ஸ்பெயின், ஃபிரான்ஸ், போர்ச்சுகல் முதலிய பல நாடுகளையும் கண்டு, கிட்டத்தட்ட ஓராண்டுக்குப் பின் இலங்கை வழியாக 11-11-1932-ல் தமிழ்நாடு வந்து சேர்ந்தார். பல நாடுகளைக் கண்டபோதிலும் பொதுவுடமை நாடான ரஷ்ய நாடு ஒன்றுதான் ஈ.வெ ராவைக் கவர்ந்தது.

பெரியார் ஈ.வெ.ரா. சுற்றுப்பயணத்திலிருந்து திரும்பியதும் சுயமரியாதை இயக்கத்தில் ஒரு திருப்புமுனை ஏற்பட்டது. சமுதாய சீர்திருத்த நோக்கத்தை மட்டிலும் கொண்டிருந்த இயக்கம், பொருளாதார மாற்றத்திலும் ஈடுபட முனைந்தது. இம் மாற்றத்துக்கு சிங்காரவேலர் பெருந் துணையாக நின்றார். அவர் சமதர்மத் திட்டம் என்றவொரு திட்டத்தை பெரியார் ஈ.வெ.ரா. முன்னிலையில் வைத்தார். இத்திட்டம் பற்றி முடிவு செய்ய 1932 டிசம்பர் 28 29 தேதிகளில் ஈரோட்டில் ஈ.வெ.ரா. இல்லத்தில் ஒரு கூட்டம் நடைபெற்றது. இக் கூட்டத்திற்கு தமிழ் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் சுயமரியாதை இயக்கத் தொண்டர்கள் அனைவரும் வந்திருந்தனர். திட்டமும் ஒருமனதாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. அது முதல், இயக்கத்தின் சீர்திருத்தப் பிரச்சாரத்துடன் சமதர்மப் பிரச்சாரத்தையும் சேர்த்துச் செய்தனர்.

"புதியதோர் உலகு செய்வோம்—கெட்ட
போரிடும் உலகத்தை வேரொடு சாய்ப்போம் (புதிய)
பொதுவுடமைக் கொள்கை திசையெட்டும் சேர்ப்போம்
புனிதமோ டதைஎங்கள் உயிரென்று காப்போம் (புதிய)
(பாரதிதாசன்—குடிஅரசு 1932)

— என்ற முழக்கத்துடன் தோழர்கள் பிரச்சாரத்தில் ஈடுபட்டனர்.

''சோதிடம் என்பது சுத்தப் புரட்டு'

இந்தக் காலத்தில் திருத்தணி காந்தி சோதிடர் சடகோபாச் சாரியார் என்பவர் மிகவும் பிரபலமானவராக இருந்தார். இவருடைய சோதிடக் கட்டுரைகளை, 'இந்து', 'சுதேசமித்திரன்' போன்ற பத்திரிகைகள் தொடர்ந்து வெளியிட்டன. இச் சோதிடர் 1924-லிருந்தே காந்தியாரைப் பற்றிப் பலமுறை சாதகம் கணித்துப் பலன் எழுதி வந்தார். அதனால் 'காந்தி சோதிடர்' என்று அழைக்கப்பட்டார்!

1930 ல் காந்தியார் உப்புச் சத்தியாக்கிரகத்தை யொட்டி கைது செய்யப்பட்டார். திருத்தணி காந்தி சோதிடர் 1930 ஜூன் 14 ஆம் தேதி 'இந்து' இதழில் ''மகாத்மா காந்தியும் சரோஜினி நாயுடுவும் சிறையிலிருந்து 1930 ஜூலை 10 ஆம்தேதி காலை 7.30 மணிக்கு விடுதலை செய்யப்படுவர்'' என்று சோதிடம் கணித்துச் செய்தியாக வெளியிட்டார். அவருடைய சோதிடக் கணிப்பு பலிக்காமல் தோல்வியடைந்தது!

காந்தியார் 1931 ஜனவரி 26 ஆம் தேதி 11 மணிக்குத்தான் விடுதலையானவர்.

சுயமரியாதை இயக்கத்தின் முன்னோடியான குருசாமி இதைப் பற்றிக் கண்டித்தார்.

1931-ல் சென்னைக் கல்லூரி மாணவர்கள் ஒய். எம். சி. ஏ தமிழ் மன்றத்தின் சார்பில் ஒரு பேச்சுப் போட்டி நடத்தினர். அதில் திருத்தணி காந்தி சோதிடர் 'சோதிடம் உண்மை' என்ற தலைப்பிலும், குருசாமி ''சோதிடம் பொய்'' என்ற தலைப்பிலும் பேசினர். கல்லூரி மாணவர்களும், படித்த அறிஞர்களும் அவையில் நிறைந்திருந்தனர்.

குருசாமி தமது பேச்சில் கூறியதாவது:

''அடிப்படையே இல்லாத முழுப் புரட்டுகளில் சோதிடம் என்பதும் ஒன்று. சாணியையும், கல்லையும் காட்டி 'கடவுள்' என்பது போன்ற பித்தலாட்டம்; மார்பு நூலை எடுத்துக் காட்டி 'உயர்ந்த ஜாதி' என்று கூறுவது போன்ற ஏமாற்று! பூமியா? சூரியனா? எது





சுற்றுகிறது என்பதையே அறியாத காலத்தில் பிறந்ததே சோதிடம் !

''சோதிடம் என்பது சுத்தப் புரட்டு' என்று திரு. சாமிக்கண்ணுப் பிள்ளை உள்ளிட்ட வானநூல் நிபுணர்கள் பலர் கூறியிருக்கிறார்கள்.''

''மனித வாழ்வில் பிற்காலத்தில் நேரப் போவதற்கும் லட்சக்கணக்கான மைல்களுக்கும் அப்பாலுள்ள கிரகங்களுக்கும் என்ன தொடர்பு இருக்க முடியும்? கடந்த இரண்டாயிரம் ஆண்டுகளாக முட்டாள்களும் எத்திப் பிழைக்கின்றவர்களுமான ஒரு கோஷ்டியின் கட்டுக் கதையை நாம் இந்த விஞ்ஞான காலத்தில் ஏற்றுக் கொள்ள முடியுமா !''

''அண்ணனுடைய பிறந்த நேரத்தையும், தங்கையினுடைய பிறந்த நேரத்தையும் சொல்லி (அவர்கள் இருவரும் உடன் பிறந்தவர் என்பதைச் சொல்லாமல்) இருவருக்கும் மணப் பொருத்தம் உண்டா என்றால், எந்தச் சோதிடரும் இருவரும் உடன் பிறந்தவர் என்று கூற முடியுமா ?''

''சில மாதங்களுச்கு முன்பு இறந்த 18 அல்லது 20 வயதுள்ள ஒரு பெண்ணின் ஜாதகத்தையும், சில ஆண்டுகளுக்கு முன்பு இறந்த 22 அல்லது 25 வயதுள்ள ஒரு இளைஞனின் ஜாதகத்தையும் கொடுத்து, இருவருக்கும் மணப் பொருத்தம் உண்டா என்றால், ஜோதிடர் மணப் பொருத்தம் உண்டு அல்லது இல்லை என்றுதான் சொல்லுவாரே தவிர, இருவரும் இறந்து விட்டனர் என்று சொல்ல முடியுமா ?''

''ஒரு கழுதை பிறந்த நேரத்தைக் குறித்து அதற்கு 'சரசுவதி' என்று பெயரிட்டு, ஒரு மனிதனுடைய பிறந்த நேரத்தையும் குறித்து இரண்டுக்கும் திருமணப் பொருத்தம் உண்டா என்றால், சரசுவதி கழுதை என்று காந்தி சோதிடரால் கூற முடியுமா ?''

இவ்வாறு பலப் பல கேள்விகளைத் தொடுத்து, சுமார்

1-30 மணிநேரம் பேசினார். இறுதியில் ஓட்டுக்கு விட்டதில் குருசாமியே வெற்றி பெற்றார்.

கூட்ட முடிவில் தனிமையில் குருசாமியின் ஆற்றலை காந்தி சோதிடர் மிகவும் வியந்து பாராட்டினார்.

குருசாமி பகிரங்க விவாதங்களுக்கு அஞ்சக் கூடிய சுபாவம் படைத்தவர் அல்லர். தான் கொண்டிருந்த கொள்கைகள் உண்மையானவை என்பதிலும், அவற்றை நிலை நாட்ட வேண்டும் என்பதிலும் அவருக்கு எப்பொழுதும் ஆர்வம் இருந்து வந்தது. குருசாமி சோதிடக் கலையை ஆராய்ந்து கற்றறிந்தவர் என்பதனை இந்தச் சந்தர்ப்பத்தில் குறிப்பிட்டே ஆகவேண்டும்

## கத்தோலிக்கர்களுக்கு மறுப்பு

பிரான்ஸ் நாட்டைச் சேர்ந்த ஜீன் மெஸ்லியர் என்பவர் ஒரு பாதிரியார். இவர் 1678-ல் டில்மாஸர்னி என்னும் ஒரு சிறு கிராமத்தில் நெசவாளர் குடும்பத்தில் பிறந்தவர். கிராமத்தில் பிறந்து வளர்ந்து வந்த போதிலும், தத்துவ சாஸ்திரங்களை நன்கு பயின்று, படிப்படியாக உயர்ந்து, குருபீடத்தை அடைந்தவர். அவர் 1733-ம் ஆண்டு தனது 55 வது வயதில் மரணம் அடைந்தார். அவர் இறந்தபின் அவரிடமிருந்து கிடைத்த கையெழுத்துப் பிரதிகள் பிற்காலத்தில் நூல்வடிவமாக வெளிவந்தன.

''அந்த நூலை குருசாமி 1931 ஜூன் 7-லிருந்து **'பகுத்தறிவு அல்லது கத்தோலிக்கக் குருவின் மரண சாசனம்'** என்ற பெயரில் 'குடிஅரசி'ல் தொடர்ந்து மொழிபெயர்த்து வெளியிட்டார்.

அம் மொழிபெயர்ப்புக் கட்டுரை மக்களிடையே மிக்க செல்வாக்குப் பெற்றதுமல்லாமல் கத்தோலிக்கர்களுக்கு நல்ல பாடம் கற்பித்தது.

பின்னர் இம் மொழிபெயர்ப்பு நூல்வடிவில் 'குடிஅரசு' வெளியீடாக வந்தது.

இதையடுத்து பெட்ரண்ட் ரஸ்ஸலின் 'நான் ஏன் கிறிஸ்தவனல்ல?' என்ற நூலையும் குருசாமி நல்ல தமிழில் மொழிபெயர்த்து நூல் வடிவில் வெளியிட்டார்.

இச் சமயம் ''பரமசிவனுக்கும் ஏசுநாதருக்கும் உரையாடல்'' என்ற தலைப்பில் 'குடிஅரசி'ல் குருசாமி ஒரு கட்டுரை எழுதினார். இக் கட்டுரை இந்து மதத்திலும் கிறிஸ்தவ மதத்திலும் உள்ள முரண்பாடுகளையும், ஆபாசங்களையும் வெளிப்படையாக விளக்கிக் காட்டியது. இதனைக் கண்ட சைவக் குரவர்களும் மடாதிபதிகளும், கிறிஸ்துவப் பாதிரிகளும் எரிச்சல் அடைந் தனர். அரசாங்கத்திடமும் முறையிடுகின்ற அளவுக்குச் சென்றனர்.

குஞ்சிதம் குருசாமி சென்னை ஞானமந்திரத்தில் கூடிய கூட்டம் ஒன்றில், 'கோவில் சொத்தை என்ன செய்யவேண்டும்?' என்று தலைப்பில் ஆற்றிய சொற்பொழிவு ஒன்றும், மதத் தலைவர்களை வெட்கித் தலைகுனியச் செய்தது.

குஞ்சிதம் குருசாமியின் சொற்பொழிவில் ஒரு பகுதி:-

''நான் சொல்லப்போகும் விஷயங்கள் ஜெகோரா (*Jehorah*) சொன்னார்; கிருஷ்ணபகவான் கீதையில் சொன்னார்; முகமது நபி திருவாய் மலர்ந்தருளினார்; வசிஷ்டர் சொன்னார்—என்று சொல்லி, நான் சொல் வதை நம்புங்கள், இல்லாவிட்டால் சாத்தான் பிடித்துக் கொள்வான், நரகத்தில் கொண்டுபோய்த் தள்ளப்படுவீர் கள் என்று, மதப்பிரசாரகர்கள் சொல்லுவபோல் சொல்லி, உங்கள் அறிவுக் கண்களைக் கட்டி ஏமாற்றிவிட்டுப்போக வரவில்லை. ஆனால் என் அறிவுக்குச் சரியென்றுபட்டதை உங்கள் அறிவுக்கு முன் வைக்கிறேன். தோழர்கள் அனை வரும் ஆராய்ந்து பார்த்துச் சரியென்று தோன்றுவதை ஒப்புக்கொண்டு தவற்றைத் தள்ளிவிடவும்.

மேல்சாதிக்காரர்கள், வயிறு வளர்ப்பதற்குத்தான் நம் நாட்டு இந்துக்கோவில்கள் உபயோகப்படுகின்றன. சிறு குழவிக் கற்களுக்காக, அல்லது பொம்மைகளுக்காக நகைகள், வாகனங்கள் என்ற பெயரால் கோடிக் கணக் கான ரூபாய்கள் பாழாக்கப்படுகின்றன.

தெருவில் நடக்கும்போது, அல்லது வண்டிகளில் போகும்போது ஓர் ஆண் ஒரு பெண்ணின்மீது பட்டுவிட் டால் கற்புக் கெட்டுவிட்டதாக கூக்குரலிடும் பலர் 'கோயி

லுக்குள்' செல்லும்போது மாத்திரம் ஆண்களும் பெண் களும் வேண்டுமென்றே ஒருவரையொருவர் இடித்துக் கொண்டு, 'கடவுள்' பெயரைச் சொல்லி அட்டூழியம் செய்கிறார்கள். இதற்குத்தான் கோயில் இடம் தருகிறது. இதுவும் போதாமல், கடவுளுக்கு அடியார் என்ற பெய ரால் 'தாசிகள்' என்ற ஒரு கூட்டத்தை வைத்துக்கொண்டு, அவர்களை ஆடச்சொல்லியும் பாடச் சொல்லியும் அவர் களைக் கடவுள் தரகர்களான அர்ச்சகர்கள் அனுபவிப்ப தற்கு – அதாவது சுருக்கமாகச் சொன்னால் நூற்றுக்கு நூறு கோயில்கள் விபச்சார விடுதிகளாகவே இருக் கின்றன.

இவ்வளவு கெடுதிகளுக்கும் காரணமாயிருக்கின்ற இந்துக் கோயில்களைத் திருத்தியமைத்துப் பள்ளிகளாக்க வேண்டும். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மேல்சாதிக் காரர்கள் என்பவரால் அழுத்தப்பட்டுக் கிடக்கும் ஆதித் திராவிட மக்களுக்கு இலவசமாகக் கல்வி கற்பிக்க வேண்டும். கடவுளுக்கு அவசியமில்லாத தங்க வாகனங் களையும், நகைகளையும் விற்று, ஆதித் திராவிடக் குழந்தைகளுக்கு உடையும், நூல்களும் வாங்கிக் கொடுக்க வேண்டும். பாலையே பார்த்திராத பாமரக் குழந்தை களுக்குப் பால் கொடுக்க வேண்டும். உற்சவங்களுக்குச் செலவழிக்கப்படும் இலட்சக் கணக்கான பணத்தைக் கொண்டு, நூல் நிலையங்கள் அமைக்கவேண்டும். இந்து மதக்கோயில்கள் அல்லாத சர்ச்சுகள், பள்ளிவாசல் களையும் இந்த முறையிலேயே அமைக்க வேண்டும்''

என்று முழக்க மிட்டார்.

1933 ஏப்ரல் 17-ல் சென்னை செயின்ட் மேரீஸ் ஹாலில் கத்தோலிக்கர்களின் மாநாடு ஒன்று நடந்தது. இதற்கு சென்னை ஆர்ச்பிஷப் தலைமை தாங்கினார். இந்த மாநாடு, சுயமரியாதை இயக்கத்தைத் தாக்குவதற்கென்றே கூட்டப்பட்டது. பெரியாரைப் பற்றியும், 'குடி அரசு'ப் பத்திரிகை பற்றியும், சமதர்மக் கொள்கை களையும் மிக்க ஆவேசமாகப் பாதிரிகள் தாக்கிய தோடல்லாமல்,

கண்டனத் தீர்மானங்கள் இரண்டை சுயமரியாதை இயக்கத்திற்கு எதிராக நிறைவேற்றினர்.

தீர்மானங்களை 'மெட்ராஸ் மெயில்' மற்றும் சில பத்திரிகைகள் பெரிய அளவில் வெளியிட்டன.

கத்தோலிக்கர்களின் இச்செயலுக்குப் பதிலடியாக 1933 ஏப்ரல் 30-ல் 'குடி அரசி'ல் குருசாமி, 'கத்தோலிக்கர்களின் ஆவேசம்' என்றவொரு கட்டுரையை எழுதினார். குருசாமி இக் கட்டுரையில் சுயமரியாதை இயக்கத்தின் மத எதிர்ப்புக் கொள்கையைப் பற்றித் தெளிவு படுத்தினார். கட்டுரையின் ஒரு பகுதி:

> "சுயமரியாதை இயக்கத்திற்கு ஒரு குறிப்பிட்ட மதத்தினிடமோ அல்லது ஒரு தனிப்பட்ட நபரிடமோ எவ்விதமான விரோதமும் கிடையாது. கத்தோலிக்கரிடம் எவ்விதமான சச்சரவும் நமக்குக் கிடையாது. ஆனால், சமீபகாலமாய்க் கத்தோலிக்கர்கள் மாத்திரம் எங்கு பார்த்தாலும் ஆவேசம் கொண்டு கிளம்புகிறுர்களே, அதற்குக் காரணம் என்னவென்ருல் — அவர்களுடைய அதாவது அந்த மதத்தினுடைய ஊழல்கள் வெளிப்பட்டு விடும் என்ற பயம்தான். சரக்கு நல்ல சரக்காக இருந்தால் 'செட்டியாருக்கு'க் கோபம் வரக் காரணமில்லை. அதைவிட்டு, செட்டியார் முறுக்கிலேயே சரக்கு விலையாகிக் கொண்டிருந்து, சரக்கின் தரம் சிறிது சிறிதாக வெளிப்படும் போது வியாபாரம் கெட்டுவிடுகின்ற காரணத்தால் செட்டியாருக்குக் கோபம் வருவது இயற்கைதான். முன்னொரு காலத்தில் 'ஹைபேஷ்யா' என்ற பெண்மணி கிறிஸ்துவ மதப் புரோகிதத்தைக் கண்டித்து எழுதியதற்காக, குருக்கள்மார்கள் அவ்வம்மையாருடைய துணிகளை உரிந்து விட்டு, அவளை சர்ச்சினுடைய பீடத்திற்குத் தூக்கிச் சென்று, அவளுடைய சதையைத் துண்டு துண்டாகக் கிழித்து எறிந்தார்கள். *(Socrates Ecclesiastical History B. C. 15)* கி.பி.— அதாவது 1500-வது ஆண்டு வரையில் கிறிஸ்துவர்கள் மதத்தின் பெயரால் அய்ரோப்பாவிலுள்ள யூதர்களை

உயிருடன் வைத்துக் கொளுத்தியதைச் சரித்திரம் படித்தவர்கள் மறுக்க முடியாது.''

''1572 ம் ஆண்டில் செயின்ட் பார்த்தலோமியோ தினத்தில் பத்தாயிரம் பிராட்டஸ்டண்ட் கிறிஸ்துவர்களை ரோமன் கத்தோலிக்கர்கள் சித்திரவதை செய்து கொன்றதையும், கிறிஸ்துவத் தோழர்கள் மறந்திருக்க மாட்டார்கள்.''

''15-ம் நூற்றாண்டில் புரோகிதக் கொள்கையைக் கண்டித்தவொரு காரணத்திற்காக ஜான்ஹஸ்(*John Huss*) என்ற மதப் பக்தரை உயிருடன் கொளுத்திய செய்தி சரித்திரப் புத்தகத்தில் இரத்தத்தால் எழுதப்பட்டிருக்கிறது.''

''மத ஆராய்ச்சி செய்த நூல்களையெல்லாம் கத்தோலிக்கர்கள் தடையுத்தரவு போட்டு ஒழித்தார்கள். இரு நூறு வருடங்களுக்கு மேலாகவே கோப்பர்நிகஸ், கலிலியோ (*Galileo*) போன்ற அறிஞர்களின் சாஸ்திரங்களைத் தடை செய்தார்கள். 1791-ம் ஆண்டில் டாக்டர் ப்ரிஸ்ட்லே (*Dr. Pristley*) என்பவருடைய நூலகத்தை, நாத்திகப் புத்தகங்கள் இருந்த காரணத்திற்காக தீயிட்டுக் கொளுத்தினார்கள். தாமஸ் பெயின் எழுதிய '*Age of Reason*'-என்ற புத்தகத்தை வெகுநாள் வரையில் சட்ட மூலமாய்த் தடுத்து வைத்திருந்தார்கள்.''

''இது மாதிரியான உதாரணங்கள் ஆயிரக்கணக்கில் எழுதலாம். இந்தச் - சந்தர்ப்பத்தில் *Hypatia - Bradlaugh - Bonner* என்ற சகோதரியின் வார்த்தைகள் நினைவுக்கு வருகின்றன. அவர் கூறியதாவது.''

"Every Church is an instrument of bondage. A great Church as the Catholic Church is a most powerful instrument.''

(ஒவ்வொரு கிறிஸ்துவ மதப் பிரிவும் ஓர் அடிமை விலங்காகும். கத்தோலிக்க மதத்தைப் போன்ற ஒரு பெரிய பிரிவு அதிக முரட்டுத்தனமான விலங்காகும்.)

''கத்தோலிக்கர்களிடத்திலோ, கிறிஸ்துவ மதத்தினிடமோ சண்டையிடுவதைவிட பல முக்கியமான வேலைகளிருக்கின்றன. கிறிஸ்து மதம் நல்ல மாடாயிருந்தால் உள்ளூரிலேயே விலைபோயிருக்கும். கத்தோலிக்கர்கள், பள்ளிக்கூடங்கள், நூல் நிலையங்கள், மருத்துவமனைகள் முதலிய பிரயோஜனமான காரியங்கள்செய்வதில் சுயமரியாதைக்காரர்களை விட மகிழ்ச்சியடையக் கூடியவர்கள் எவரும் இருக்கமாட்டார்கள். ஆனால், இவைகளையெல்லாம் காட்டி, மக்களைப் புரோகிதர்களுக்கும் குருட்டு நம்பிக்கைகளுக்கும், அறியாமைக்கும் இரையாக்கும்போதுதான் சுயமரியாதை இயக்கம் தன்னுடைய கடமையைச் செய்து தீர வேண்டியிருக்கிறது.''

''இன்று நடைமுறையில் இருக்கும் கத்தோலிக்க மதம் எத்தன்மையது என்று சுருக்கிக் கூறவேண்டுமானால் 'இந்து மதத்திலுள்ள ஊழல்களும், கிறிஸ்து மதத்திலுள்ள ஊழல்களும் சேர்த்துத் திரட்டிய பிண்டமே கத்தோலிக்க மதம்' என்று சொல்லலாம். இதையெல்லாம் விவரிக்க இங்கு இடமில்லை.''

''தோழர் பெர்னாட்ஷா அவர்கள் சமீபத்தில் ''*The Adventures of the Black Girl in Her Search For God*'' என்று ஒரு சிறு புத்தகம் எழுதியிருக்கிறார். அது முதன் முதல் 1932-ம் ஆண்டு டிசம்பரில் வெளியிடப்பட்டு 1933-ம் ஆண்டு ஜனவரி மாதத்துக்குள்ளாக இரண்டு மாதத்தில் எட்டுப் பதிப்புகள் வெளி வந்திருக்கின்றன. இப் புத்தகத்தில் அவர் கிறிஸ்து மதத்தைப் பற்றி வெளியிட்டிருக்கும் சில அபிப்பிராயங்களைக் கீழே தருகிறேன்.

''பைபிளைப் பற்றி அவர் கூறுவதாவது:

குரான், உபநிஷத், அராபிக் கதைகள், 'டைம்ஸ்' பத்திரிகையின் தலையங்கம், 'பஞ்ச்' பத்திரிகையின் வேடிக்கைப் படம் முதலியவைகளை எழுதியவர்களுக்கு எவ்வளவு 'அருள்' இருக்க வேண்டுமோ, அவ்வளவேதான் பைபிளை எழுதியவர்களுக்கும் இருக்க வேண்டும்.

அவைகளில் குற்றங்கள் இருப்பதற்கு எவ்வளவு இடமிருக்கிறதோ அதே மாதிரிதான் பைபிளிலும் குற்றமிருக்க வேண்டும். அதை விட்டு விட்டு, பைபிளில் இருப்பதெல்லாம் உண்மையென்று சொல்வது அசட்டுத் தனமாகும்.''

''தோழர் பெட்ரண்ட் ரஸ்ஸல் 'நான் ஏன் கிறிஸ்தவனல்ல' என்ற சிறு புத்தகம் எழுதியிருக்கிறார். நமது கிறிஸ்தவத் தோழர்கள் — முக்கியமாகக் கத்தோலிக்கத் தோழர்கள், தாங்களே மேதாவிகள் என்பதைச் சிறிது மறந்து, இந்த நூலை 'சகித்தான்'என்று அசட்டுத் தனமாகச் சொல்லிவிடாமல், ஒரு தரமாவது புரட்டிப் பார்க்கும்படி விரும்புகிறேன். அதில் ஒரு இடத்தில் அவர் கூறுகிறார் :

''அறிவிலாகட்டும், ஒழுக்கத்திலாகட்டும் கிறிஸ்துவை விட புத்தரும் சாக்ரட்டீசும் எத்தனையோ மடங்கு மேம்பட்டவர்கள் என்பது எனது அபிப்பிராயம். சரித்திர சம்பந்தமாகப் பார்க்கப்போனால், கிறிஸ்து என்ற ஒருவர் இருந்தாரோ என்பதே முழுச் சந்தேகமாக இருக்கிறது.

''உலக முன்னேற்றத்திற்கு முக்கியத் தடையாக இருப்பது கிறிஸ்து மதம்தான் என்பதை நிச்சயமாகக் கூறுவேன்''—என்று கூறியிருக்கிறார்.

''சுயமரியாதைக்காரர்கள்மீது காய்ந்து விழும் கத்தோலிக்க நண்பர்களுக்கு மேற்கண்ட இரு புத்தகங்களையும் அர்ப்பணம் செய்கிறேன். பெட்ரண்ட ரஸ்ஸல் அறிவாளியல்லவென்று கத்தோலிக்கர்கள் எளிதில் சொல்லிவிட முடியாது. சென்னை ஆர்ச் பிஷப்பின் அறிவைப்பற்றி உலகத்துக்கு எவ்வளவு தெரியுமோ, அதை விடக் கொஞ்சம் அதிகமாகவேதான், பெட்ரண்ட் ரஸ்ஸலைப் பற்றித் தெரியும் என்பதை நான் சொல்ல வேண்டியதில்லை. சென்னை ஆர்ச் பிஷப்பினால் உலகிற்கு எவ்வளவு நன்மையுண்டாகியிருக்கிறதோ, அதை விட பெட்ரண்ட் ரஸ்ஸல், பெர்னார்ட் ஷா ஆகியோரால் சற்றாவது அதிகமான நன்மைகள் ஏற்பட்டிருக்கு

மென்பதை கிறிஸ்துவ உலகம் – (*Christian World*) ஒப்புக் கொண்டே தீரும். ஆனால், நமது கத்தோலிக்கப் பாதிரி மார்கள் ஒரு பதில் சொல்லலாம். அவர்களிருவரும் 'சகித்தான்' அவதாரங்கள் என்று சொல்லிவிடலாம். ஆனால், எப்படியோ 'சகித்தான்'களுக்கு உலகத்தில் மதிப்பு ஏற்படவும் 'சகித்தான் இயக்கங்கள்' புயற்காற்று போல் வீசவும் ஆரம்பித்து விட்டன.

''இனி, ஆர்ச் பிஷப்புகள் கிறிஸ்துவின் மறு தோற்றத் திற்கு (*Second coming of Christ*) வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டியது தான். அல்லது, 'சகித்தான்' உலகத்தை விட்டு, 'கிறிஸ்து' இருக்கும் வேறு புண்ணிய உலகத்திற்குப் புறப்படுவதற்கு மூட்டை முடிச்சோடு தயாராயிருக்கவேண்டும். அல்லது, ஜீன் மெஸ்லியர் என்ற பாதிரியார் சொன்னது மாதிரி, ''இத்தனை ஆண்டுகள் அயோக்கியத்தனமாகப் பொய்யும் புரட்டுகளும் சொல்லி, அறியாமையிலும், மூடநம்பிக்கை யிலும் அழுத்தி வைத்ததற்காக நான் மக்களிடத்தில் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன்''—என்று ஒவ்வொரு பாதிரிமாரும் யோக்கியமாக ஒப்புக்கொண்டு, உலக முன்னேற்றத்திற்கு வேண்டிய துறைகளிலீடுபட்டு, ஏழை மக்களின் தொல்லையைத் துடைப்பதில் ஈடுபட வேண்டும்.

''கத்தோலிக்க மதத் தலைவர்களே! ஆத்திரம் வேண்டாம்; அகம்பாவம் வேண்டாம். ஸ்பெயினையும் ரஷ்யாவையும் ஒரு நிமிடமாவது நினைத்துப் பாருங்கள். மன்னாதி மன்னர்களெல்லாம் மண்ணாகி மடிந்தார் களய்யா.''

இந்தப் பதிலடிக்குப்பின் கத்தோலிக்கக் கிறிஸ்த வர்கள் மூச்சுப் பேச்சற்றனர். 'இந்து மதத்தை மட்டும் தான் சுயமரியாதைக்காரர்கள் தாக்குகின்றனர்; வேறு மதத் தைத் தாக்குவது தானே?' யென்று கேலியும், கிண்ட லும் செய்த குதர்க்கவாதக் கூட்டம் கூனியும், குறுகியும்

போனார்கள்.

கத்தோலிக்க தாழ்த்தப்பட்ட தோழர்கள் மிகப் பலர் மனம் திருந்தி 'மத விடுதலை' அடையவேண்டும் என்ற அளவுக்குத் தெளிவு பெறலாயினர்.

குருசாமி இசுலாமுக்கோ, இந்து மதத்துக்கோ அல்லது கிறிஸ்துவ மதத்துக்கோ வக்காலத்து வாங்கிக் கொண்டு ஆதர வாளராக இன்னொரு மதத்தை எதிர்ப்பவரல்லர்.

அவர் பரிபூரண கடவுள் மறுப்பாளர்; முழுமையான நாத்திகர்.

அவருக்கு இசுலாமியக் கடவுளானாலும், கிறிஸ்துவ மதக் கடவு ளானாலும், இந்து மதக் கடவுளர்-கடவுளச்சியர் ஆனாலும் ஒன்றுதான்.

இக் கொள்கைகளைத் தம் வாழ்நாள் முழுவதும் கைக்கொண் டிருந்தார்.

அவர், முகமது நபி பிறந்த நாள் விழாக்களிலோ, அல்லது வேறு மதக்காரர்கள் விழாக்களிலோ-பல முறைகள் அழைக்கப் பட்டும், ஒரு போதும் சென்று பேசியவரல்லர்.

மதத்தின் பெயரால் நடைபெறும் விழாக்களை அடியோடு வெறுத்துக் கண்டித்து ஒதுக்கினார்.

## குஞ்சிதம் குருசாமி

புரட்சி வீரரான குருசாமிக்கு எந்த வகையிலும் குறைந்தவ ரல்லர் என்று சொல்லத்தக்க அளவுக்குப் புரட்சி வீராங்கனையாகக் குஞ்சிதம் அம்மையார் திகழ்ந்தார்.

திருமணத்திற்கு முன்பிருந்தே குருசாமி துணை ஆசிரியராக இருந்த 'ரிவோல்டி'ல் புரட்சிகரமான கட்டுரைகள் எழுதியவர் இவர்.

குஞ்சிதம் அம்மையார் 1930-லிருந்தே அரசு ஊழியராகப் பணியாற்றியவர்.

முதலில் குஞ்சிதம் ராஜமகேந்திரபுரத்தில் ஆறு மாத காலம் ஆசிரியராக அலுவல் பார்த்தார். பின்னர், சென்னை லேடி வெலிங்டன் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் சேர்ந்து 1931-ல் எல்.டி பட்டம் பெற்றார்,

திருநெல்வேலியில் பள்ளித் துணை மேற் பார்வையாளராக (Sub Asst. Inspector) வேலை கிடைத்தது. கணவர் குருசாமி சென்னையிலேயே இருந்ததால், அவரைப் பிரிய மனமில்லாத குஞ்சிதம் குருசாமி, இப் பதவியை ஏற்க மறுத்து விட்டார்.

1932-ல் குஞ்சிதம் மயிலாப்பூர் தேசியப் பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் துணைத் தலைமை ஆசிரியராக அலுவலில் சேர்ந்தார். சுயமரியாதை இயக்கத்தில் சேர்ந்து விளம்பரம் பெற்றிருந்த குஞ்சிதத்திற்கு பார்ப்பன நிர்வாகிகளின் பொறுப்பிலிருந்த மயிலை தேசிய உயர்நிலைப் பள்ளியில் அலுவல் கிடைத்தது விந்தைதான்!

அம்மையார் அலுவலில் இருந்தாலும் இயக்கக் கொள்கைகளைப் பரப்புவதில் வழக்கம் போலவே முன்னணியிலிருந்தார்.

1933 மே 21-ல் ஸ்ரீரங்கத்தில் நடந்த சுயமரியாதை மாநாடு குஞ்சிதம் குருசாமி அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அந்த மாநாட்டுத் தலைமையுரையில் அம்மையாரின் பேச்சு, சுயமரியாதை இயக்கத்தினரை நாத்திகப் பிழம்புகளாக ஆக்கியது. இத் தலைமையுரையில் ஒரு பகுதி:

> ''இந்த மாநாடானது மிகவும் முக்கியமான இடத்தில் கூட்டப்படுகிற தென்பதைத் தங்களுக்கு நினைவூட்ட வேண்டுமென்பது அவசியமில்லை என்று கருதுகிறேன். சுயமரியாதை இயக்கம் எங்கே பரவினாலும் பரவாவிட்டாலும் ஸ்ரீரங்கம் போன்ற இடங்களில்தான் அவசியம் பரவ வேண்டும்.
>
> ''ரஷ்யாவில் முக்கிய தலைநகரத்தில் ஜார் (Czar) சக்கரவர்த்தியின் கொடுங்கோன்மையைக் காட்டும்படியான பல சாமான்களைக் கண்காட்சியில் பத்திரப் படுத்தி வைத்திருக்கிறார்களாம். அதுபோலவே, பின்னொரு காலத்தில் நமது நாட்டில் சமதர்ம அரசாட்சி ஏற்பட்டதும் சமதர்மக் கண்காட்சியில் வைக்கப்பட வேண்டிய சில பொருட்கள் இருக்கின்றன. அதில், இவ்வூர்க் கோவிலில் நீட்டி நிமிர்ந்து படுத்திருக்கும் கல்லும், (ஸ்ரீ ரங்கநாதர்!) அதற்காக ஏற்பட்டிருக்கும் (வெள்ளிச்) செருப்பும், வருடத்துக்கு ஒரு நாளில்

எல்லோரும் சொர்க்கத்திற்குப் போகும்படி அனுமதிக்கும் சொர்க்க வாசல் கதவும், அந்தக் கதவுக்கு இருக்கும் சாவியும் முக்கியமானதாகும். இவைகளையெல்லாம் வைத்து, இவைகளைக் காப்பாற்றுவதற்காக ஏற்பட்டிருக்கும் தரகர்களான இந்த ஊர் அய்யங்கார் ஒருவரின் திரேகத்தையும், அவருடைய நாமத்தோடு திராவகத்தில் போட்டுப் பத்திரப்படுத்தி வைக்கவேண்டும். இவைகளைப் பார்த்ததும், பின் சந்ததியார்கள், 'இதோ பார், நமது முன்னோர்களை அடக்கி ஆண்டு. நசுக்கிப் பிழிந்து, முழு மூடர்களாய் வைத்திருந்த சாதனங்களைப் பார்! இதோ இருக்கிறாரே, இவரைப் போன்றவர்கள்தான் கருங் கல்லைக் காட்டி, காசு பறித்து, ஜன சமூகத்தின் இரத்தத்தை உயிரோடு உறிஞ்சிய பாதகர்கள், என்று ஒருவருக்கொருவர் பேசிக் கொள்வார்கள்.

''கோவில்களின் மேல் சுயமரியாதைக்காரர்களுக்கு ஏன் இவ்வளவு வெறுப்பு? என்று மதப் பக்தர்கள் கேட்கிறார்கள். அவர்களுக்கு ஒரே ஒரு விஷயம்; இந்த ஊர்க் கோவிலை எடுத்துக் கொள்ளுங்கள். ஊர் விஸ்தீர்ணத்திற்குக் கிட்டதட்ட மூன்றில் ஒரு பங்குக்கு மேல் கோவில் அடைத்துக் கொண்டிருக்கிறது. இந்த ஊரில் 6000 பேருக்குக் குறையாமல், ஒண்டுவதற்குக் குடிசையில்லாமல் இருக்கிறார்கள். வீதிகளிலும் தோப்புகளிலும் திரிந்து கொண்டும், கூலி வேலை செய்துகொண்டும் ஒரு வேளை ஆகாரத்தோடும் இருக்கிறார்கள்.

''ஆனால், இதே ஊரில் எட்டடி நீளமுள்ள ஒரு கல்லைப், படுக்க வைத்து, அதற்கு ஒரு பெரிய மதில் கவரும், ஆறேழு பெரிய கோபுரங்களும் அமைக்கப்பட்டுள்ளன. பல லட்ச ரூபாய்கள் பெறுமானம் உள்ள தங்க, வெள்ளி வாகனங்களும், நகைகளும் செய்து வைக்கப்பட்டுள்ளன.

இப்படி லட்சக் கணக்கான ரூபாய்கள் ஒரு கல்லுக்காகச் செலவழிக்கப்பட்டு-அதுவும் ஒரு கூட்டம் மாத்திரம் நோகாமல், வயிறு வளர்ப்பதற்கு உபயோகப்பட்டு

வருகிறதென்றால் சமதர்மவாதிகளாகிய சுயமரியாதைக் காரர்கள் இவ்விதக் கோயில்களை அடியோடு தரைமட்ட மாக்கிவிட வேண்டுமென்று சொல்லுவதில் குற்றமென்ன? என்று நான் கேட்கிறேன். நம் இயக்கத்தின் பரம விரோதிகளான பார்ப்பனர்கள், ஒரு பக்கம் கத்தோ லிக்கர்களையும், மற்றொரு பக்கம் சர்க்காரையும் தூண்டி விட்டுக்கொண்டும் இருக்கின்றனர்.

''நமது சமதர்மத் தோழர்களைப் போலீசார் அடிக் கும் ஒவ்வொரு அடியும் சமதர்ம அரசாட்சியை இந்தியா வோடு சேர்த்துஅடிக்கும் ஒவ்வொரு ஆணிக்கும் சமமாகும். ஏழைகள் வாயில் மண்ணைப் போடுவதற்காக ஏற்பட்டி ருக்கும் மத ஸ்தாபனங்களையும், மதத் தலைவர்களையும் காப்பாற்றும் பொருட்டு ஒரு அரசாங்கமானது ஏழைகள் இயக்கத்தை, பாமரர்கள் இயக்கத்தை அடக்கி நசுக்க வேண்டுமென்று நினைப்பதானது கொழுந்து விட்டெரியும் நெருப்பை நெய்யைவிட்டு அணைப்பது போலவே ஆகும்.''

இந்த மாநாட்டில் பேசிய பேச்சின் விளைவாக, மயிலாப்பூர் தேசிய பெண்கள் பள்ளியின் நிர்வாகிகள், தோழியர், குஞ்சிதம் குருசாமி அவர்களை அநதப் பள்ளியின் ஆசிரியர் வேலையிலிருந்து நீக்கிவிட முடிவு செய்தனர்.

மாநாட்டிலிருந்து திரும்பிய மறுமாதமே மூன்று மாத முன் அறிவிப்புக்குப் பதிலாக, மூன்று மாதச் சம்பளத்தை (மாதம் 75 ரூபாய் வீதம்) கையில் கொடுத்து வேலையை விட்டு நீக்கினர். இது நடந்தது, 29-6-1933-ல்.

இந்த வெளியேற்றத்தை, தலைமை ஆசிரியையான மிஸ் வீல். (வெள்ளைக்காரர்) பள்ளி நிர்வாகிகளுடன் போராடி எவ்வளவோ எதிர்த்துப் பார்த்தார்; பயனில்லை. ''முடியாது! ''நம் பணத் தைத் தின்று கொண்டு நம் இனத்தையே தாக்குவதென்றால் சகிக்க முடியாது!'' என்று கூறி விட்டார்கள்.

இதையறிந்த பெரியார் தம் நிர்வாகத்திலிருந்த ஈரோடு மகாஜன உயர்நிலைப் பள்ளியில் வேலை பார்த்துக் கொண்டிருந்த 2—3 பார்ப்பன எல்.டி. ஆசிரியர்களை உடனே பழிக்குப்பழி

வாங்கி வெளியேற்றி விட்டார். அம்மையாரை வெளியேற்றிய நிர்வாகிகளின் பெயர்ப் பட்டியல் இது.

சர். பி.எஸ். சிவசாமி அய்யர்; சர் சி.பி. இராமசாமி அய்யர்; பெ. நா. அப்புசாமி அய்யர்; கே.வி. கிருஷ்ணசாமி அய்யர்; டி ஆர். வெங்கட்ராம சாஸ்திரி.

வெளியேற்றப்பட்ட மறுநாள், நிர்வாகிகளின் பேத்திகளான அம்மையாரின் மாணவிகள், இன்னும் 2 – 3 பெண்களை அழைத்துக் கொண்டு, வெள்ளிக் கோப்பைகளுடன் அம்மையாரைச் சந்திக்க வந்தனர். வீட்டுக்குள் வந்து அம்மையாரைப் பார்த்ததும் மாணவிகள் தேம்பித் தேம்பி அழுதனர்.

''ஏனம்மா வந்து விட்டீர்கள்? உங்களைப் போன்ற ஆசிரியை எங்களுக்கு எப்படிக் கிடைப்பார், அம்மா? எங்கள் ஸ்கூல் பிடிக்க வில்லையாம்மா, உங்களுக்கு?'' என்று அவர்கள் பன்னிப் பன்னிக் கேட்டுத் தேம்பித் தேம்பி அழுதனர்.

குஞ்சிதம் சிரித்துக் கொண்டே அவர்களுக்குச் சமாதானம் சொல்லி அனுப்பி வைத்தார்.

குஞ்சிதம் அம்மையார் வேறு இடங்களில் வேலைக்கு முயற்சி செய்தார்.

சென்னையிலுள்ள தனியார் பெண் பள்ளி ஒன்றில் பி. ஏ. எல்.டி. தேவை என்று நண்பர்கள் மூலம் கேள்விப்பட்டு, குஞ்சிதம் விண்ணப்பம் அனுப்பினார்; வேலையும் கிடைத்தது.

குஞ்சிதம் குறிப்பிட்ட நாளில் வேலையை ஒப்புக் கொள்ளச் சென்றார். அதற்கு ஒரு மணி நேரத்துக்கு முன்பு அப் பள்ளியின் நிர்வாகி தம்மைப் பார்த்துவிட்டுச் செல்லுமாறு பணித் திருந்தார்.

குஞ்சிதத்தை மரியாதையுடன் வரவேற்று உட்காரச் சொன்னார், நிர்வாகி.

''உங்கள் பெயர்தான் திருமதி குஞ்சிதமா?''

''ஆமாம்!''

''நீங்கள் இந்துப் பெண்தானே?''

''ஆமாம்!''

''நெற்றியில் ஏன் பொட்டு வைக்கவில்லை?''

''அப்படியே பழகி விட்டேன்.''

''சரி; இனியாவது பொட்டு வைத்துக் கொள்வதில் ஆட்சேபணை இல்லையே!''

''வைக்க வேண்டாமென்று முடிவு செய்திருக்கிறேன்.''

''உங்கள் கணவர் பெயர்?''

''குருசாமி.''

''அப்படியா? நான் கேள்விப்பட்டது சரியாகி விட்டது. உங்களைப் போன்ற நாத்திகர்களுக்கு எங்கள் பள்ளியில் வேலை தரமுடியாது: நீங்கள் போகலாம்!''

சுயமரியாதை இயக்கத்தைச் சேர்ந்தவர் என்னும் காரணத்துக்காகத் தொடக்க காலத்தில், குருசாமியைப் போலவே,-அம்மையார் பட்ட துன்பங்கள் ஏராளம், ஏராளம்!

அம்மையாரின் வேலை நீக்கத்தைக் கண்டித்து — பெரியார், ''பார்ப்பனர் ஒழிப்புத் திருநாள்'' என்று 'குடி அரசி'ல் ஒரு துணைத் தலையங்கமே எழுதினார்.

''சாதிப் பிரிவு சம்பந்தமான உயர்வு, தாழ்வு இருக்கும் வரை, நாட்டில் துவேஷம், வெறுப்பு, வகுப்பு உணர்ச்சி ஆகிய காரியங்களும் ஒரு வகுப்பாரால் ஒரு வகுப்பு கஷ்டமடையும் காரியங்களும் எதிர்பார்த்துத் தான் இருக்க வேண்டும்.?'

''இதற்கு ஒரு உதாரணம்: தோழியர் குஞ்சிதம் அம்மாளை யாவருக்கும் தெரியும். அந்த அம்மாள் பி. ஏ. எல். டி, பாஸ் செய்தவர்கள். அதிலும் யோக்கியதா பக்ஷத்தோடு உயர்ந்த வகுப்பில் பாஸ் செய்தவர்கள். அவர்களின் கல்வித் திறமை, போதிக்கும் திறமை, பிள்ளைகளிடம் அன்பாய் இருக்கும் திறமை, சரீராப்பியாச விளையாட்டுக்களில் உள்ள திறமை முதலியவைகள் அந்தம்மாள் வேலை செய்த பள்ளிக்கூடத் தலைமை உபாத்தியாயரின் நற் சாக்ஷிப் பத்திரத்தில் காணலாம். இப்படிப்பட்ட அம்மாள் மைலாப்பூரில் ஒரு பார்ப்பன ஆதிக்கமுள்ள பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயராக மாதம் 75-ரூபாய் சம்பளம் வாங்கிக் கொண்டு வந்தார்.

''அந்தம்மாள் யாதொரு தப்பிதமும் செய்துவிட வில்லை. இரண்டொரு இடங்களில் பகுத்தறிவுப் பிரசங்கங்கள் செய்தது தவிர யாதொரு பாவத்தையும் அறியார். அப்படிப்பட்டவர்களை தோழர்கள் பி. எஸ். சிவசாமி அய்யர், டி. ஆர். வெங்கிட்டராம சாஸ்திரி, சி. பி. ராமசாமி அய்யர், அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் ஆகியவர்கள் போன்றவர்கள் நிர்வாகக் கமிட்டி யாய் இருக்கும் பள்ளிக்கூடத்தில் அந்தம்மாளுக்கு 'இனி வேலையில்லை' என்று நோட்டீஸ் கொடுத்து வீட்டுக்கு அனுப்பிவிட்டார்கள் என்றால், வகுப்பு உணர்ச்சியில் மக்கள் பாதிக்கப்படாமல் இருக்க முடியுமா என்று யோசித்துப் பாருங்கள்.''

''இந்தப்படி ஒரு பார்ப்பனரல்லாதார் ஆதிக்கமுள்ள ஸ்தாபனங்களில் இருந்து தகுந்த ஒழுக்கக் குறைவுள்பட ஒரு குற்றத்துக்காக ஒரு பார்ப்பனரை நீக்கிவிட்டால், அக்கிரகாரம் முதல் கொண்டு சர்க்கார் அதிகாரிகள்— ஹைகோர்ட்டு வரை அந்த ஸ்தாபனத்தின் மீது பழி வாங்க நினைக்கிறார்கள். 'பிராமணத் துவேஷம்' 'பிராமணத் துவேஷம்' என்று கூப்பாடு போடுகிறார்கள்.

''பார்ப்பனர்கள் தங்கள் ஆதிக்கத்தில் இருக்கிற எந்த ஸ்தாபனங்களிலாவது 100-க்கு 10 வீதமாவது பார்ப்பன ரல்லாதார்களுக்கு வேலை கொடுக்கிறார்களா? எனப் பார்த்தால் வகுப்புத் துவேஷம் யாரிடத்தில் இருக்கிறது என்பது விளங்கும்.

''ஆதலால், பார்ப்பனரல்லாத மக்கள் இனியாகிலும், இவ் விஷயங்களை உணர்ந்து, அதற்குத் தகுந்தபடி நடந்து கொள்ள முயற்சிப்பதுடன், காந்தி ஜெயந்தி, கிருஷ்ண ஜெயந்தி, ஹரிஜனநாள், ஏகாதிபத்திய ஒழிப்புநாள் மே டே என்பது போன்ற நாள்களை வருஷத்துக்கு ஒரு நாள் கொண்டாடுவதுபோல் ''பார்ப்பன ஆதிக்க ஒழிப்பு நாள்'' என்பதாக வருஷத்தில் ஒரு நாள் கொண்டாட ஏற்பாடு செய்ய வேண்டுமென்றும் அதை

அடுத்து வரும் தீபாவளிக்கு அடுத்த நாளோ, அல்லது முந்திய நாளோ வைத்துக் கொள்வது நல்லது என்றும் அபிப்பிராயப் படுகின்றோம்.''

(குடி அரசு - 10, ஆகஸ்ட் 1933)

## குருசாமி - காந்தியார் உரையாடல்

காந்தியாருக்கு இந்தியா முழுமையும் நல்ல செல்வாக்கிருந்த போதிலும், தமிழ்நாட்டில் மட்டும் சுயமரியாதை இயக்கத்தினரின் எதிர்ப்பு இருந்து வந்தது.

குருசாமி காந்தியாரைச் சந்தர்ப்பம் கிடைக்கும்போதெல் லாம் கடுமையாக விமர்சித்தே வந்தார்.

காந்தியார் 1931ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 17ஆம் நாள் இலண்டன் கிங்ஸ்லி ஹாலில், கொலம்பியா கம்பெனி யாருக்காக 'கடவுள்' என்னும் பொருள் பற்றி ஆங்கிலத்தில் ஒரு சொற்பொழிவு பதிவு செய்தார். அந்தக் கிராமபோன் பிளேட்டில் கொடுத்த பேச்சை குருசாமி தமிழில் மொழி பெயர்த்து 'குடி அரசி'ல் வெளியிட்டதுடன், அக் கருத்துகளுக்குத் தொடர்ந்து, 'காந்திக் கொலம்பசு கண்டுபிடித்த அமெரிக்கா' என்னும் தலைப்பிட்டு 31. 1. 1932 'குடி அரசு' இதழிலிருந்து தொடர்ந்து மறுப்புக் கட்டுரைகள் எழுதினார்.

காந்தியாரின் இந்துமதப் பிரச்சாரத்தையும் வர்ணாசிரமப் பிரச்சாரத்தையும் கண்டித்தும், தமிழ் நாட்டில் பொதுவுடைமைக் கருத்துகளும் பகுத்தறிவுக் கருத்துகளும் தீவிரமாகப் பரவி யிருப்பது பற்றியும், நேருவின் புரட்சிகரமான மத—சமுதாய—பொருளாதாரக் கருத்துகளைத் தமிழர்கள் வரவேற்கிறார்கள் என்றும், நேரு தென்னாட்டுக்கு வந்து பிரச்சாரம் செய்தால் நல்ல பலன் தரும் என்றும் 1933 டிசம்பரில் திருமதி குஞ்சிதம்குருசாமி நேருவுக்குக் கடித மெழுதினார்.

நேருவும் சமாதானம் தரக்கூடிய வகையில் குஞ்சிதம் அம்மை யாருக்கு ஒரு பதில் கடிதம் எழுதினார். காந்தியாரிடம், தமக்கு முரண்பாடு இருந்தும், காந்தியாரை விட்டுக் கொடுக்காமல் நேரு எழுதினார்.

ஆனந்தபவன், அலகாபாத், 15. 12. 1933.

அன்புள்ள தோழியரே,

தங்கள் கடிதம் கிடைத்தது. தென் பகுதிக்கோ அல்லது வேறு பகுதிக்கோ, நான் இச் சமயம் சுற்றுப் பிரயாணம் செய்யக் கூடிய வசதியில்லை. பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு எதிராக தீவிரமான போராட்டப் பிரச்சாரம் செய்வதும், அதே நேரத்தில் நமது விடுதலை இயக்கத்தை நடத்தக் கூடிய புதியதத்து வத்தைப் பரப்புவதும்தான் இன்று எனது முதல் வேலையாக இருந்து வருகிறது.

நீங்கள் காந்தியாரைப் பற்றி எழுதியுள்ள எல்லாவற்றையும் நான் ஏற்றுக் கொள்ள முடியாது என்பது உங்களுக்குத் தெரிந் திருக்கலாம். சில பிரச்சினைகளில் முக்கியமாக, பொதுவான கண்ணோட்டத்தில், நான் அவருடன் கருத்து வேறுபாடு கொண் டிருப்பவன் என்பது உண்மையே—ஆனால், நம் நாட்டை நீண்ட உறக்கத்திலிருந்து தட்டியெழுப்பி, புரட்சிகரமான முறை"யில் செய்கையில் இறங்குமாறு செய்வதில் அவர் அருந்தொண்டு ஆற்றி வருகிறார் என்பது என் முடிவு.

புரட்சிகரமான செய்கையிலிருந்து புரட்சிகரமான கருத்து கள் முளைத்தே தீரும். ஆதலால், புரட்சிகரமான செய்கை களைத் தொடர்ந்து நடத்திவர வேண்டுமென்பதை நான் வரவேற் கிறேன். ஆனால் அப் புரட்சி நடத்தைக்குப் பின்னால் உள்ள தத்துவங்கள் எல்லாவற்றையுமே நான் ஏற்றுக் கொள்வதாகக் கூறிவிட முடியாது. துணிகரமான தத்துவங்களைப் பற்றி வாயளவில் பேசிக் கொண்டு, செய்கையில் துணிவோ புரட்சியோ, ஒரு துளியும் இல்லாமல் இருப்பவர்கள் நம் நாட்டில் ஏராளமா யிருக்கின்றனர். வெறும் புத்தக சோஷலிஸ்ட் அல்லது கம்யூனிஸ் டாகவோ, திண்ணைப் பேச்சு சோஷலிஸ்ட் அல்லது கம்யூனிஸ் டாகவோ உள்ள இந்தக் கூட்டத்தில் ஒருவனாக நானும் இருக்க விரும்பவில்லை. நான் செயலாற்றலில் நம்புகிறவன்; ஆனால், அந்தச் செயலானது, எண்ணங்களையும் கருத்துகளையும் அடிப் படையாகக் கொண்டதாயிருக்க வேண்டும்.

நம் நாட்டுப் பாமர மக்களைத் தட்டி யெழுப்பி, சக்தியூட்

டியதில் காந்தியாரின் பாதையில் காங்கிரஸ் இயக்கம் செய்துள்ளது போல், கடந்த சில ஆண்டுகளில் வேறு எந்த நிகழ்ச்சியும் நடந்திருப்பதாகக் கூறமுடியாது.

இது ஒரு மகத்தான லாபம். ஏனெனில், பொது மக்கள் ஒரு தடவை எழுந்துவிட்டால் மனித சக்தி கட்டவிழ்ந்து புறப்பட்டுவிடும். அதன் விளைவாக எண்ணங்கள் வளரத் தொடங்கிவிடும். செய்கையில்லாத வெறும் கருத்துப் பிரச்சாரம் பயனற்றுப் பாழாகிவிடும்.

நீங்கள் விரும்பினால் இக் கடிதத்தை வெளியிடலாம்,

உங்கள் அன்புள்ள,

(ஒப்பம்) ஜவகர்லால் நேரு

இக் காலத்தில் காந்தியார் தமிழ் நாட்டுக்கு வருகை தந்தார். அவரை சுயமரியாதை இயக்கத்தினர் சந்திக்க முடிவு செய்தனர் தமிழ்நாடு சுற்றுப்பயணத்தை மேற்கொண்ட காந்தியார் சென்னை மயிலை நாகேஸ்வரராவ் பந்துலு வீட்டில் தங்கியிருந்தார். அது சமயம் குருசாமியும், இராமநாதனும் காந்தியாரைச்சந்திக்க விரும்பினர்.

21 12-1933 அன்று காலை எட்டு மணியளவில் குருசாமி, இராமநாதன், குஞ்சிதம் குருசாமி, ப. ஜீவானந்தம், கே. எம். பாலசுப்பிரமணியம், காந்தம்மாள் (திருமதி சுந்தரவடிவேலு) மற்றும் பலருடன் காந்தியரைச் சந்தித்தனர்.

காந்தியாரோடு மீராபாயும் அவரது இரண்டு செயலாளர்களும் இருந்தனர். உரையாடலினிடையே சென்னை கே. பாஷ்யம் அய்யங்காரும் கலந்துகொண்டார்.

காந்தியார் ராமநாதனை நோக்கி, ''நீங்கள் பகுத்தறிவு இயக்கத்தில் சேர்ந்தவர் என்று - நேற்றுத்தான் எனக்குத் தெரிய வந்தது.'' என்று சிரித்துக் கொண்டே கூறினார்.

ராமனாதன் தன்னுடன் வந்தவர்களைக் காட்டி, ''இவர்கள் சுயமரியாதை இயக்கக்காரர்கள். தங்களைக் கண்டு பேச வந்திருக்கிறார்கள்'' என்று அறிமுகப்படுத்தி வைத்தார்.

காந்தியார் ; (தலையை அசைத்துக் கொண்டே) ''மகிழ்ச்சி'', என்று கூறி, ''ஆகவே, நீங்கள் எல்லோரும் அறிவு வாதிகளா?''

என்றார். அதற்கு இராமநாதன், ''அறிவுவாதி, சுயமரியாதைக் காரன் ஆகிய இரண்டு வார்த்தைகளும் ஒரே பொருளைக் குறிப்பதுதான்'' என்று கூறினார்.

காந்தியார் : ''சுயமரியாதை இயக்கத்தைப் பற்றி நான் நன் கறிவேன்'' என்றார்.

சிறிது நேர உரையாடலுக்குப் பின் காந்தியாரிடம்,

குருசாமி : ''கோயிலில் தாழ்த்தப்பட்டவர்களை தற்காலம் 'சூத்திரர்' என்பவர்கள் போகும் இடம் வரை தானே அனுமதிக்க வேண்டுமென்று ஓரிடத்தில் கூறியிருக்கிறீர்கள்?''

காந்தியார் : ''இல்லை, ஒருக்காலும் சொல்லவேயில்லை.''

குருசாமி : ''ஆம், தாங்கள் கூறியிருப்பதாக சென்னைப் பத்திரிகைகளிலெல்லாம் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.''

காந்தியார் : ''அப்படியிருந்தால் காட்டுங்கள், பார்ப்போம்.''

இராமநாதன்: ''அப்படியானால் நாங்கள் கூறுவது தவறா?''

காந்தியார் ; ''ஆம் தவறு தான். ஆனால், பத்திரிகைகள் நான் கூறுவதை, சந்தர்ப்பங்களை விட்டு விட்டுப் பிரித்துப் பிரிசுரிப்பதால் இத்தகைய குற்றம் நேரிடுகிறது. ஜாதி இந்துக்கள் எவ்வளவு தூரம் செல்லுகிறார்களோ அதுவரை அரிஜனங்களை அனுமதிக் கலாம் என்பது என் அபிப்பிராயம்.''

குருசாமி : ''அரிஜனப் பிரச்சாரத்திற்காக வரவழைத்துத் தங்களைச் சூழ்ந்திருக்கும் அத்தனை பார்ப்பனர்களும் ஜாதி வெறியர்கள், ஜாதிக் கர்வம் பிடித்தவர்கள் என்பதையும், பெரும் புரட்டர்கள் என்பதையும் அறிவீர்களா?''

காந்தியார் : ''எல்லோரும் அப்படி யில்லை.''

குருசாமி : ''ஆமாம், 100-க்கு 99¾ பார்ப்பனர்கள் அப்படித்தான். எங்களுடன் தயவு செய்து திருவல்லிக் கேணித் தெருக்களுக்கும், மயிலாப்பூர் தெருக்களுக்கும் வருவீர்களேயானால், அத்தனைபார்ப்பனர்கள்வீட்டிலும் பார்ப்பனர்களுக்கு மட்டிலும் வாடகைக்கு விடப்படும் — '*To Let For Brahmins Only*' என்னும் போர்டு தொங்க விட்டிருப்பதைக் காணலாம். இதே ஆசாமிகள்தான் இன்று தங்களோடு அரிஜனப் பிரச்சாரம் செய்கிறார்கள்.

இது எவ்வளவு அயோக்கியத்தனம் என்று பாருங்கள்.''

காந்தியார் : (சிரித்துக் கொண்டே) ''பதட்டம் வேண்டாம். நானும் பார்ப்பனர் கொடுமைக்கு ஆளாகியதுண்டு; இன்னும் ஆளாகி வருகிறேன். அறிவும், கல்வியும் பெற்றிருக்கும் ஒரு கூட்டம், மற்ற கூட்டங்களின் மேல் ஆதிக்கம் செலுத்துதல் இயல்பு. உதாரணமாக, கணவனையும் மனைவியையும் எடுத்துக் கொண்டால் மனைவி மேல் கணவன் ஆதிக்கம் செலுத்துவது இயல்பு. என் மனைவி எனக்கு அடிமையாகவே இருந்தாள். இன்னும் இருக்கிறாள். இதிலிருந்து கணவனுக்கும், மனைவிக்கும் அன்பில்லையென்று சொல்ல முடியுமா?''

K.M. பாலசுப்பிரமணியம்: ''அத்தகைய கணவர்கள் கூட்டம் எமக்குத் தேவையில்லை.''

காந்தியார் : ''அப்படிச் சொல்லமுடியாது. அறிவுள்ளவர்கள் ஆதிக்கம் செலுத்துவதென்பது மனித இயற்கை.''

குருசாமி : ''இல்லை. அது மனித இயற்கையல்ல. பார்ப்பனர்கள் நல்லவர்கள் தான். ஆனால், அவர்களுடைய மதமானது அவர்களை அயோக்கியர்களாக்குகிறது.''

காந்தியார் : ''ஜாதி வெறித்தனமும், அயோக்கியத்தனமும் எங்குமுண்டு என்பதை ஒப்புக் கொள்கிறேன். ஆனால், பார்ப்பனர்களிலும் யோக்கியர்கள் இருக்கிறார்கள்.''

குஞ்சிதம் : ''இந்து மதமானது பார்ப்பனரைத் தவிர, வேறு யாருக்காவது, எந்த விதத்திலாவது, எவ்வித பலனையாவது அளித்திருக்கிறதா?''

காந்தியார் ; ''அப்படிச் சொல்லிவிட முடியாது. மதம் இல்லாமல் எந்தத் தேசமும் இருக்க முடியாது.''

குஞ்சிதம் : ''இல்லை. ஒரு தேசமிருக்கிறது. அது தான் ரஷ்யா!''

காந்தியார் : ''இல்லை. ரஷ்யாவிலும் மதம் இருக்கிறது. நான் ரஷ்யா சம்பந்தமான புத்தகங்களைப் படிப்பதில்லையென்றாலும், சமீபத்தில் ஜவகஹர்லால் கொடுத்த ஒரு புத்தகத்தைப் படித்தேன். ரஷ்யாவிற்கு நேரில் சென்று வந்தவர்களையும் கேட்டேன். அங்கு மதம் இருக்கிறது என்பது தெரி

கிறது. நேரு மதங்களையெல்லாம் வெறுத்தாலும், அவரும் ஒரு விதத்தில் மத நம்பிக்கைக்காரர் என்பது எனக்குத் தெரியும்.''

குருசாமி : ''தாங்கள்தான் கோயில்களை விபச்சார விடுதிகள் என்று கூறியிருக்கிறீர்களே, அப்புறமேன் ஒடுக்கப்பட்டவர்களையும், அடக்கப்பட்டவர்களையும் அந்த விபச்சார விடுதிக்குள் அழைத்துச் சென்று விபச்சாரிகளாக்க முயலுகிறீர்கள்?''

காந்தியார் ; ''விபச்சார விடுதிகளாக இருக்கும் கோயில்களைப் பரிசுத்தப் படுத்தும் பொருட்டே அவர்களை உள்ளே அழைத்துச் செல்ல விரும்புகிறேன்.''

குஞ்சிதம் : ''அதெப்படி பரிசுத்தப் படுத்த முடியும்?''

காந்தியார் : (பதிலில்லை)

குஞ்சிதம் : ''ஜாதியை ஒழிக்காமல் தாங்கள் எப்படித் தீண்டாமையை ஒழிக்க முடியும்?''

காந்தியார் : (சிரித்துக் கொண்டே), ''என்னுடன் கூட வாருங்கள், காண்பிக்கிறேன்''—என்றார்.

இச் சமயம் அதிகநேரம் ஆகிவிட்ட படியாலும் காந்தியாரைக் காண மற்றும் அநேகர் காத்துக் கொண்டிருந்தபடியாலும் உரையாடல் முடிவுற்றது. ('புரட்சி: '14—1—1934)

பதினைந்து நிமிட நேரமே ஒதுக்கியிருந்த போதிலும், காந்தியாரே உற்சாகத்துடன் உரையாடியதால் நாற்பது நிமிடங்களாயின.

எல்லோரும் காந்தியாரிடம் விடைபெற்றுக் கொண்டு திரும்பினர், அவ்வாறு திரும்பும்போது காந்தியார் இராமநாதனை மட்டும் தனியே கூப்பிட்டு அவரது நலன்களைச் சில நிமிடங்கள் விசாரித்து அளவளாவினார்.

### தமிழர், தமிழன்பர் மாநாடுகள்

1932-ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 6, 7 தேதிகளில் திருச்சி மாவட்டம் துறையூரில் ''தமிழர் மாநாடு'' நடை பெற்றது. இம் மாநாடு, பார்ப்பனர்கள் ஒருவர்கூட இல்லாமல், தமிழர்களாலேயே நடத்தப்பட்டது. மாநாடு நடக்கச் சில மாதங்களுக்கு

முன்பிருந்தே ''சுயமரியாதைக்காரர்களின் கொட்டத்தை அடக்கு வதற்கும் அவர்களுக்குப் பதில் அடி கொடுப்பதற்குமான மாநாடு இது'' என்றே தமிழர் மாநாடு நிர்வாகிகள் விளம்பரம் செய்து வந்தனர். இந்த நேரத்தில் பெரியார் அய்ரோப்பியச் சுற்றுப் பயணத்தை மேற்கொண்டிருந்தார்.

இந்த மாநாட்டினருக்கு அறிவூட்ட எண்ணினர். சுயமரியாதை இயக்கத்தினர். ஈ. வெ. கிருஷ்ணசாமி அறிக்கையின் பேரில் குருசாமி தலைமையில் 'திராவிடன்' ஆசிரியர் f.V. சுப்ரமணியன், S.V. லிங்கம், சாமி சிதம்பரனார், ப. ஜீவானந்தம், நாகை காளியப்பன், குஞ்சிதம் குருசாமி, நீலாவதி ராமசுப்ரமணியம், இந்திராணி பாலசுப்ரமணியம், T.D. வீரப்பா, சேலம் சித்தய்யன், சி. பி. சிற்றரசு மற்றும் பலரும் அந்த மாநாட்டிற்குச் சென்றனர்.

மாநாட்டுக்கு நீதிக்கட்சி அமைச்சரவையிலுள்ள கல்வி அமைச்சர் குமாரசாமி ரெட்டியார் தலைமை தாங்கினார். த. வே. உமாமகேசுவரம் பிள்ளை, மாநாட்டின் வரவேற்பாளர். மற்றும் கா. நமச்சிவாய முதலியார், திரு. வி. கல்யாண சுந்தரனார், பண்டிதமணி கதிரேசன் செட்டியார், கா. சுப்ரமணிய பிள்ளை, ந. மு. வேங்கடசாமி நாட்டார், டி. எம். நாராயண சாமி பிள்ளை, மீனாம்பள்ளி ஜமீன்தார், கே. சி. எம். வெங்கடாசலம் செட்டியார் முதலானோர் மாநாட்டில் கலந்து கொண்டனர்.

மாநாட்டினர், மாநாட்டை ஒட்டி ஏற்படுத்திய வரவேற்பு வளைவுகளில், சுயமரியாதை இயக்கத்தினரை இழிவு செய்கின்ற வகையில் வாசகங்களை எழுதி வைத்திருந்தனர். அவைகளில் ஒன்று ''நாத்திகம் பேசி நாத்தழும் பேறியவர் ஒழிக'' என்பதாகும்.

S. V. லிங்கமும், நாகை காளியப்பனும் அந்த வளைவை ஒடித்துத் தீக்கிரையாக்கினர். இதனால் குழப்பம் ஏற்பட்டது. பின்னர் ஒரளவு சமாதானத்துடன், மாநாடு தொடங்க ஆரம்பித்தது. மாநாட்டின் தொடக்கத்தில் கடவுள் வாழ்த்தாக தேவாரப் பாடல் ஒன்றைப் பாட ஆரம்பித்தார், தமிழ்ப் புலவர் ஒருவர். உடனே குருசாமி எழுந்து, ''அந்தப் பாட்டைப்

பாடாதீர்கள். அது மத சம்பந்தபட்ட பாட்டாகும். தேவாரப் பாட்டைப் பாடுவதாக இருந்தால் நானும் ஒரு பாட்டுப் பாடுவேன். அதற்கு ஒப்புதல் தர வேண்டும்'' என்று கூறினார். இந்தச் சமயத்தில் உமாமகேசுவரன் பிள்ளை குருசாமியைப் பார்த்து, ''நீங்கள் பாடும் பாடல் தமிழாக இருக்காது'' என்று கூறினார். குருசாமி, ''நான் பாடுவது ஆங்கிலமல்ல ; சுய மரியாதைக்காரர்களும், தமிழர் தான்- உங்களைவிட நாங்கள் ஒன்றும் தமிழ் வளர்ச்சியில் குறைந்த ஆர்வமுடையவர்களல்லர்'' என்று கூறினார். அது மட்டுமன்றி, தேவாரப் பாடலே பாட விடாமல் செய்து விட்டார். இதனால் ஏற்பட்ட குழப்பத்துடன் அன்றைய மாநாட்டு நிகழ்ச்சி முடிவுற்றது.

திரு. வி க., ந.மு. வேங்கடசாமி நாட்டார் இருவரும் குருசாமியுடனும், அவரது குழுவினருடனும் ஒரு சமரசம் செய்து கொண்டனர். அதன்படி மறுநாள் ஆரம்பமான மாநாட்டில், தேவாரப் பாடலுடன், சேலம் சித்தய்யனால் ஒரு சுயமரியாதைப் பாடலும் பாடப்பட்டது. அப் பாடல், பாவேந்தர் பாரதிதாசனின் உலகப் பண் பாட்டாகும்.

மாநாட்டில் குருசாமியால் கொண்டு செல்லப்பட்ட பல தீர்மானங்களில் ஒன்று, எழுத்துச் சீர்திருத்தம் பற்றியது. ஆனால், அது ஏற்றுக் கொள்ளப்படவில்லை. மாநாடு ஏற்றுக் கொண்ட முக்கிய தீர்மானங்கள்:

1. தமிழ் நாட்டில் செல்வம் மிக்க கோவில்களிலும், மடங்களிலும், இருந்துவரும் மிகுந்த வருமானத்தை, நூல் நிலையங்கள், தமிழ்க் கலாசாலைகள் அமைத்தல் முதலிய தமிழ் வளர்ச்சிக்குப் பயன்படுத்தும்படி இம் மாநாடு அவைகளின் தலைவர்களையும், அறநிலையப் பாதுகாப்பாளர்களையும் கேட்டுக் கொள்கிறது.

2. தமிழ்ப் பெண்கள் முன்னேற்றம் மிக அவசியமாதலால், இனி மேல் தமிழ்நாட்டினர் தங்கள் பெண் மக்களுக்குத் தவறாமல் கல்வியளிக்க வேண்டுமென்று இம் மாநாடு தீர்மானிக்கிறது.

1933 டிசம்பர் 23, 24 தேதிகளில் சென்னை பச்சையப்பன் கல்லூரி மண்டபத்தில் தமிழன்பர் மாநாடு என்ற பெயரால் ஒரு மாநாடு நடத்தப்பட்டது. அந்த மாநாடு பெரும்பாலும்

பார்ப்பனர்களாலும் அவர்தம் ஆதரவாளர்களாலும் நடத்தப் பட்டது.

தமிழன்பர் என்ற பெயர் இருந்தபோதிலும் இது தமிழர் களுக்குப் புறம்பானதொரு மாநாடு ஆகும். பார்ப்பனர்கள் தமிழர்கள் மீது ஆட்சி செலுத்தவும், தமிழ் ஆசிரியர்களை அடிமை யாக்கிக் கொள்ளவும், பார்ப்பனரல்லாத ஆசிரியர்களை அடக்கி வைக்கவும், பார்ப்பனர் பலருக்கு உத்தியோகமும் வருவாயும் ஏற்படுத்தி வைக்கவும் செய்யப்பட்ட ஒரு சூழ்ச்சியாகும்.

மாநாட்டை முன்னின்று நடத்தியவர்கள் சி.பி. ராமசாமி அய்யர், உ.வே. சாமிநாத அய்யர், கல்கி அய்யர், சாரநாத அய்யங்கார், கே.வி. கிருஷ்ணசாமி அய்யர், சத்தியமூர்த்தி, வெங்கட்டராமய்யர், பெ.நா. அப்புசாமி, ராஜா அண்ணா மலைச் செட்டியார், முத்துரங்க முதலியார், திரு வி.க., தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், டி. கே. சிதம்பரநாதனார், இராமநாதபுரம் ராஜா ஆகியோராவர். அன்றைய நீதிக்கட்சிக் கல்வி அமைச்சரான குமாரசாமி ரெட்டியார் தலைமை தாங்கினார்.

இம் மாநாட்டுச் செயலாளருக்கு ஆறு முக்கிய தீர்மானங்கள் அடங்கிய ஓர் அறிக்கையை, மாநாடு தொடங்குவதற்குப் பல நாட்களுக்கு முன்பாகவே குருசாமியும்,ஆ. ராகவனும், பொன்னம் பலனாரும் மற்றும் சிலரும் சேர்ந்து கையெழுத்திட்டு அனுப்பி இருந்தனர்.

அத் தீர்மானங்கள் பற்றிய எவ்வித விளக்கமும் சுயமரியாதை இயக்கத்தினருக்கு மாநாட்டினர் அளிக்கவில்லை. மேலும், இந்த மாநாட்டிற்குச் சுயமரியாதை இயக்கத்தவர் எவரும் கலந்து கொள்ள முடியாத அளவுக்குப் பலவிதமான தந்திரங்களும் சூழ்ச்சி களும் செய்தனர்.

அத்தனை சதிகளையும் முறியடித்து, மாநாட்டுக்குச் செல் வதற்கான ஏற்பாட்டை குருசாமி செய்தார்.

மாநாடு நடைபெறும் அன்று காலையில், மாநாடு தொடங்கு வதற்கு முன்னதாகவே குருசாமி குஞ்சிதம், எஸ். இராமநாதன், சி.டி. நாயகம், ப. ஜீவானந்தம், மயிலை சீனி, வேங்கடசாமி, பொன்னம்பலனார், மாயவரம் நடராஜன், சாமி சிதம்பரனார்,

டி. எம். பார்த்தசாரதி, காந்தம்மாள் மற்றும் பலரும் சென்று பச்சையப்பன் கல்லூரி மண்டபத்தின் முன் வரிசையில் அமர்ந்தனர். குருசாமி குழுவினர்களைக் கண்ட மாநாட்டு அமைப்பாளர்கள் பலரும் திடுக்கிட்டனர். போலீசாருக்கும் செய்தி அனுப்பி பலத்த பாதுகாப்பு அமைத்துக் கொண்டனர்.

மாநாடு தொடங்கியதும் 'கடவுள் வாழ்த்தாக' தேவாரத்தி லிருந்து ஒரு பாடல் பாடப்பெற்றது. வாழ்த்துப் பாடல் முடிந்த வுடன் குருசாமி எழுந்து ''நானும் ஒரு வாழ்த்துப் பாடல் பாட வேண்டும்'' என்றார், ''பாடியாச்சே, அப்புறமென்ன கடவுள் வாழ்த்து?'' என்றார் உ. வே. சாமிநாத அய்யர். உடனே குருசாமி இந்த மாநாடு தமிழன்பர் மாநாடு என்பது நினைவிருக்கட்டும். ஆனால் இங்குப் பாடப்பெற்ற 'கடவுள் வாழ்த்துப்' பாடலோ தேவாரத்திலிருந்து - எடுத்த சைவ சமயப்பாடல்—சைவ சமயத் திற்கு ஒரு பாடல் பாடியது போலவே நாத்திகத்திற்கும் நான் ஒரு பாடல் பாட வேண்டும். நான் பாடுவதுமட்டுமல்ல என்னுடன் வந்திருக்கும் கிறிஸ்தவ, முஸ்லீம் நண்பர்களும் தங்கள் சமயத்திற்கு ஒரு பாடல் பாட அனுமதிக்க வேண்டும்'' என்றார்.

மற்ற தோழர்களும் இதை ஆதரித்துப் பலத்த கையொலி செய்து, ஆதரவாகக் குரல் கொடுத்தனர்.

இதையொட்டி மாநாட்டில் சலசலப்பு ஏற்படவே திரு. வி. கலியாணசுந்தரனார் தலையிட்டு, குருசாமியினுடைய தீர்மானங் களை ஏற்றுக்கொள்ளச் செய்தார். அதன்படி குருசாமி மக்களின் பகுத்தறிவு வளர்ச்சிக்கான முக்கிய தீர்மானம் ஒன்றைப் படித்தார்:

> ''அறிவைப் பரப்புவதற்கும் இலக்கியங்களைக் கற்பிப்பதற்கும் ஏற்படுத்துகிற கல்வி சம்பந்தமான புத்தகங்களில் பகுத்தறிவுக்கும், தன்னம்பிக்கைக்கும் முரணான 'கடவுள் வாழ்த்து' 'கடவுள் வணக்கம்' முதலிய விஷயங்களை அடியோடு குறிப்பிடாமல் இருக்க வேண்டுமென்று இம் மாநாடு தீர்மானிக்கிறது.''

இதைப் படித்து முடித்ததும், கோயில்களையெல்லாம் கட் டாயப் பள்ளிக்கூடங்களாக்கும் காலம் கூடிய சீக்கிரம் வந்துவிடும் என்று விளக்கிப் பேசினார். குருசாமியின் தீர்மானத்தை

எஸ். இராமநாதன் வழிமொழிந்தார்.

தொடர்ந்து பேசிய திரு.வி.க., ''பகுத்தறிவுக்கு முரணான 'கடவுள் வாழ்த்து கூடாது' என்றுதான் கூறப்பட்டிருக்கிறது. பகுத்தறிவுக்கு முரணான கடவுள்' என்று அர்த்தமல்ல. ஆதலால் நான் இதை ஆட்சேபிக்கவில்லை'' என்று கூறிவிட்டு குருசாமியைத் தனது கருத்தை மேலும் விளக்குமாறு கேட்டுக்கொண்டார்.

குருசாமி, ''தீர்மானம் தெளிவாகத்தான் இருக்கிறது. ஆனால், பண்டிதர்கள் அதை எப்படி வேண்டுமானாலும் அர்த்தப் படுத்தலாம்'' என்றும், 'பகுத்தறிவுக்கு முரணான கடவுள்' என்ற கருத்து அதில் தெளிவாக இருப்பதாகவும் கூறித் தீர்மானத்தை மீண்டும் படித்துக் காட்டினார்.

திருச்சி தேசியக் கல்லூரியில் குருசாமிக்கு ஆசிரியராக விளங்கிய சாரநாத அய்யங்கார் எழுந்து, ''இம் மாதிரித் தீர்மானங்களை நடைமுறைக்குக் கொண்டுவர எவ்வளவு நாட்களாகும்?''— என்றார்.

கடவுளுக்காக வக்காலத்து வாங்கிப் பேசிய அன்பர்களைப் பார்த்து, ''கடவுள் சம்பந்தமான இம் மாதிரித் தீர்மானங்கள் வருகிற சமயத்தில் நேராகக் கடவுளே வந்து 'அடே, போ' என்று சொல்லாமல், கடவுள் தரகர்களாக முத்துரங்கங்கள்—போன்றவர் கள் இவ்வளவு பேர் கிளம்பியிருக்கிறீர்களே, ஏன்?''—என்றார் குருசாமி.

இந்தத் தீர்மானத்தில் தெ. பொ. மீனாட்சி சுந்தரம்பிள்ளை ஒரு திருத்தம் கொண்டுவந்தார். ஆயினும், முடிவில் தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது,

மாநாட்டில் 15-வது தீர்மானமாக குருசாமிக்கு மிகவும் பிடித்த மான எழுத்துச் சீர்திருத்தத் தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது.

''தமிழ் நெடுங் கணக்கில் 247 எழுத்துகள் இருப்பதால் புதி தாகத் தமிழ் படிப்பவர்களுக்கும், அச்சுவேலை, டைப்ரைட்டிங் வேலை முதலியவைகளுக்கும் சவுகரியம் ஏற்படும்படி, அவசியமற்ற பல எழுத்துகளையும், குறிகளையும் நீக்கவேண்டுமென்றும், புதிய சப்தங்களுக்காகச் சில புதிய எழுத்துகளைச் சேர்க்கவேண்டு மென்றும் இம் மாநாடு தீர்மானிக்கிறது.''

இம் மாநாட்டில் ''தமிழில் நூல்களை வெளியிடும் பொறுப்பை யும் அதற்கான நிதி உதவியையும் சென்னைப் புத்தகாலய சங்கத் திடம் ஒப்படைக்க வேண்டும்'' என்னும் தீர்மானத்தை கே.வி. கிருஷ்ணசாமி அய்யர் கொண்டுவந்தார். இத் தீர்மானத்தை குருசாமி தோற்கடித்தார்.

—'புரட்சி' 31-12-1933

இதுபோன்ற பல மாநாடுகள் அனைத்திலும் குருசாமி, அவரது நண்பர் குழாத்துடன் சென்று 'ஆக்கிரமித்து' நடத்திய செயல்களால், அம் மாநாடுகள் சுயமரியாதை மாநாடுகளாகவே காட்சி அளித்தன.

ஒரு சமயம் சென்னை ராயப்பேட்டை பாலசுப்பிரமணிய பக்த சபையில் (இன்று திரு.வி க. மணிமண்டபம் என்று இருக்குமிடம்) மறைமலையடிகள் தலைமையில் நடந்த திருஞானசம்பந்தர் விழா வில் குருசாமியும், அவரது நண்பர்களும் சென்று மறைமலையடி களைப் பல கேள்விகள் கேட்டனர்.

கேள்விகளைக் கண்டு திணறிய மறைமலையடிகள் ''என் தலைவன் ஞானசம்பந்தனைக் கிண்டல் செய்கிறீர்களே'' என்று கண்களில் கண்ணீர் வர விம்மி விம்மி அழுதார். இதைக் கண்டு உள்ளம் உருகிய, குருசாமியின் குழுவினரைச் சார்ந்த மயிலை. சீனி வேங்கடசாமியும் கண்ணீர் வடித்தார்.

சுயமரியாதை இயக்கத்தின் கடுமையான தாக்குதலை மறை மலையடிகள் பலமுறைகள் சந்திக்க நேரிட்டாலும் ''சுய மரியா தைச் சூறாவளியும் புயலுந்தான் சாதிசமய மூடப்பழக்க வழக் கங்களை அடித்துத் துப்புரவாக்கும்'' என்னும் கருத்தை உடைய வராகவே அவர் இருந்தார்; 'சுயமரியாதை இயக்கத்தால் நாத்திகம் பரவுகிறதே' என்று பலர் அவரிடம் குறைகூறி முறையிட்டபோது மேற்கண்ட கருத்தைப் பலரிடம் சொல்லிவந்தார்.

இதுபோன்றே, தாங்கள்தான் இந்த நாட்டின் பூதேவர்கள் ; தங்களால்தான் எல்லாமே நடத்தமுடியும்; அறிவிலும் ஆற்றலிலும் சிறந்தவர்கள் தாங்கள் தான்; தங்களிடத்தில்தான் 'இந்து' 'மித்ரன்' 'தினமணி' 'ஆனந்தவிகடன்' போன்ற பத்திரிகைகள் இருக் கின்றன; தங்களிடத்தில்தான் ராஜாஜிகள், சத்தியமூர்த்திகள்,

சர். சி.பி.க்கள், கல்கிகள், அல்லாடிகள், உ. வே. சா.க்கள் போன்ற வர்கள் இருக்கிறார்கள் ; உ. வே. சா இல்லையென்றால் தமிழே இல்லை—என்று கூறிப் பிரச்சாரம் செய்து, இறுமாந்து, எக்காள மிட்டுக் கொண்டிருந்தவர்களின் வஞ்சகப் போக்கை அம்பலப் படுத்தினார். அவர்களது துரோகச் சிந்தனையை அறிந்திருந்தும் அதை எதிர்க்கத் துணியாத தமிழ்ப் பெரும் புலவர்களுக்குத் தமிழர் களின் சார்பில் குருசாமி கொடுத்த அடி பலமாக விழுந்தது.

மேல்சாதி அகம்பாவம் பிடித்த ஆதிக்கக் கூட்டத்தினர் சுயமரியாதை இயக்கத்தைப் பற்றியும் குருசாமியைப் பற்றியும் நல்ல முறையில் அறிந்து கொண்டனர்.

பி. ஏ., எம். ஏ படித்த பட்டதாரிகள் அடக்கத்துடனும், நாகரிகத்துடனும், மற்றவர் மதிக்கும்படியும், மற்றவர்கள் மனம் புண்படாதபடியும் நடந்துகொள்ள வேண்டும் என்ற மனப்பான் மையை குருசாமி உடைத்தெறிந்தார். சமூகக் கொடுமைகளைக் கண்டுகொள்ளாமல் நளினமாகவும் நாகரிகமாகவும் நடந்து கொள்வது கோழைத்தனம் என்பது அவரது திடமான கருத் தாகும். எனவே, கபடவேடதாரிகளான எதிரிகளை எல்லா வகை களிலும் கீழே இறங்கி நின்று துணிந்து எதிர்த்தார்.

குருசாமியின் இடைவிடாத இத்தகைய அதிதீவிரச் செயல் தான், பகுத்தறிவாளர்கள் தலைநிமிர்ந்து, நின்று, தன்மான உணர்ச்சியுடன் சமதர்மக் கொள்கையை எடுத்துச் சொல்வதற்குத் தமிழக மெங்கும் பல்லாயிரக்கணக்கான மேடைகளை ஏற்படுத்திக் கொடுத்தது.

பெரியாரிசத்தின் கொழுந்தான குருசாமி உருவாக்கித் தந்த மேடைமீது நின்றுதான் பிற்காலத்தில் வந்த அத்தனை பகுத்தறி வாளர்களும், சமதர்மிகளும், பகுத்தறிவுக் கருத்துகளைப் பரப்ப முடிந்தது.

### பல்கலைக் கழகப் பாடப் புத்தகம்

1935-ல் சென்னைப் பல்கலைக் கழகத்தினர் 'இண்டர்மீடியட்' வகுப்புக்கு, மறைமலை யடிகளின் 'அறிவுரைக் கொத்து' என்னும் நூலைப் பாடநூலாக வைத்தனர். இந் நூலில்

இராமாயணம் கட்டுக் கதை என்று மறைமலையடிகள் எழுதி யிருந்தார்.

இதனைக் கண்ட வைதீகர்களும், அவர்களது எடுபிடிகளும், பல்லாயிரம் தேள் கொட்டியதுபோல் பதறித் துடித்து அலறி அரற்றினர். இந் நூல் பாடப் புத்தகமாக வைக்கப்பட்டதை பெரியார் ஈ. வெ. ரா. ஆதரித்தார்.

இப் பிரச்சினையில் தலையிட்டு "தமிழர்களுக்கு ஒரு வேண்டு கோள்" என்ற தலைப்பில் குருசாமி ஒரு கட்டுரை எழுதினார்.

"மறைமலையடிகளின் 'அறிவுரைக்கொத்து' – எனும் நூலை ஒழிப்பதற்கு முண்டாத முண்டெல்லாம் முண்டுகிறவர்களே! வேதாச்சலம்தான் இராமாயணத்தைக் கட்டுக் கதையென்று எழுதினார்; அதனால் பாடமாக வைக்கக் கூடாது என் கிறீர்கள். ஆனால், அந்நிய தேசத்தவனான வின்சன்ட் ஸ்மித் (Vincent Smith) எழுதிய இந்து தேச சரித்திரம் பாடமாக வைக்கப் பட்டுள்ளது. அதில் இராமாயணம் முழுதும் கட்டுக் கதையென்றும் அதில் சரித்திர சம்பந்தமானது துளிகூட இல்லையென்றும் எழுதி யிருக்கிறாரே! அதை இன்டர்மீடியட் வகுப்பு முதல் எம். ஏ. வகுப்புவரையில் பாட நூலாக வைத்திருக்கிறார்களே!"

அதே சங்கதியை வேதாச்சலம் சொன்னால் ஏன் கோபம் பொத்துக் கொண்டு வருகிறது?"

—'குடி அரசு' 15-9-1935

இதற்குப் பிறகு எதிர்ப்பு வலுவிழந்தது.

இந் நிகழ்ச்சிக்குப் பிறகு குருசாமி ஓய்ந்து விடவில்லை. வாய்ப்புக் கிடைக்கும்போதெல்லாம் முற்போக்குக் கருத்துடைய நூல்களைப் பல்கலைக் கழகங்களில் பாடநூலாக வைக்க வேண்டும் என்று எழுதி வந்தார். "இனி நாம் செய்யவேண்டியதென்ன?" என்றதலைப்பில் ஓர் கட்டுரை எழுதினார்.

> 'கபிலர் அகவல்' என்ற சிறு பாட்டுப் புத்த கத்தை மூன்றாவது வகுப்பு முதல் பத்தாவது வகுப்பு வரை கட்டாயப் பாடமாக்க வேண்டும். டாக்டர். பராஞ்சிபே அவர்களால் எழுதப்பட்ட— *Crux of the Indian Problem*—என்னும் நூலை

ஆங்கிலப் பாடமாக்க வேண்டும். 'ஆனந்தவிகடன்' ஆசிரியரை விட பராஞ்சிபே கொஞ்சமாவது புத்திசாலி யாதலால், அதைப் படிப்பதில் மாணவருடைய அறிவு எந்த விதத்திலும் கெட்டுவிடாது. பூரணலிங்கம் பிள்ளை யால் எழுதப்பட்ட '*Ravana, the Great*' மறைமலையடி களால் எழுதப்பட்ட 'பண்டைக்கால ஆரியரும்— தமிழரும்' ஆகிய நூல்களையும் பாடப் புத்தகங்களாக வைக்கவேண்டும்.

''இது கூட நம்மால் முடியவில்லையென்றால், நாமெல்லாம் மனிதர்களாக வாழுவதற்கே லாயக் கற்றவர்கள்''

—'குடி அரசு' 22-9-1935

'ஒரு தமிழனின் நூலை, அவனது சொந்த நாட்டில் அவனுக்கே சொந்தமான கல்லூரிகளில், அவனது குழந்தைகளே படிக்க முடியாத நிலையை அடைந்திருந்தான். அந்த நிலையை மாற்று வதற்கு எவ்வளவு தொல்லைகளை அடைய வேண்டியிருந்தது' என்பதனை குருசாமியின் கட்டுரைகளே தெளிவாக விளக்கும்,

## நாத்திகர் மாநாடு

இந்தியாவிலேயே முதன் முதலாக 'நாத்திகர் மாநாடு' என்ற பெயரில் ஒரு மாநாடு தமிழ் நாட்டில்தான் நடைபெற்றது. இந்த மாநாட்டை ஏற்பாடு செய்தவர்கள் மா. சிங்காரவேலர், எஸ். இராமநாதன், குத்தூசி குருசாமி, ஜீவானந்தம்,பொன்னம்பலனார் முதலியவர்களே யாவர்.

'நாத்திகர் மாநாடு'—சம்பந்தப் பட்ட செய்தி விளம்பரமான வுடனேயே, இந்து மதக்காரர்களும், கிறித்துவக் கத்தோலிக்கர் களும் திகிலும் பரபரப்பும் அடைந்தனர். நேரடியாகவே 'நாத்திகர் மாநாடு' என்று பெயர் குறிப்பிடப்பட்டதனால், இந்த மாநாட்டை எப்படியும் நடத்த விடாமல் செய்ய வேண்டு மென்று—நீதிக் கட்சியினர் உட்பட—பலர் மறைமுகமாகத் துரோகங்கள் செய்ய முற்பட்டனர். அவையனைத்தும் முறியடிக் கப்பட்டன.

குருசாமியும் ஜீவானந்தமும், சேர்ந்து ஊக்கத்துடன் முனைந்து 'நாத்திகர் மாநாட்டை'ச் சிறப்பாக நடத்தி வெற்றி பெற்றனர்.

1933 டிசம்பர் 31-ம் தேதி ஞாயிற்றுக் கிழமை சென்னை எழும்பூர் ''ஒயிட்ஸ் மெமோரியல்' ஹாலில் நடந்த இந்த மாநாட்டிற்கு நாத்திக அன்பர்களின் அன்புக்கும், மரியாதைக்கும் உரியவரும் இந்தியாவின் முதல் பொதுவுடமைவாதியுமான, மா. சிங்காரவேலர் தலைமை தாங்கினார். காஞ்சி நாத்திக சி. கே. குப்புசாமி மாநாட்டில் வரவேற்புரையாற்றினார்.

சிங்காரவேலரின் தலைமையுரைக்குப் பின் பேசிய குருசாமி, 'நாத்திகமும் அதன் நடைமுறையும்' என்பது பற்றி அரியதொரு சொற்பொழிவாற்றினார். (சொற்பொழிவு முழுமையாகக் கிடைக்கவில்லை) இச் சொற்பொழிவு நாத்திக வாதத்திற்கு ஓர் இலக்கணமாக அமைந்தது என்று பலராலும் கருதப்பட்டது.

இந்த மாநாட்டில் 'நாத்திகர் பதிவேடு' என்று ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டது. அதில் முதலாவது நாத்திகராக மா. சிங்கார வேலர் பதிவு செய்து கொண்டார். இரண்டாவது ப. ஜீவானந்தம், மூன்றாவது குருசாமி, நான்காவது எஸ். இராமநாதன், மேலும் குஞ்சிதம் குருசாமி, பாரதிதாசன், சாமி. சிதம்பரனார், பொன்னம்பலனார், சி. டி. நாயகம், கே. டி. கே. தங்கமணி கே.எம். பாலசுப்ரமணியன், மாயவரம் சி. நடராசன், மன்னார் குடி கே.ஆர்.ஜீ. பால் மற்றும் பலரும் நாத்திகர் பதிவேட்டில் தங்கள் பெயர்களைப் பொறித்துக் கொண்டனர்.

இந் நிகழ்ச்சி முடிந்தவுடன், தோழர் சிங்கார வேலர் மேடையில் எழுந்து நின்று, குருசாமி, ஜீவானந்தம் ஆகிய இரு வரையும் அருகில் அழைத்துத் தமது இரு பக்கத்திலும் நிறுத்தி, இரு கைகளாலும் அணைத்துக் கொண்டு, ''எனக்குப் பிறகு எனது வாரிசாக குருசாமியும் ஜீவானந்தமும்தான் இருப்பார்கள்'' என்று உணர்ச்சி பொங்கக் கூறினார்,

எழுபத்து நான்கு வயதுக் கிழவரான சிங்காரவேலர் அவ்வாறு கூறியதும், மக்கள் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கி ஆரவாரம் செய்து நீண்ட கையொலி எழுப்பினர். (செய்தி : 'புரட்சி' 7-1-1934)

சமதர்ம மாநாடு

1934 ஜனவரி 24-ம் தேதி 'குடி அரசில்' எழுதிய 'இன்றைய ஆட்சி—ஏன் ஒழிய வேண்டும்?' என்ற தலையங்கக் கட்டுரைக்காக ஈ.வெ.ரா.வும் அவரது தங்கை கண்ணம்மாளும் தண்டிக்கப் பட்டனர். ஈ.வெ.ரா. சிறை சென்றிருந்த போதிலும் வழக்கம் போல் குருசாமியும் மற்ற முன்னணித் தலைவர்களும் இயக்க வேலையைத் தொடர்ந்து நடத்தினர்.

இந்தியாவிலேயே முதல் சமதர்ம மாநாடும் தமிழ் நாட்டில் தான் நடைபெற்றது. இம் மாநாட்டை குருசாமி, ஜீவானந்தம் நாகை. முருகேசன். பொன்னம்பலனார், நாகை. காளியப்பன், சித்தக் காடு இராமய்யா முதலானோர் முன்னின்று ஏற்பாடு செய்தனர்.

1934-மார்ச் 3, 4 தேதிகளில் மா. சிங்காரவேலனார் தலைமையில் தஞ்சை மாவட்டம் மன்னார்குடியில் சமதர்ம மாநாடு நடந்தது.

மாநாட்டில் சமதர்மிகளின் கடமை என்ன? சமதர்மம் எதற்கு? உலக வறுமைக்குக் காரணம் என்ன? என்ற கேள்விகளுக்கு விடையாகவும், எப்படி சமதர்மத்தைத் தீவிரமாகப் பரப்புவது என்பது பற்றியும் குருசாமி மிகத் தெளிவாக உணர்த்தினார்.

ஜீவானந்தம், சாமி. சிதம்பரனார், நாகை முருகேசன், திருச்சி நீலாவதி மற்றும் பலரும் மாநாட்டில் பேசினர்.

சென்னை 'மயிலாப்பூர் சுயமரியாதை இளைஞர் சங்கத்தின்' சார்பில் 2-4-1934-ல் சென்னை நொச்சிக்குப்பத்தின் அருகில் பகுத்தறிவாளர் கூட்டம் ஒன்று நடைபெற்றது. சிங்காரவேலரின் தலைமையில் குருசாமி ஆற்றிய சொற்பொழிவு, பழமை விரும்பி களுக்கு ஒரு அறை கூவலாகவே இருந்தது:

"சூத்திரன் வேதத்தைக் கேட்பானேயானால் அவன் காதில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்ற வேண்டும் என்று மனுதர்மம் கூறு கிறது. அந்தப் பாச்சா இப்போது பலிக்காது. 'சூத்திரனிலும் சூத்திரனான மாக்ஸ் முல்லர் வேதத்தைப் படித்தான். இங்கிலீஷில் மொழி பெயர்த்தான். அவன் காதில் ஈயத்தைக் காய்ச்சி ஊத்தாத காரணம் என்ன? இப்போது 'மிலேச்சன்'

என்றாலும், பழைய வரலாற்றுப்படி ஆரியர் இனத்தான் தானே என்று நினைத்தா? அல்லது, அவனுடைய ஈயத் தோட்டாவை ஆரியர் நெஞ்சுக்குள் பதியவைப்பானே என்று பயந்தா? என்ன காரணம்? பார்ப்பனர்கள் கூறுவார்களா?''

''பிரும்மாதான் எல்லா மனிதர்களையும் உண்டாக்குகிறார் என்றால், அவரைப் பெற்றெடுத்தது யார்? எனக்கேட்டால், 'அவர் மகாவிஷ்ணுவின் உந்திக் கமலத்திலிருந்து பிறந்தார்' என்கிறார்கள். 'மகாவிஷ்ணு எப்படிப் பிறந்தார்?' என்றால், 'அவர் மும்மூர்த்திகளில் ஒருவர், தானாகவே தோன்றியவர்' என்கிறார்கள். அவர் மட்டிலும் தானாகவே தோன்றுகிறபோது, ஏன் உலகம் மட்டும் தானாகவே தோன்றக் கூடாது? என்று கேட்டால், மடத் தலைவர்களும் (மடாதிபதிகளும்) மதத் தலைவர்களும் என்மேல் பாய்கின்றனர்.''

> ''சரஸ்வதிக்கும், லட்சுமிக்கும் நான்கு கைகள் ஏன்? விநாயகருக்கு யானை முகம் ஏன்? அவர் சகோதரருக்கு ஆறுமுகம் ஏன்? மகாவிஷ்ணுவுக்கு இரண்டுக்கு மேற்பட்ட கைகள் ஏன்? என்று கேட்டால் ஆத்திரப்படும் தோழர்களே, உங்களில் எவருக்காவது—நான்கு கைகளுடனோ, அல்லது யானை முகத்துடனோ — அல்லது ஆறுமுகத்துடனோ ஒரு குழந்தை பிறந்தால் நீங்கள் என்ன செய்வீர்கள் என்பதைச் சற்று எண்ணிப்பாருங்கள்.
>
> ''தோழர்களே, நீங்கள் நாத்திகர் ஆனாலும், ஆகாவிட்டாலும் அர்ச்சகர்களிடத்திலும், பார்ப்பனர்களிடத்திலும் 'அர்ச்சகன் மேலே ஏறினால் வாகனத்தைத் தூக்க மாட்டோம்' என்றும் .'ஓய், அய்யரே! நீர் ஏறக் கூடாது—ஆயிரம் பவுண்டு வாகனத்தையும் தூக்கி—உன்னையும் ஏன் தூக்க வேண்டும்?' என்று ஒரேயொரு தடவைச் சொல்லிப் பாருங்கள்; நீ விபூதி கொடுத்தால் நான் வாங்க மாட்டேன். நீ சடகோபம் சாய்த்தினால் நான் தலையைக் குனிய மாட்டேன்; நீ சமஸ்கிருதத்தில் சொன்னால் நான் ஒப்பமாட்டேன்; நீ தேங்காய் உடைப்பதை நான் ஏற்க மாட்டேன்; நீ அபிஷேகம் செய்வதை

நான் அனுமதிக்க மாட்டேன்; நீ மட்டும் மடப்பள்ளிக்குச் செல்வதைப் பொறுக்க மாட்டேன்!—என்றும் சொல்லிப் பாருங்கள். அப்பொழுது புரியும் ஆரியரின் சூழ்ச்சி.''

குருசாமி கடவுளையும், கடவுள் தரகர்களையும் இவ்வாறு இறுதிக் காலம் வரை தாக்கித் தகர்க்க ஒருபோதும் மறந்தவரல்லர்; தொடக்க காலத்தில் மேற்கொண்ட பணியை இடைவிடாமல், கடைசி வரை பெரியாருக்கு அடுத்தபடியாகச் செய்தவர் குருசாமி ஒருவரே.

**''எவனொருவன் மதத்தைக் கடுமையாகத் தாக்குகிறானோ – மதத்தில் இருக்கக்கூடிய ஊழல்களை அம்பலப் படுத்துகிறானோ—சமுதாயத்திலிருக்கக் கூடிய ஊழல்களைத் திருத்த முற்படுகிறானோ — அவன்தான் சமுதாயத்திற்கும், நாட்டிற்கும் சிறந்த தொண்டனாக விளங்க முடியும்''**

அதைத்தான் செய்தார் குருசாமி.

## எழுத்துச் சீர்திருத்தம்

உலக மொழிகளில் எந்த மொழியின் எழுத்தும் முதன் முதல் இருந்த மாதிரி இன்று இருப்பதில்லை. சொற்களும் உச்சரிப்புகளும் கூட பல மாறுதல்களை அடைந்துள்ளதை மொழி ஆராய்ச்சிக்காரர்கள் எடுத்துக் காட்டியுள்ளனர்.

மனிதனின் கருத்தைத் தெளிவாக வெளியிடுவதற்குத்தான் மொழி. இதற்குப் பயன்படாத மொழி வளர்ச்சியடையாது; எந்த மொழிக்கும் 'தெய்வீகத் தன்மை' அல்லது 'புனிதத் தன்மை' என்பது கிடையாது. எல்லா மொழிகளும் மனிதனால் உண்டாக்கப்பட்டவைகளே. ஆகவே, மனிதனின் உண்டி, உடை, வாகனம், பழக்க வழக்கம், நாகரிகம் முதலியன நாளுக்கு நாள் மாறிக் கொண்டிருப்பது போல், அவனது மொழியும் தேவைக்கேற்ற மாறுதலை அடைந்தே தீரவேண்டும்.

ஆனால், மனிதன் மற்ற மாறுதல்களை ஏற்றுக் கொள்வது போல் அவ்வளவு சுளுவாக மொழி, மதம் முதலியவற்றில் மாறுதல்களை ஏற்றுக் கொள்வதில்லை. ஏனெனில், இவற்றில்

ஒரு விதமான 'பக்தி'யை நுழைத்துக் கொண்டு வெறிபிடித்து அல்லல் படுகின்றான்.

தமிழ் நெடுங்கணக்கில் இத்தனை எழுத்துகள் தேவையில்லை என்பதையும், தேவையற்ற எழுத்துகளை நீக்கி விட்டால், குறைந்த எழுத்துகளைக் கொண்டே தமிழை இன்னும் சுளுவாகப் பயிலலாம் என்பதையும், இதனால் தட்டெழுத்து, அச்செழுத்து, டெலிபிரிண்டர் போன்ற துறைகளில் சுளுவாகப் பணியாற்றலாம் என்பதையும் தமிழர்களில் பலர் உணர மறுக்கின்றனர்.

தமிழ் எழுத்தில் சீர்திருத்தம் தேவை என்னும் கருத்தை 1928-ம் ஆண்டில் குருசாமி வலியுறுத்தினார்.

மீண்டும் 1930-ம் ஆண்டு நவம்பர் 16-ம் தேதி 'குடி அரசி'ல் 'புத்தி வந்தால் போதும்' என்னும் தலைப்பில் எழுத்துச் சீர்திருத்தம் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்:

> ''பண்டிதர்கள் தமிழை முன்னிருந்ததைவிட சிறிதாவது சீர்திருத்தம் செய்திருக்கிறார்களா என்றால், கிடையாது. வடமொழிக் கலப்பில்லாத தமிழ் எழுது வதிலேயே வித்துவான்களெல்லாம் வாழ்நாளைச் செலவழிக்கின்றார்கள். 'ஜனங்கள்' என்பதை 'சனங்கள்' என்றும், 'ஜப்பான்' என்பதை 'சப்பான்' என்றும் 'ரோஜா' என்பதை 'ரோசா' என்றும் எழுதிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால், ஆங்கில மொழியில் ஸ்பென்சர் காலத்திலிருந்த மொழியும், நடையும் இப்போதில்லை. வார்த்தைகளில் அனாவசியமான எழுத்துகளை எடுத்தெறிந்து விடுகிறார்கள்.
>
> ''ஆங்கிலத்தில் *Honour* என்பதில் *U* அவசியமில்லை என்றும் *Till* என்பதில் ஒரு *l* (எல்) போது மென்றும் கூறு கின்றனர். இம் மாதிரியான சீர்திருத்தத்தோடன்றி இன் னும் லத்தின், அரபி, பிரெஞ்ச்—முதலிய இதர மொழி களிலிருந்தும் ஆங்கில மொழியானது தினம் தினம் வார்த்தைகளைச் சேர்த்துக் கொண்டே வருகின்றது. அந்த மொழிக்கு எழுத்துகள் 26 மாத்திரமே இருந் தாலும் புதிய புதிய வார்த்தைகளையும் உச்சரிப்பு

களையும் அடிக்கடி சேர்த்துக் கொண்டே வருகிறது, ஆனால் 'கன்னி நற்றமிழ்' மொழியிலோ இரண்டு கூடை எழுத்துகள் (247) இருந்தாலும் சரியான உச்சரிப்புக்கு வார்த்தை கிடையாது. 'ங' வரிசையில் உபயோகமில்லாத எழுத்துகளையும் வைத்துக் கொண்டு "ஙப்போல் வளை" என்கிறார்கள். ஆகாரத்திற்கும், ஐகாரத்திற்கும், ஓகாரத்திற்கும் அனாவசியமான பல எழுத்துகளை வைத்துக் கொண்டு, குறிகளையும் உருப்படிகளையும் அதிகமாக்கிக் கொண்டிருக்கிறார்கள். இவை எதற்காக எனக் கேட்டால் 'பெரியவர்கள் போன வழி' என்கிறார்களே ஒழிய, சிறிதும் பகுத்தறிவை உபயோகிக்க பண்டிதர்களுக்குத் தெரிவதில்லை."

"ஆங்கிலத்தில் *A, E, I, O, U,* முதலிய எழுத்துகளுக்குப் புதிது புதிதான உச்சரிப்புகள் வேண்டுமென்று அவ்வெழுத்துகளின் மேலே வித்தியாசமான கோடுகள் போட்டு அதைச் சீர்படுத்துகிறார்கள். தமிழ்ப் பண்டிதர்கள் 247 எழுத்தை வைத்துக் கொண்டு, 'தொண்டர் நாதனை' என்கிற சோம்பேறிப் பாட்டைப் பாடிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால், அவர்கள் மொழிக்கு ஜெர்மனியிலிருந்து டைப்ரைட்டிங் மெஷின் செய்து வர வேண்டியிருக்கிறது. தமிழில் சுருக்கெழுத்து (*Short hand*) எழுதுவதென்றாலோ தமிழ்ப் பண்டிதர்களால் கனவு கூடக் காண முடிவதில்லை!

"வாழ்க்கையில் மிகவும் முக்கியமான சமூக-சமயச் சீர்திருத்தமே செய்ய முடியாத—அவ்வளவு குறுகிய நோக்கத்தையுடைய பெரும்பாலான பண்டிதர்களுக்கு மொழிச்சீர்திருத்தத்தைப் பற்றி நினைப்பதென்றால் எப்படி முடியும்?"

இப்பொழுது 'விடுதலை' நாளிதழில் வெளிவந்து கொண்டிருக்கும் தமிழ் எழுத்துச் சீர்திருத்தத்திற்கு முழுமுதல் முன்னோடியே குருசாமிதான். இத் திட்டத்தை பெரியாருக்கு எடுத்துச் சொல்லி, ஏற்றுக்கொள்ள வைத்து, நடைமுறைக்குக் கொண்டுவந்தார்.

தமிழகத்தில் வீரமா முனிவருக்குப் (பெஸ்கி) பிறகு முதன் முதல் எழுத்தில் புரட்சியை உண்டாக்கியவர்கள் சுயமரியாதை இயக்கத் தவரே யாவர்.

1935 - ஜனவரியிலிருந்து 'குடி அரசு' இதழில் இத் திட்டம் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டது.

இத் திட்டத்தை விளக்கி ஜனவரி - 13-ம் நாள் 'குடி அரசு' இதழில் 'தமிழ் எழுத்திலும் புரட்சியா'? என்ற தலைப்பில் குருசாமி இவ்விதம் எழுதினார்:

> ''இந்த சு. ம. காரர்கள் மதம், கடவுள், ஜாதி, பழக்க, வழக்கம் முதலியவைகளில் தலைகீழ்ப் புரட்சி செய்வது போதாதென்று தமிழ் எழுத்தின் தலையிலும் கை வைத்துவிட்டார்கள். 'தமிழ் அன்னையைக் காப் பாற்றுங்கள்' என்று யாரோ சிலர் பேசிக்கொண்டிருப்பது போல் என் காதில் விழுகிறது. இது ஒருக்கால் என் காதின் கோளாறாக இருந்தாலும் இருக்கலாமோ என்னமோ?போகப்போகத் தெரிந்து கொள்ளலாம். தமிழ் எழுத்தில் பல சீர்திருத்தங்கள் செய்ய வேண்டுமென்று வெகு ஆண்டுகளாக நினைத்துக் கொண்டிருப்பவர்களில் நானும் ஒருவன். இதை முன்னிட்டே சில ஆண்டுகளுக்கு முன்பு திருச்சிக்கு அடுத்த துறையூரில் (1932) நடந்த தமிழர் மாநாட்டில் ஒரு தீர்மானம் கொண்டுபோனேன். அப்போது அங்கு வந்திருந்த தமிழ்ப் புலவர்கள் என் தீர்மானத்தை நிராகரித்து விட்டார்கள். பிறகு சென்ற ஆண்டு சென்னையில் நடந்த தமிழன்பர் மாநாட்டிலும் அத் தீர்மானத்தைக் கொண்டுபோனேன். துறையூரில் கூடியவர்களைவிட சென்னை மாநாட்டில் கூடியவர்கள் சற்றுஅதிக அறிவாளியாகையால், மேற்படி தீர்மானத்தை ஏற்றுக்கொண்டது மன்றி, எழுத்துகளைச் சீர்திருத்துவது பற்றி ஆராய்ச்சி செய்வதற்காக 11 பேர்கள் கொண்ட கமிட்டியை நியமித்தார்கள். ஆயினும், கமிட்டியைக் கூட்ட எவரும் இதுவரையில் எந்தவித முயற்சியும் எடுத்துக் கொள்ளவில்லை. இந்த நிலைமையில்

'குடி அரசு' ஆசிரியர் மேற்கொண்ட பணியை எடுத்துக் கொண்டதற்காக முற்போக்கான தமிழர்களாய் இருப்பவர்கள் அவர்களைப் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறார்கள். ஊன, ஊண, ஊல, ஊள, ஞு, ஞா, ஞு - முதலிய எழுத்துகளை முறையே னை, ணை, லை, ளை, னா, ணா, றா — என்று திருத்திப் பிரசுரிக்க ஆரம்பித்திருப்பதானது தமிழைப் புதிதாய்க் கற்றுக்கொள்வோருக்கு எவ்வளவு எளிது என்னும் விஷயம், இனிப் போகப் போகத்தான் தெரியும். இந்த முறைகள் பழக்கத்தில் வந்துவிட்டால் டைப் ரைட்டிங், அச்சுக் கோர்த்தல் முதலியவைகளுக்கு எவ்வளவு சுலபமாய் இருக்கும் என்பதை எடுத்துக் கூறத் தேவையில்லை.''

''இதை எல்லாப் பத்திரிகை ஆசிரியர்களும் கையாண்டால் நல்லது. ஆனால், சு. ம. காரர்கள் சொல்வதால் நாம் எட்டிக்குப் போட்டிதான் செய்யவேண்டும் என்ற மனப்பான்மை கொண்ட தமிழ்ப் பத்திரிகை ஆசிரியர்களும் சிலர் இருக்கின்றார்களாதலால் நம்முடைய முயற்சி முழு வெற்றியடையச் சில ஆண்டுகள் பிடித்தாலும் பிடிக்கலாம். 'இன்னும் கொஞ்சம் கெட்டுப் போகிறேன் பந்தயம் கட்டு' என்பவர்களைப்பற்றி நமக்குக் கவலையில்லை. ஆனால் தமிழ்மொழி வளர்ச்சியில் உண்மையிலேயே கவலை கொண்டவர்கள் அனைவரும் இந்த மாற்றங்களைப் பரப்புவதற்கு முயற்சித்தால் இரண்டொரு மாதங்களிலேயே இதைச் சர்வசாதாரணமான பழக்கமாக ஏற்படுத்திவிடலாம்''.

இவ்விதழிலிருந்தே எழுத்துச் சீர்திருத்தத்துடன் 'குடி அரசு' வெளிவரலாயிற்று.

பிற்காலத்திஸ் 1950-க்குப் பிறகு 'விடுதலை'யில் F உச்சரிப்பு வருகின்ற இடங்களில்—'பிரெஞ்சு' என்று வருமிடத்தில் 'F பிரெஞ்சு' என்பது போன்று—F எழுத்தை உபயோகித்தே எழுதினார். ஆயினும் இம்முறையைச் சில நாட்களில் மாற்றிக் கொண்டு F வரும் இடங்களில்(ஃ)ஆய்த எழுத்தை உபயோகித்தார்.

## பெயரிடுதலில் புரட்சி

குருசாமி குழந்தைகளுக்குப் பெயர் வைப்பதிலும் புரட்சியை ஏற்படுத்தினார். 1928-லேயே பெரியாரின் அண்ணன் ஈ.வெ. கிருஷ்ணசாமியின் மகளுக்குக் குடும்பத்தாரால் வைக்கப் பெற்ற தீனதயாளு என்ற பெயரை மாற்றி 'மிராண்டா' என்று பெயரிட்டார். மிராண்டா என்பது சேக்ஸ்பியர் நாடகமொன்றில் வரும் ஒரு பெண் கதாபாத்திரத்தின் பெயராகும். அதுபோன்றே மாயவரம் நடராசன் மகனுக்கு லெனின் என்றும், நாகை காளி யப்பன் மகனுக்கு டார்வின் என்றும், தம் மகளுக்கு ரஷியா என்றும், மகனுக்கு கவுதமன் என்றும் பெயரிட்டார். இம் முறையை அனைவரும் பின்பற்றினர். அது மட்டுமன்று. தம் குழந்தைகளுக்குத் தாய் தந்தையருடைய முதலெழுத்துகளைப் பெயரின் முதலெழுத்துகளாக வைத்தார். இதன்படி ரஷியாவை 'கு.கு. ரஷியா' என்றும்' கவுதமனை 'கு. கு. கவுதமன்' என்றும் அழைக்கும்படி செய்தார்.

## சர்வ சமயக் கூட்டத்தில் குருசாமி

1935-ம் ஆண்டு பல்லாவரத்தில் சர்வசமயக் கூட்டம் என்ற பெயரால் மறைமலையடிகள் ஒரு கூட்டத்தை ஏற்பாடு செய்தார். புலவர்கள், மடாதிபதிகள் அனைவருக்கும் அழைப்புகள் அனுப்பப் பெற்றன.

சுயமரியாதை இயக்கத்தினருக்கும் அழைப்பு அனுப்பப் பெற்றது. அழைப்பை ஏற்றுச் சுயமரியாதை இயக்கத்தின் சார்பாக குருசாமி கலந்து கொண்டார்.

மண்டபத்தில் இந்துமதக் கடவுளர்களான பார்வதி – பரம சிவனார், கணபதியார், சுப்பிரமணியனார், கல்விக் கடவுள் சரஸ்வதி, செல்வக் கடவுள் லட்சுமி போன்றவர்களின் படங்கள் வரிசையாகத் தொங்க விடப்பட்டிருந்தன. மண்டபம் பார்ப் பதற்கு ஒரு படக் கடைபோல் காட்சியளித்தது.

கூட்டத்திற்குத் தமிழகமெங்குமிருந்து பல மடாதிபதிகளும், சைவ அன்பர்களும், திரு.வி.க. போன்ற தமிழ் அறிஞர்களும் வந்திருந்தனர்.

குருசாமி தனது சொற்பொழிவின் முற்பகுதியில் சுயமரியாதை இயக்கத்தின் குறிக்கோள் பற்றியும் 'பகுத்தறிவு என்றால் என்ன?' என்பது பற்றியும் நல்ல முறையில் எடுத்துச் சொன்னார். பின்னர், மண்டபத்தை அண்ணாந்து மேலே குறிப்பிட்ட கடவுளர்களின் படத்தை ஒரு முறை சுற்றிலும் பார்த்தார். கூட்டத்தினருக்கு பரம சிவனின் படத்தைச் சுட்டிக் காண்பித்து "இந்த பரமசிவனின் கதை உங்களுக்குத் தெரியுமா? பக்கத்தில் பார்வதி இருக்க, தலை உச்சியிலே கங்கையிருப்பதாகக் கதை கட்டியிருக்கிறீர்களே, இது உங்கள் பகுத்தறிவுக்கு ஒத்து வருகிறதா? அவர் மகன் கணபதியாரைப்போல், திருமணமான உங்களில் எவருக்காவது குழந்தை பிறந்தால் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்வீர்களா? கணபதியார் தம்பி இருக்கிறாரே சுப்ரமணியனார் – அவருக்குக் கதையில் உள்ளது போல் பன்னிரண்டு கைகள் இருக்கமுடியுமா? உங்கள் அறிவு அதை நம்புகிறதா? இதையெல்லாம் கேட்டால், எங்களை நாத்திகன் என்கிறீர்கள். உங்களுக்கெல்லாம் என்ன துணிச்சல் இருக்க வேண்டும்?"

"பெரிய புராணத்தின்படி, சில முக்கிய நாயன்மார்கள் கலப்பு மணமும், விதவா மணமும் செய்திருக்கிறபடியால், உண்மையான சைவர்களாகிய நீங்கள் அவ்வாறு செய்வீர்களா? செய்யத் தூண்டு வீர்களா?"

"பார்ப்பனச் சிசு திருஞானசம்பந்தருக்கு ஒரே பாடலில் அருள் கூர்ந்த கடவுள்—தமிழராகிய அப்பருக்கு பத்துப் பாடல்கள் வரையில் அருள் சுரக்காமல் இருந்த உங்கள் கடவுளின் ஓர வஞ்சனையை நினைக்கவே வெட்கமாக இருக்கிறது".

"நாயன்மார்கள் பாடிய தேவாரத்தை அலட்சியமாகக் கருதி வெறுத்து ஒதுக்கிவிட்டு, சமஸ்கிருத மந்திரங்களை மட்டும் ஏற்றுக் கொள்கின்ற உங்கள் சைவக் கடவுளர்களின் செயல்களைப்பற்றி உங்களுக்கு வெறுப்பாக இல்லையா?" என்று கேள்விகளைத் தொடுத்தார்.

குத்தூசியார் அன்று கேட்ட கேள்விகளுக்கு இன்றுவரை எந்தச் சைவப் பெரியார்களும், மடாதிபதிகளும் பதில் சொல்லவே இல்லை.

## குருசாமி அரங்கேற்றிய இரண்ய நாடகம்

கல்வி அறிவு பெறாத மக்களுக்கு நாடகத்தின் மூலம், எளிய முறையில் கருத்து விளக்கம் தரமுடியும் என்பதை குருசாமி மிகத் தெளிவாக உணர்ந்திருந்தார்.

புதுவைக் கவிஞர் ஒரு முறை தனது இல்லத்திற்கு வந்து தங்கி இருந்த போது, அவருடைய ஆற்றலை நன்கு உணர்ந்திருந்த குருசாமி, அக் காலச் சூழ்நிலைக்கேற்ப இயக்கப் பிரச்சாரத்திற் கேற்ற ஒரு நாடகத்தை எழுதித் தரும்படிக் கேட்டுக்கொண்டார்.

புதுவைக் கவிஞரும் பழைய இரண்யன் கதையைப் புதிய நோக்குடன் நாடகமாக எழுதினார். இந்த இரண்யனை மேடைக்குக் கொண்டு வர குருசாமி - விரும்பினார். தானே நாடகத்தில் இரண்யனாக நடிக்கவும் முடிவு செய்தார். மேலும், கே.எம். பாலசுப்ரமணியம், ரங்கநாதன், டி. சம்பந்தம், டி. என். ராமன், எம். எஸ். முத்து மற்றும் பலரைத் தன்னுடன் நடிக்க வைத்தார்.

இந்த நாடகம் 9-9-1934 ஞாயிறு மாலை பெரியார் ஈ.வெ.ரா. தலைமையில் சென்னை வி.பி. ஹாலில் மிகப் பெரிய விளம்பரத் துடன் அரங்கேற்றப்பட்டது.

இரண்யன் பழைய புராணக் கதை. 'ஹரி' பக்தனான பிரக லாதனை ஹரி பக்தியை விட்டு விடும்படி அவன் தந்தையும், 'அசுரனு'மாகிய இரண்யன் கட்டாயப்படுத்தியதாகவும், பக்தன் கஷ்டத்தைக் கண்டு சகிக்காத நாராயணமூர்த்தி, இரண்யன் உதைத்த தூணிலிருந்து தோன்றி இரண்யனின் மார்பைக் கிழித்துக் கொன்றதாகவும் அக் கதை வழங்குகிறது.

அது கட்டுக்கதை என்பதே இந் நாடகக் கதையின் நோக்கம். இப் புரட்சி நாடகம் மக்களைப் பெரிதும் கவர்ந்தது.

நாடகத்தின் இறுதிக் காட்சியான நரசிங்கமூர்த்தி தூணி லிருந்து வெளி வரும் காட்சியில், இரண்யன் (குருசாமி) "நீ சொல்லும் நாராயணன்—எங்கே இருக்கிறான், காட்டுவாயா?" என்று கேட்பார்,

"அவன் எங்குமிருப்பான் — இதோ இருக்கும் தூணிலு மிருப்பான், துரும்பிலுமிருப்பான்" — என்பான் பிரகலாதன்.

(பிரகலாதனாக நடித்தவர் கே. எம். பாலசுப்பிரமணியன் ஆவார்).

இரண்யன் (குருசாமி) கோபத்துடன் "இந்தத் தூணிலுமா?" என்று தூணை உதைப்பார். சிங்கம் போல் மாறுவேடம் பூண்டிருந்தவர் தூணின் மறைவிலிருந்து வெளி வந்தார்! "அடே, நான் தூணை உதைத்தால் நாராயணனாகிய நீ வந்தாய்! உன்னை உதைத்தால் யார் வருவார்?" என்று கேட்டபடி—குருசாமி ஆவேசத்துடன் கடவுளான நரசிங்கமூர்த்தியைக் காலைத் தூக்கி உதைத்தார். நரசிங்க மூர்த்தி கீழே சாய்ந்தார். கடவுள் அடிபட்டுச் சாய்ந்ததைக் கண்ட மக்கள் அனைவரும், என்ன நடக்குமோ என்ற பயத்துடனும் ஆர்வத்துடனும் உணர்ச்சி பொங்க எழுந்து நின்று விட்டனர்.

மக்களை அச்சுறுத்தத் தக்க அளவுக்கு குருசாமியின் நடிப்புத் திறன் அமைந்திருந்தது.

"இரண்யன் நாடகத்தை குருசாமிக்கு முன்னும், பின்னும் எவரும் இம் மாதிரி உணர்ச்சி பூர்வமாக நடித்ததில்லை, இம் மாதிரி நாடகத்தை வேறு எவரும் எழுதியதும் இல்லை" என்று, இந் நாடகத்தை நேரில் பார்த்து மகிழ்ந்த நாகை கே. முருகேசனும், மயிலை சீனி வேங்கடசாமியும் பாராட்டிக் கூறினர்.

இந் நாடகத்திற்கு பாரதிதாசன், நாகை முருகேசன், குஞ்சிதம் குருசாமி, ஜீவானந்தம். சாமி சிதம்பரனார், மயிலை. சீனி வேங்கடசாமி, மாயவரம் நடராஜன், எஸ்.வி. லிங்கம், பொன்னம்பலனார் மற்றும் பல இயக்க முன்னணித் தலைவர்களும், தொண்டர்களும், பொது மக்களும் கலந்து கொண்டு, கருத்து விளக்கம் பெற்றுக் களிப்பில் ஆழ்ந்தனர்.

(செய்தி - 'பகுத்தறிவு' 16-9-1934)

இந்த நாடகம் பின்னர் 'இரண்யன் அல்லது இணையற்ற வீரன்' என்ற பெயரில் நூலாக வெளிவந்தது. பாரதிதாசன் இந் நூலின் முன்னுரையில்...

"ஆத்திக நெருப்பில் துடித்த தமிழர் நெஞ்சுக்கு ஏற்ற நீர் நிலையாயிற்று இரண்யன். எதிர்பாராத பெரு வரவேற்புக் கிடைத்தது இரண்யனுக்கு. அது மட்டுமில்லை; அறிஞர் குருசாமி அவர்கள்

இரண்யனை நாடக மேடைக்குக் கொண்டு வந்தார். தாமே இரண்யனாக நடித்தார். அறிஞர் கே. எம். பாலசுப்ரமணியனார் முதலிய பலரையும் நடிக்க வைத்தார். 'எண்ணியது வெற்றி யடைந்தது.'

சுயமரியாதை இயக்கக் கருத்துகளைப் பொது மக்களுக்கு விளக்குவதற்கு முதன் முதல் நாடகக் கலையைப் பயன்படுத்தியவர் குருசாமியாவார். குருசாமிக்குப் பின்னரே அண்ணாத்துரை மற்றும் பலரும் நாடக மேடையை இயக்கப் பிரச்சாரத்திற்கு முழுமை யாகப் பயன்படுத்திக் கொண்டனர். இவர்களுக்கும் முன்னோடி குருசாமியே ஆவார். படித்த பட்டதாரியான குருசாமி 1934-லேயே மேடையில் நடித்தது கொள்கைப் பிரச்சாரம் செய்வதற் காகவே யாகும்.

இளம் வயதிலேயே திருவாரூர் எண்கண் வெங்கடாஜல முதலியாருடன் சேர்ந்து கதா காலட்சேபம் செய்து அனுபவம் பெற்றிருந்த குருசாமி, மேடையேறி நடிகராகி நடித்தது வியப்புக் குரியதன்று!

**பாரதிதாசன் கவிதைகள்**

நாடக அரங்கேற்றத்துக்குப் பின்னர் ஒரு முழுநிலா நாளில் குருசாமி தனது நண்பர் குழுவினருடன் மகாபலிபுரத்திற்கு இன்பப் பயணம் செய்வதற்கு ஏற்பாடு செய்தார். சென்னை அடையாறு பாப்பாஞ்சாவடியிலிருந்து மாலை நாலரை மணி யளவில் தோணியிலேயே செல்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது.

இப் பயணத்தில் குருசாமியுடன், குஞ்சிதம், நாயினா சுப்ரமணியபிள்ளை குடும்பத்தினர், பாரதிதாசன், எஸ். வி. லிங்கம், ப. ஜீவானந்தம், மாயவரம் நடராஜன், மயிலை சீனி வேங்கடசாமி, சாமி சிதம்பரனார், நாரண துரைக்கண்ணன் மற்றும் நெருக்கமான நண்பர்கள் சிலரும் கலந்து கொண்டனர்.

இந்த உல்லாசப் பயணத்திலும் சீர்திருத்தக்காரர்களான இக் குழுவினர் பகுத்தறிவுப் பாடல்கள் பற்றி உரையாடினர்.

புதுவைக் கவிஞரால் புதிதாக எழுதப்பட்ட 'சஞ்சீவி பர்வதத் தின் சாரல்' என்ற புதிய நீண்ட கவிதையை குருசாமி படிக்க மற்ற வர்கள் சுவைத்துக் கேட்டனர்.

ஆறு மணியளவில் திடீரென்று கவிஞர் எழுந்து நின்றார். கீழ்த் திசையில் ஈச்ச மரங்களுக்கும், பனை மரங்களுக்குமிடையே முழுநிலவு உதிப்பதை ஊன்றிப் பார்த்தார். நிலவு தனது தலை உச்சியின்மேல் வரும் வரையில் ஆடாது அசையாது, எதுவும் பேசாது, நிலவை நோக்கிய படியே நின்றார் கவிஞர்.

கவிஞரின் நிலையைக் கண்ட மற்றவர் அனைவரும் வியப்புடன் அவரைப் பார்த்தனர். கேலியும் கிண்டலும் செய்தனர்.

காலை ஒன்பது மணியளவில் தோணி மகாபலிபுரம் சென் றடைந்தது.

கவிஞரை நோக்கி, ''இரவு கண்ட காட்சியைக் கவியுள்ள மாகிய காமிராவில் படமாக்கினீர்களே, அதை எங்களுக்குக் காட்டலாமா?'' என்று கேட்டார் குருசாமி.

கவிஞரும், ''படத்தை டெவலப் செய்து காட்டுகிறேன்'' என்று கூறினார்.

**கவிஞர் பிடித்த படக் காட்சி**

சென்னையிலே ஒருவாய்க்கால் — புதுச்
சேரி நகர்வரை நீளும்.
அன்னதில் தோணிகள் ஓடும் — எழில்
அன்னம் மிதப்பது போலே.
என்னருந் தோழரும் நானும் — ஒன்றில்
ஏறி யமர்ந்திட்ட பின்பு
சென்னையை விட்டது தோணி — பின்பு
தீவிரப்பட்டது வேகம்.
தெற்குத் திசையினை நோக்கி — நாங்கள்
சென்றிடும்போது விசாலச்
சுற்றுப் புறத்தினில் எங்கும் — வெய்யில்
தூவிடும் பொன்னொளி கண்டோம்!
நெற்றி வளைத்து முகத்தை — நட்டு
நீரினை நோக்கியே நாங்கள்
அற்புதங் கண்டு மகிழ்ந்தோம் — புனல்

அத்தனையும் ஒளி வானம்!
சஞ்சீவி பர்வதச் சாரல் — என்று
சாற்றும் சுவடி திறந்து
சஞ்சார வானிலும் எங்கள் — செவி
தன்னிலும் நற்றமிழ் ஏற்றி
அஞ்சாறு பக்கம் முடித்தார் — மிக்க
ஆசையினால் ஒரு தோழர்.
செஞ்சுடர் அச்சமயத்தில் — எம்மைச்
செய்தது தான்மிக்க மோசம்.
மிக்க முரண் கொண்ட மாடு — தன்
மூக்குக் கயிற்றையும் மீறிப்
பக்க மிருந்திடும் சேற்றில் — ஓடிப்
பாய்ச்சிடப் பட்டதோர் வண்டிச்
சக்கரம் போலிருள் வானில் — முற்றும்
சாய்ந்தது சூரிய வட்டம்!
புக்க பெருவெளி யெல்லாம் — இருள்
போர்த்தது! போனது தோணி.
வெட்ட வெளியினில் நாங்கள் — எதிர்
வேறொரு காட்சியும் கண்டோம்
குட்டைப் பனைமரம் ஒன்றும் — எழில்
கூந்தல் சரிந்ததோர் ஈந்தும்
மட்டைக் கரங்கள் பிணைத்தே — இன்ப
வார்த்தைகள் பேசிடும் போது
கட்டுக் கடங்கா நகைப்பைப் – பனை
கலகல வென்றுகொட் டிற்றே.
எட்டிய மட்டும் கிழக்குத் — திசை
ஏற்றிய எங்கள் விழிக்குப்
பட்டது கொஞ்சம் வெளிச்சம் — அன்று
பவுர்ணமி என்பதும் கண்டோம்!
வட்டக் குளிர்மதி எங்கே — என்று

வரவு நோக்கி யிருந்தோம்.
ஒட்டக மேல்அர சன்போல் — மதி
ஓர்மரத் தண்டையில் தோன்றும்
முத்துச் சுடர்முகம் ஏனோ — இன்று
முற்றும் சிவந்தது சொல்வாய்.
இத்தனை கோபம் நிலாவே — உனக்கு
ஏற்றியதார் என்று கேட்டோம்!
உத்தரமாக எம்நெஞ்சில் — மதி
ஒன்று புகன்றது கண்டீர்.
சித்தம் துடித்தது நாங்கள் — பின்னால்
திரும்பிப் பார்த்திட்ட போது.
தோணிக் கயிற்றினை ஓர் ஆள் — இரு
தோள்கொண் டிழுப்பது கண்டோம்.
காணச் சகித்திட வில்லை — அவன்
கரையொடு நடந்திடு கின்றான்.
கோணி முதுகினைக் கையால் — ஒரு
கோல்நுனி யால்மலை போன்ற
தோணியை வேறொரு வன்தான் — தள்ளித்
தொல்லை யுற்றான்பின் புறத்தில்!
இந்த உலகினில் யாரும் — நல்
இன்ப மெனும் கரை யேறல்
சந்தத மும்தொழி லாளர் — புயம்
தரும்து ணையன்றி வேறே
எந்த விதத்திலும் இல்லை — இதை
இருப துதரம் சொன்னோம்.
சிந்தை களித்த நிலாவும் — முத்துச்
சிந்தொளி சிந்தி உயர்ந்தான்.
நீல உடையினைப் போர்த்தே — அங்கு
நின்றிருந்தாள் உயர் விண்ணாள்
வாலிப வெண்மதி கண்டான் — முத்து

மாலையைக் கையிலிழுத்து

நாலுபுறத்திலும் சிந்தி — ஒளி

நட்சத்திரக் குப்பையாக்கிப்

பாலுடல் மறையக் காலை — நாங்கள்

பலிபு ரக்கரை சேர்ந்தோம்.

கவிஞரின் திறமையை உணர்ந்த குருசாமி பல நேரங்களில், பல சூழ்நிலைகளில் இம்மாதிரியான பலப்பல கவிதைகளை இயற்றுவதற்கும் இரணியனைப் போன்ற பற்பல படைப்புகளைப் படைப்பதற்கும் கவிஞருக்கு உறுதுணையாக இருந்தார்.

பொது வாழ்க்கையில் ஈடுபட்டு, பொதுத் தொண்டாற்றி வந்த குருசாமி, வருவாய்க்கு நாணயமானதோர் தொழிலையும் தம் பொதுப் பணியின் தொடக்க காலத்திலேயே மேற்கொண்டிருந்தார் 1931 ஏப்ரல் முதலே சென்னை செம்பியம் சப்ரிஜிஸ்திரார் அலுவலகத்தில் 35 ரூபாய் சம்பளத்திற்கு, சர்க்கார் ஊழியராகச் (எழுத்தராக) சேர்ந்த குருசாமி, சிலகாலம் போலீசு கமிஷனர் அலுவலகத்திலும், லோகல் போர்டு இன்ஸ்பெக்டர் அலுவலகத்திலும் பணியாற்றி விட்டு, 1935-ல் உதவி பஞ்சாயத்து ஆபீசராக கடலூருக்கு வந்து சேர்ந்தார்.

இக் காலத்தில் குஞ்சிதம் குருசாமியும் கடலூர் பெண்கள் ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் தலைமை ஆசிரியையாக அலுவல் பார்த்து வந்தார்.

குருசாமி கடலூருக்கு வந்தவுடன் புதுவைக் கவிஞர் பாரதிதாசனுடைய தொடர்பு மேலும் நெருக்கமாகியது.

ஓர் இலக்கியமோ, ஒரு வரலாறோ உருவாவதற்கு ஏதாவது ஒரு சூழ்நிலையும் ஒரு பின்னணியும் ஒரு தூண்டுதலும் இருந்தே ஆகவேண்டும். அம் முறையில் பாரதிதாசனின் சீர்திருத்தக் கவிதைகள் உருவாவதற்கு சாதிமத எதிர்ப்பும் சுயமரியாதை இயக்கமும்தான் சூழ்நிலையும், பின்னணியுமென்றால், தூண்டுதலாக குருசாமி இருந்தார்.

இது உண்மை, வெறும் புகழ்ச்சி இல்லை.

ஒரு நாள் குஞ்சிதம் அம்மையார் தனது மகள் செல்வி ரஷ்யாவைக் கையில் வைத்துக் கொண்டிருந்தபோது, கவிஞர்

வீட்டுக்கு வந்தார். அவரை வரவேற்ற குஞ்சிதம், "என் குழந்தையைத் தாலாட்டுவதற்குக்கூடத் தமிழில் நல்லதொரு தாலாட்டுப் பாடல் இல்லையே, இருப்பதெல்லாம் ஏதாவதொரு பொம்மையைப் (கடவுளை) பற்றியல்லவா இருக்கிறது!" என்று வருத்தத்துடன் கூறினார்.

கவிஞர் தாளொன்று தரச் சொல்லி, அக் கணமே ஒரு பாடலை எழுதிக்கொடுத்தார்.

"சோலை மலரே! சுவர்ணத்தின் வார்ப்படமே!
காலையிளஞ் சூரியனைக் காட்டுய பளிங்குருவே!"
—என்று ஆரம்பித்து

"தெய்வீகத்தை நம்பும் திருந்தாத பெண்குலத்தை
உய்விக்க வந்த உவப்பே பகுத்தறிவே
எல்லாம் கடவுள் செயல் என்று—துடைநடுங்கும்
பொல்லாங்கு தீர்த்துப் புதுமை செய வந்தவளே
வாயிலிட்டுத் தொப்பை வளர்க்கும் சதிக்கிடங்கைக்
கோயிலென்று காசுதரும் கொள்கை தவிர்ப்பவளே!
சாணிக்குப் பொட்டிட்டுச் சாமியென்பார்—செய்கைக்கு
நாணி உறங்கு! நகைத்து நீ கண்ணுறங்கு!"
(பாரதிதாசன்—1935)

என்று முடியும் தாலாட்டுக் கவிதையைச் சுயமரியாதை இயக்கப் பெண்கள் பாட வசதியாக எழுதிக் கொடுத்தார்.

இச் சமயத்தில் குருசாமி கவிஞரிடம் அவருடைய கவிதைகளை வெளியிட வேண்டிய இன்றியமையாமையை எடுத்துச் சொல்லி அதற்கான ஏற்பாட்டையும் உடனே செய்தார்.

இதுவரை கவிஞரால் அவ்வப்போது எழுதப்பட்டு ஆங்காங்கே சிதறல்களாகக் கிடந்த கவிதைகளை எல்லாம் தேடிப் பிடித்துத் திரட்டித் தொகுத்து ஒரு நூல் வடிவில் கொண்டுவரும் முயற்சியைத் தொடங்கினார்.

1938 ஜனவரியில் புத்தாண்டுப் பரிசாக தமிழகத்திற்கு இதுவரை எவரும் அளித்திராத வகையில் ஒரு பரிசு தந்தார். அதுதான்—**பாரதிதாசன் கவிதைகளின்** முதல் தொகுப்பு.

இக் கவிதைத் தொகுப்பின் முன்னுரையில்,

''தோழர் பாரதிதாசன் அவர்களின் பாடல்கள் இதுகாறும் பத்திரிகைகளில் மட்டுமே வெளிவந்திருக்கின்றன. ஒன்றிரண்டு மட்டும் மிகச் சிறு புத்தகங்களாக வெளிவந்திருக்கின்றன. ஒரு நல்ல புத்தக வடிவில் அவரது கவிகளைப் பார்க்க வேண்டுமென்று எண்ணிய பலருள் நானும் ஒருத்தி. இந்தப் பலநாள் ஆசையும், தோழர் நாராயணசாமி அவர்களின் பொருள் உதவியும், டாக்டர். மெ. மாசிலாமணி அவர்களின் ஆதரவும், தோழர் குருசாமி அவர்களின் தூண்டுதலும் சேர்ந்ததே இப் புத்தகம்'' என்று குஞ்சிதம் குருசாமி எழுதியுள்ளார்.

கடலூர் தி.க. நாராயணசாமியின் பண உதவி கிடைக்காதிருக்குமானால் பாரதிதாசன் கவிதைகள் இச் சமயம் அச்சேறி இருக்காது.

குஞ்சிதம் அம்மையாரால் வெளியிடப்பட்ட இந்நூல் பல பதிப்புகள் வந்து, பல்லாயிரக்கணக்கில் தமிழகத்தில் விற்பனையாகியுள்ளது.

ஆனால், இப் பதிப்புக்குப் பின்னால் வந்த அத்தனை பதிப்புகளிலும், வெளியீட்டாளராகிய அம்மையாரின் முன்னுரையும் பெயரும் இல்லாமற் போனது வியப்புக்குரியதன்று. வளர்ந்துவிட்ட தமிழ்ப் பெரியவர்களின் 'பண்பாடு' தமிழகம் அறிந்தது தான்.

பெரியார் ஈ. வெ. ரா.வும் இந் நூலுக்கு ஓர் முன்னுரை அளித்தார்.

.........''இப் பாட்டுகளைப் பாடிய தோழர் பாரதிதாசன் அவர்களுக்கும் இவைகளைத் திரட்டி வெளியாக்கிய தோழர் குஞ்சிதம் குருசாமி அவர்களுக்கும் சீர்திருத்த உலகம் கடப்பாடுடையதாகும்'' என்று எழுதிப் பெரியார் இம் முயற்சியில் ஈடுபட்டவர்களைப் பாராட்டினார்.

'புரட்சிக் கவிஞர்' என்றும் 'பாவேந்தர்' என்றும் பாராட்டப்படுகின்ற புதுவைக் கவிஞர் கனக சுப்புரத்தினத்தை நல்லவண்ணம் தமிழகத்திற்கும்--ஏன் உலகத்திற்குமே அறிமுகமாக்கியது ''**பாரததாசன் கவிதைகள்**'' என்னும் முதல் கவிதைத் தொகுப்புதான்.

மேலும், தமிழ்நாட்டில் ஒரு கவிஞரின் பெயராலேயே பாரதி தாசனுக்குத்தான் முதன்முதல் கவிதை நூல் வெளியாயிற்று.

அக் காலத்தில் பாரதியாருக்கும்கூட 'கண்ணன் பாட்டு', 'குயில் பாட்டு' 'தேசிய கீதங்கள்' என்று தனித் தனியான சிறு நூல்களாகத்தான் கவிதைகள் வெளியாகியிருந்தன.

## "தமிழர் தலைவர் பெரியார்"

1938-ம் ஆண்டு, ஆச்சாரியாரால் பள்ளிக்கூடங்களில் திணிக்கப் பெற்ற கட்டாய இந்தியை எதிர்த்து பெரியார் ஈ. வெ. ரா. தலைமையில் தமிழகமே சீறியெழுந்தது. பெரியார் உட்பட ஆயிரக்கணக்கானவர்கள் சிறை சென்றனர். தியாகச் செம்மல்களான நடராசன், தாளமுத்து போன்றோர் சிறைக் கொடுமைக்கு ஆளாகி உயிரிழந்தனர். 60 வயதான ஈ. வெ. ரா. சிறையிலிருந்து வெளிவருவதற்குள், அவருடைய வாழ்க்கை வரலாற்றை எழுதி முடித்து, அவர் சிறையினின்று விடுதலையாகிற அன்றே அந் நூலை அவர் முன்வைத்து,அவரை ஆச்சரியத்திலாழ்த்த வேண்டுமென்று குருசாமி விரும்பினார். அதையொட்டி ஈ.வெ.ரா.வின் வாழ்க்கைக் குறிப்புகளையெல்லாம் திரட்டி ஒன்று சேர்த்து, சாமி சிதம்பரனாரைக் கொண்டு எழுத வைத்தார். சிதம்பரனாரும் ஆர்வத்துடன் இவ்வரிய பணியில் ஈடுபட்டார்.

இந்நூலை முழுவதும் எழுதி முடிப்பதற்குள் ஈ. வெ. ரா. விடுதலை பெற்று வெளிவந்து விட்டார். சாமி சிதம்பரனாரும் வேறு வேலையாகச் சென்றுவிட்டார். இந்த நிலையில் வரலாற்று நூலுக்கு வடிவம் தந்து முடிக்கும் பொறுப்பை குருசாமியே மேற்கொண்டார்.

1938 நவம்பர் 11-ல் சென்னையில் நடந்த தமிழ்நாடு பெண்கள் மாநாட்டில், மாநாட்டுக்குத் தலைமை தாங்கிய நீலாம்பிகை அம்மையார் ஒரு தீர்மானம் கொண்டுவந்தார். அதன்படி, ஈ. வெ. ரா.வின் பெயருக்கு முன் "பெரியார்" என்னும் சிறப்புப் பெயர் கொடுத்து அழைக்கவேண்டுமென முடிவு செய்தனர். இத் தீர்மானம் கொண்டு வரும்படி செய்தவர் குருசாமிதான் என்பதைப் பலரும் அறிவர்.



குஞ்சிதம் குருசாமி

1929-ல் பட்டுக்கோட்டை தொண்டர் மாநாட்டில் பேசும்போது குருசாமி, தமிழர் தலைவர் ஈ. வெ. ரா.வை **நமது பெரியார்** என்றே அழைத்தார். தனிப்பட்ட நண்பர்களுக்குக் கடிதம் எழுதும் போதெல்லாம் ஈ. வெ. ரா.வைப் **பெரியார்** என்றே குறிப்பிட்டு எழுதினார். குருசாமியின் திருமணத்தில் பேசும்போது குருசாமியின் நண்பர் எஸ். இராமநாதனும் ஈ. வெ. ரா.வைப் **பெரியார்** என்றே குறிப்பிட்டார்.

**பெரியார்** என்னும் சிறப்புப் பெயரை ஈ. வெ. ரா.வுக்கு அளிப்பதில் குருசாமி தம்பதியினரே தொடக்க காலம் முதல் ஆர்வம் காட்டினர் என்பதையும் இம் முயற்சியில் வெற்றி பெற்றனர் என்பதையும் இதன் மூலம் அறியலாம்.

குருசாமி முன்னின்று வெளியிட்ட 'தமிழர் தலைவர்' என்னும் நூலில் பதினெட்டாவது அத்தியாயத்தில் 'பெரியார்' என்ற தலைப்பில் ஒரு அத்தியாயமே வெளிவந்துள்ளது என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

'தமிழர் தலைவர்' என்னும் நூலை சாமி சிதம்பரனார் எழுதினாலும், 'பெரியார்' என்னும் அத்தியாயத்தை எழுதியவர் குருசாமியே ஆவார்.

இதில் பெரியாரை தமது வர்ணனைகள் மூலம் படம் பிடித்துக் காட்டியுள்ளார், குருசாமி.

## குருசாமி கண்ட பெரியார்

"சிவந்த மேனி, தடித்த உடல், பெருத்த தொந்தி, நல்ல உயரம், வெளுத்த தலைமயிர், நரைத்த மீசை, நடுத்தரமான தாடி, திரண்டு நீண்ட மூக்கு, அகன்ற நெற்றி, உயர்ந்து மயிரடர்ந்த புருவங்கள், ஆழமான கண்கள், மெதுவான உதடுகள், செயற்கைப் பற்கள், ஒரு சாதாரண மூக்குக் கண்ணாடி."

"பெசன்ட் அம்மையாரின் தலைமயிர்-பெர்னார்ட் ஷாவின் தாடி - தாகூரைவிட அழகான மூக்கு - இவர்கள் மூவரையும்விட அழகான உருண்டை முகம் - ஒரு தனியான முகவெட்டு - என்னமோ ஒருவிதமான கவர்ச்சி."

''இடுப்பில் எப்போதும் ஒரு நான்கு முழத் துணி. காலில் செருப்பு. முக்கால் கையுடன் ஒரு மாதிரியான வெள்ளைச் சட்டை. அதில் வரிசையாக நூல் பொத்தான்கள். பழங்கால முழுக் கோட்டுக்கும், இக் கால ஷர்ட்டுக்கும் நடுவில் ஒரு நூதனமான உடுப்பு. வெளிப் புறத்தில் மூன்று பாக்கெட்டுகள்; உட்புறத்தில் (பணப்பை வைத்துக் கொள்வதற்காக) கட்டாயம் ஒரு பாக்கெட், வெளிப்பையில் செய்தித் தாள்கள், சில கடிதங்கள், பொதுக் கூட்டங்களில் கேட்கப்பட்ட கேள்வித் தாள்கள், இரண்டொரு சிறு புத்தகங்கள்-துண்டுப் பிரசுரங்கள். நாட் குறிப்பு, ஒரு சிறு கத்தி, ஆகிய சகல சாமான்களும் நிறைந்து எப்போதும் உப்பிக் கொண்டேயிருக்கும். இவைகளில் பல வெகு மாதங்களுக்கு முந்தியவைகளாகவும், குப்பைத் தொட்டிக்குப் போக வேண்டியவைகளாகவுமிருக்கும். வெளிப்புறத்துக்கு மேல் ஒரு பவுண்டன் பேனா சொருகப்பட்டிருக்கும். உட்புறத்துப் பையில் ஒரு மணி பர்ஸ். அதன் அறையொன்றில் ஒரு கடிகாரம்.''

''இவ்விதமான சட்டைக்கு மேல் போர்த்தியிருப்பது அய்ந்து முழப் போர்வை. அனேகமாக ஆரஞ்சு அல்லது காபி நிறத்தில். இந்த உடைகள் பெரும்பாலும் அழுக்காகவே இருக்கும். சட்டைப் பைகளின் ஓரங்கள் அடிக்கடி கிழிந்து தொங்கிக் கொண்டிருக்கும். கையில் எப்போதும் ஒரு மொத்தமான தடி. பிடிக்கும் பக்கம் வளைந்திருக்கும்.''

''கையில் ஒரு தோல் பெட்டி. அதற்குப் பூட்டுமில்லை, சாவியுமில்லை. மிக அந்தரங்கமான சொந்தக் கடிதங்கள் முதல் பழைய செய்தித் தாள்கள், பட்டையாக நசுக்கப்பட்ட பற்பசை, மிகப் பழைய பல் ப்ரஷ், மைப் பெட்டி, சோப், கடிதத் தாள், உறைகள் வரையில்— எல்லாம் இப்பெட்டிக்குள்தான். சட்டைப் பைகளிலுள்ள குப்பைகள், அதாவது 'ரிகார்டுகள்' மிகுந்துவிட்டால்

அவைகளில் சில இப்பெட்டிக்குள் வந்துவிடும். இரண்டு மூன்று மாதங்களுக்கொருமுறை பெட்டி மூட முடியாமல் முட்டிக் கொண்டால் இப்பெட்டி காலி செய்யப்படுவதுண்டு.''

''இம் மாதிரி உருவத்தோடும், உடையோடும், கையில் பிடித்த தடியுடன் இதோ தெரிகிறாரே இவர்தான் **'பெரியார்'-தமிழரின் தலைவர்-ஈரோட்டு ராமசாமியார்.''**

சாமி சிதம்பரனாரால் எழுதப்பட்டு, குருசாமியால் வெளியிடப்பட்ட பெரியாரின் வாழ்க்கையைச் சித்தரிக்கும் 'தமிழர் தலைவரா'கிய இந் நூலை வெல்லக் கூடிய-பெரியாரைப் பற்றிய வேறு ஒரு வாழ்க்கை வரலாற்று நூல் தமிழில் இன்னும் வெளிவரவில்லை என்பதே இந்நூலின் பெருமைக்குத் தக்க ஒரு சான்றாகும்.

## நாத்திகம் கலைகளை அழிக்காது

இந்தி ஆதிக்கப் புயல் ஓய்ந்தவுடன், பழமை விரும்பிகள் மீண்டும் ''சுயமரியாதை இயக்கத்தினர் தமிழைக் கெடுக்கின்றனர்; கலையை அழிக்கின்றனர்; பண்பாட்டைக் குலைக்கின்றனர்'' என்று கூக்குரலிட ஆரம்பித்தனர்.

இதற்கு குருசாமி, ''**நாத்திகம் கலைகளை அழிக்காது**'' என்ற தலைப்பிட்டு, மிகச் சிறந்த நாத்திகத் தத்துவ விளக்கக் கட்டுரை ஒன்று எழுதினார். அதில் ஒரு சிறு பகுதி:

'' 'கடவுள் இல்லை' யென்றோ, 'கடவுளைப் பற்றி எனக்குக் கவலையில்லை' யென்றோ சொல்லுகிற ஒருவரைத்தான் 'நாஸ்திகர்' என்று வழக்கத்தில் சொல்லப்படுகிறது. 'நாஸ்திகன்' என்றால் 'சூனியவாதி' என்று சில அகராதிகளும், 'வேதத்தை மறுப்பவன்' என்று சில அகராதிகளும் அர்த்தம் கூறுகின்றன. அதாவது சந்தர்ப்பத்திற்குத் தக்கபடி இவ் வார்த்தை உபயோகப்பட்டு வந்திருக்கிறது என்பதோடு, ஏதாவது ஒன்றை 'இல்லை' யென்று மறுப்பவனைக் கூட 'நாஸ்திகன்' என்று கூறும்படியான முறையில் இவ் வார்த்தையானது பிரயோகப் படுத்துவதாகத் தெரிகிறது. ஆனால், தற்கால வழக்கில்

கூறப்படும் அர்த்தத்திலேயே 'நாஸ்திகன்' என்பதை இங்கு எடுத்துக் கொள்கிறேன்.''

'' 'கடவுள் இல்லை' என்பவர்களும், 'கடவுளைப் பற்றிக் கவலையில்லை' என்பவர்களும், மனித சமூகத்திற்கு எவ்வகையான அருந்தொண்டு செய்தாலும் சரி, அவர்களைப் பொது மக்கள் பாராட்டுவதே யில்லை ..''

''கலையை வளர்ப்பதின் பொருட்டு, ஜனசமூகத்தைத் தூக்குப் போடுவதைத்தான் 'நாஸ்திகம்'அன்று எதிர்த்தது; இன்றும் எதிர்க்கிறது; என்றும் எதிர்க்கும். கிராமத்திலுள்ள சேரியில் குடி தண்ணீருக்காக ஒரு கிணறுகூட இல்லாதிருக்க, அதே கிராமத்தில் ஒவ்வொன்றும் ஒரு லட்ச ரூபாய் செலவில் நான்கு கோபுரங்கள் கட்டுவதன் மூலம், கட்டிடக் கலையை விருத்தி செய்யும் 'அந்தக் கலையுணர்ச்சி'யைக் 'கொடிய விஷம்' என்கிறது நாஸ்திகம். குடிசையில் வாழும் குழந்தைகளுக்கு இரண்டொரு தாழங் குடையேனும் இல்லாதிருக்க, இருபத்தைந்தாயிரம் ரூபாய் செலவில் ஒரு செப்புப் பொம்மைக்கு ஒரு பூச் சக்கரக் குடை அளித்து, கைத் தொழில் கலையை வளர்ப்பதாகச் சொல்லும் கலையைத் 'தற்கொலை' என்று சொல்கிறது, நாஸ்திகம்.''

''**நாஸ்திகனுக்கு மனிதனே முக்கியம்; மனித சமூகத்தின் மகிழ்ச்சியே அவனது குறிக்கோள்; மனிதனுக்காக கலையே தவிர, கலைக்காக மனிதன் இல்லை** என்பது அவன் முடிவு. தலைப் பாகைக்குத் தகுந்தபடி, தலையைச் செதுக்குவதற்கு நாஸ்திகன் உடன்பட மாட்டான். ஜனசமூகத்தின் மூச்சைப் பிடித்துக் கட்டி, கலையை வளர்ப்பதற்கு நாஸ்திகன் கடுகளவும் ஒப்ப மாட்டான். உலகிலுள்ள எல்லா மக்களுக்கும் உணவும், உடையும், இருக்கையும் பரிபூரணமாய், தாராளமாய் ஏற்பட்ட பிறகுதான் நாஸ்திகன் திருப்திப்படுவான். ஏனெனில் அதுதான் நாஸ்திகனின் லட்சியம். அதன் பிறகுதான் கலையைப் பற்றி நினைப்பான்.''

"நாஸ்திகன் கலையை வெறுப்பது உண்மையே! எம் மாதிரிக் கலையை? ஜன சமூகத்தின் ஒரு பகுதியினரை 'குரங்கு' என்று எழுதி அவமானப்படுத்தியிருக்கும் கலையை வெறுக்கிறான். பெண்களை இழிவாக்கி எழுதியும் சித்தரித்துமிருக்கிற கலையை முழுதும் வெறுக் கிறான். மக்கள் உழைப்பால் ஏற்படும் செல்வத்தை மக்களின் நலனுக்கில்லாமல் விரயமாக்கும் கலையை அடியோடு வெறுக்கிறான்."

"புத்தர் ஒரு பச்சை நாஸ்திகர். இவரால் எந்தக் கலை அழிந்து விட்டது? கட்டிடக் கலை அவராலும், அவரது கொள்கைக்காரர்களாலுமல்லவா மேலோங்கிற்று! கலை களில் அவருக்கிருந்த ஆர்வமும் ஆசையும் கொஞ்சமா?"

"ஷேக்ஸ்பியர் என்னும் மகா கவியைப் பற்றி பல்லாயிரக் கணக்கான புத்தகங்கள் எழுதப்பட்டி ருப்பினும், ஷேக்ஸ்பியரின் கவியையும்,அதன் நயத்தையும் அப்படியே அனுபவித்து, படிப்பவர்களும் அனுபவிக்கு மாறு அவ்வளவு அருமையாக இருபத்தொரு பக்கங் களுக்குள் ஒரு சிறு கட்டுரை எழுதியவர் யார்? நாத்திகர் இங்கர்சால் அல்லவா?"

"ஆங்கிலக் காவியம் என்னும் கலைக்கு உயிர் கொடுத்து, ஊண் கொடுத்து, உயர்வையும் கொடுத்தவர் நாஸ்திகர் ஒஷல்லி அல்லவா? 'வானம்பாடி' என்னும் உலகறிந்த கவியையும், அதைப்போன்ற நூற்றுக் கணக் கான இணையற்ற உயிர்க் கவிதைகளையும் அள்ளி அள்ளிக் கொட்டியவர் நாஸ்திகர் ஷெல்லி அல்லவா? காவியம் என்றால் ஷெல்லி; ஷெல்லி என்றால் காவியம் என்ற அழியாப் புகழை நாட்டியவர் அல்லவா?"

"தமிழ் நாட்டின் ஷெல்லி என்று சொல்லக்கூடிய மாதிரியில் கவிபாடும் வல்லமை யாருக்கு இருக்கிறது என்று பாருங்கள். புதுச்சேரி நாஸ்திகர் — பாரதிதாசன்! அவருக்கல்லவா?"

ஆஸ்திகவாதத்திற்குச் சரியான அறைகூவல் இது:

## சுந்தரவடிவேலு-காந்தம்மாள்

## கலப்புத் திருமணம்

1940 அக்டோபர் 25-ம் தேதி, நெய்யாடுபாக்கம் துரைசாமி சுந்தரவடிவேலுவுக்கும், குஞ்சிதம் அம்மையாரின் தங்கை காந்தம்மாளுக்கும் கலப்புத் திருமணம் நடைபெற்றது.

சுந்தரவடிவேலு சென்னை மாநிலக் கல்லூரியில் படித்து எம். ஏ., பட்டம் பெற்றவர். மாணவர் பருவத்திலிருந்தே முற்போக்குக் கருத்துகளுடையவர்.

கல்லூரி நாட்களில் நெ. து. சுந்தரவடிவேலு, சி. சுப்பிரமணியம் (மத்திய அரசின் இன்றைய நிதி அமைச்சர்), பி. வி. தாஸ், அழகிரிசாமி (இன்றைய சுப்ரீம் கோர்ட் நீதிபதி , எஸ். கோதண்டராமன் (இவர் பழம் பெரும் காங்கிரசு தியாகியான சாத்தூர் சுப்பிரமணிய நாயனாரின் மகன். திருச்சி தேசியக் கல்லூரியில் குத்தூசியாருடன், இண்டர்மீடியட் வகுப்பில் பயின்றவர். பூப் பந்தாட்டத்தில் குருசாமிக்குப் 'பார்ட்ன'ராக இருந்து பல பரிசுகளைப் பெற்றவர். இன்று சென்னை உயர்நீதிமன்ற வழக்கறிஞர்), மற்றும் பலரும் சேர்ந்து சென்னையில் 'வன மலர்ச் சங்கம்' என்ற பெயரில் இளைஞர் சங்கமொன்றை நடத்தி வந்தார்கள்.

ஈரோடு, மதுரை, திருச்சி, கரூர் போன்ற ஊர்களில் இச் சங்கத்திற்குக் கிளைகளும் இருந்தன.

சென்னைக் கிளைக்கு சுந்தரவடிவேலு ஓராண்டு செயலாளராக இருந்தார்.

இச் சங்கத்தின் கொள்கைகள்:

1. தமிழ் வளர்ச்சி
2. சாதிவேற்றுமைகளைக் களைதல்.

மேலே குறிப்பிட்டுள்ள அனைவருமே, சங்கக் கொள்கையின் படி கலப்புத் திருமணம் செய்து கொண்டார்கள்.

காந்தம்மாள் பி. எஸ்சி. (ஆனர்ஸ்), எம். எஸ்சி., எல். டி., பட்டங்கள் பெற்றவர்.

குத்தூசியாரின் மைத்துனியும், குஞ்சிதம் குருசாமியின்

தங்கையுமான காந்தம்மாள், சுந்தரவடிவேலுவைவிட அதிகம் படித்தவர், பட்டங்கள் பெற்றவர்.

சுந்தரவடிவேலுவின் திருமணம் எவ்வாறு நடைபெற்றது என்பதை அவரே கூறுகிறார்:

'குடிஅரசி'ன் மூலம் கருத்துத் தொடர்பு கொண்டிருந்த நான் திரு. ஈ. வெ. ரா. வோடு அறிமுகம் வைத்துக்கொள்ளவில்லை. கூச்சம் மிகுதியால், எட்டி நின்றே, கண்டும் கேட்டும் மகிழ்ந்து வந்தேன். பெரியாரின் அருமை பெருமையினைச் செங்கற்பட்டில் நடந்த முதல் சுயமரியாதை மாநாட்டில் கண்டு மகிழ்ந்தேன்.''

''இரண்டொரு ஆண்டுகளுக்குப் பிறகே பெரியாரிடம் அறிமுகம் ஆகும் வாய்ப்புக் கிட்டிற்று. தென்னாட்டுத் திலகர் டாக்டர் வரதராசுலு அவர்கள் நடத்தி வந்த 'தமிழ்நாடு' நாளிதழில் உதவி ஆசிரியனாக இருந்தபோது, என் நண்பர் குத்தூசி குருசாமியைக் காணச் சென்றேன். அப்போது அங்கே பெரியார் இருந்தார். எனவே நேரில் அறிமுகமானேன்.''

''சில வாரங்களுக்குப் பிறகு, பெரியார் மீண்டும் சென்னைக்கு வந்து, வழக்கம் போல், திரு. குருசாமியின் மாமனார் வீட்டில் தங்கியிருப்பதாகக் கேள்விப்பட்டேன். அங்கு சென்று அவரைக் கண்டேன். இம்முறை வெறுங் கையோடு செல்லவில்லை. ஒரு ஆப்பிள் பழத்தோடு சென்றேன். அதைப் பெற்றுக்கொண்ட பெரியார், 'என்ன விலை?' என்று கேட்டார்.''

'' 'நாலணா' என்றேன். 'ஒரே ஒரு பழத்திற்கு நாலணாவா?' என்று பெரியார் கேட்டார். அதற்குப் பிறகு, காஞ்சிபுரம் போன்ற ஊர்களிலும் பல முறை கண்டு வணங்கும் பேறு கிட்டிற்று. அப்போதும் பெரியாருக்கு நெருக்கமானவன் என்னும் நிலைக்கு வளரவில்லை.''

''ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பதாம் ஆண்டு அக்டோபர் தொடக்கத்தில், மதுராந்தகத்தில் உதவிப் பஞ்சாயத்து அதிகாரியாக இருந்த எனக்கு கடிதம் ஒன்று வந்தது.''

''பெரியார் சென்னைக்கு வரும் நாள் ஒன்றைக் குறிப்பிட்டு, அன்று நானும் அங்கு வரமுடியுமானால், என் திருமணத்தைப் பற்றிப் பெரியாரோடு பேசி முடிவு செய்யலாம் என்று திரு.

குருசாமி எழுதி இருந்தார். திரு. குருசாமியின் மைத்துனி காந்தம்மாளை மணந்துகொள்ள விரும்புவதாக நான் குத்தூசி யாரின் காதில் போட்டிருந்தேன். அதன் எதிரொலி அக் கடிதம்.''

''குறித்த நாளன்று காலையே நான் சென்னையில் திரு. குருசாமி வீட்டையடைந்தேன். பெரியாரும் வந்திருந்தார். அன்று மாலைவரை இருவரும் அங்கேயே இருந்தோம். எனினும் தொடர்ந்து பார்வையாளர்கள் வந்து கொண்டே இருந்ததால், திருமணம் பற்றித் தனியாகப் பேசமுடியவில்லை.''

''பெரியார் திட்டமிட்டபடி அன்றிரவே ஈரோட்டிற்குப் புறப்பட்டார். புறப்படும்போது, நானும் அவரோடு அரக் கோணம் வரை வரக்கூடுமா வென்று வினவினார். அதற்கு உடன் பட்டேன்.''

''சென்னையை விட்டுப் புறப்பட்ட இரயில் அரக்கோணம் போய்ச் சேர்வதற்குள் திருமணம் பற்றிப் பேசி முடித்து விட்டோம்''.

''என் விருப்பத்தை அறிந்து கொண்டதும், 'கலப்புமணத்திற்கு' அதுவும் இசை வேளாளர் வகுப்பைச் சார்ந்த பெண்ணை நீங்கள் மணப்பதற்கு பெற்றோர் ஒப்புக் கொள்ளுவார்களா?' என்று கேட்டார். 'ஒப்பமாட்டார்கள்', என்றேன்.'

''பெற்றோர்களைப் பகைத்துக் கொண்டால், சொற்பச் சம்பளத்தில் வாழ்க்கை நடத்துவது கடினமாக இராதா என்பது பெரியாரின் கவலை.''

''எவ்விதப் பழக்கமும் இல்லாதவன் நான். திருமணத்திற்கும் செலவு செய்வதாக இல்லை. இருவரும் படித்திருக்கிறோம். வேலை செய்து பிழைத்துக் கொள்வோம் என்றேன்.''

''திரு. குருசாமி—குஞ்சிதத்திற்குச் செய்ததைப் போலவே, ஓரளவு செலவு செய்து திருமணத்தை நடத்த முன் வந்தார் பெரியார்.''

''வெறும் பதிவுத் திருமணத்தோடு நிற்க வேண்டும். விருந்திற்குக் கூடப் பதினைந்து பேர்களுக்கு மேல் சேரக் கூடாது என்று அடம் பிடித்தேன். பெரியார் விட்டுக் கொடுத்தார்.''

''பெண் வீட்டார் விரும்புவதால், தாலி கட்டுவதை

மட்டுமாவது வைத்துக் கொள்ளும்படி அறிவுரை கூறினார்: என் முரட்டுத் தனத்தை விடவில்லை.''

''அடுத்து, பெண்ணுக்கு ஏதாவது நகை போடுங்கள் என்று ஆலோசனை கூறினார்.''

''என்னிலும் சிறந்தது என்னிடம் இல்லை. எவ்வித நகையும் போட முடியாது என்று பிடிவாதம் செய்தேன்.''

''சரி; உங்கள் விருப்பப்படியே நடக்கட்டும். திருவாரூர் சுப்ரமணியத்திற்கு எழுதி, ஒப்புக் கொள்ளச் சொல்லுகிறேன். அங்கிருந்து கடிதம் வரும். திருமணப் பதிவாளருக்கு உரிய அறிவிப்புக் கொடுத்து விடுங்கள்' என்று ஆணையிட்டார் பெரியார்.''

''அய்யா திட்டமிட்டபடி ஏற்பாடுகள் நடந்தன. திருமணத் தன்று அய்யாவும் 'பெரிய நாய்க்கரும்' வந்திருந்தார்கள்.''

''திருமணப் பதிவாளர் அலுவலகத்திற்கு எங்களோடு வர வேண்டுமென்று பெரியார் துடித்தார். அப்படி வந்தால், அங்கே கூட்டம் கூடிவிடுமென்று சொல்லி அமைதிப் படுத்தினோம். 'பெரிய நாய்க்கர்' எங்களை அழைத்துக் கொண்டு போனார் திருமணம் பதிவானதும், இரண்டு கார்களில் – நண்பர்கள் இரவல் கொடுத்தவை - வீடு திரும்பினோம்.''

''இரண்டு நாட்களுக்குப் பிறகு சென்னை கோகலே மண்டபத்தில் பெரியாரே தலைமை தாங்கி, எங்களுக்குத் திருமண வாழ்த்துக்கொடுத்தார். முன்னாள் அமைச்சர் திரு. முத்தய்யா முதலியார், திரு. சி. டி. நாயகம் ஆகிய பெரியவர்களையும் அவ் விழாவில் கலந்து கொண்டு பாராட்டச் செய்தார்.''

### திராவிடர் கழகம்

1944-ல் சேலத்தில் நடைபெற்ற மாநாட்டில் நிறைவேற்றிய சி. என். அண்ணாத்துரை தீர்மானப்படி, தென்னிந்திய நல உரிமைச் சங்கத்திற்கு 'திராவிடர் கழகம்' என்று - மறுபெயர் சூட் டப்பட்டது.

திராவிடர் கழகத்தின் கருஞ் சட்டைத் தொண்டர் படை மக்களிடையே பெருஞ் செல்வாக்கைப் பெற்றது. சர்

பட்டங்களைத் தாங்கியோரும், பணம் படைத்த பெருந் தனக்காரர்களும், நாத்திகக் கருத்துகள் பிடிக்காதோரும், இயக்கக் கொள்கைகளைச் சீரணிக்க முடியாதோரும் கழகத்தை விட்டு நீங்கினர். கழகம் எளிய, நடுத்தர மக்களிடையில் வேகமாக வளரத் தொடங்கியது. ஏராளமான இளைஞர்கள் கழகத்தில் சேர்ந்தனர்.

1944 மே 13-ல் திருச்சியில் திராவிடர் இளைஞர் கழகத் திறப்பு விழா நடந்தது. அதற்கு குருசாமி தலைமை தாங்கினார். தி. பொ. வேதாசலம், குஞ்சிதம் குருசாமி முதலானோர் பேசினர். தலைமை தாங்கிய குருசாமி,

கலையின் பெயரால் வளர்க்கப்படும் மூட நம்பிக்கை, காவியத்தின் பெயரால் கம்பர் திருவிழாக்களில் உண்டாகும் இழிவு-இவைகள் அழிக்கப்பட வேண்டிய அவசியத்தை வற்புறுத்திப் பேசினார். பகுத்தறிவாளர்களை-'படிப்பற்ற தற்குறிகள்' என்று பறைசாற்றும் பண்டிதர்கள், அத் தற்குறிகள் தரும் கேள்விகளுக்குப் பதிலளிக்கத் திகைப்பதை எடுத்துக் காட்டியும், அரசாங்க ஊழியர்களாகவே இருந்துகொண்டு தங்கள் இனநலத்துக்குப் பயன்படும் பார்ப்பனர்களைப் போன்றே தமிழர்களும் தங்கள் இன நலனுக்குப் பயன்படும்படியும் கேட்டுக் கொண்டார். அதன் சுருக்கம்:

> "சங்கீதத்தில் மொழிப் பிரச்சினையைப் புகுத்தக் கூடாது, தெலுங்குதான் கர்னாடக சங்கீதத்திற்கு ஏற்றதென அய்கோர்ட் நீதிபதிகளும், கவர்னர் ஆலோசகர்களும் சொன்னால் அது அரசியலாகாது. ஆனால், நாம் தமிழ் மக்களிடையே இசையைத் தமிழில்தான் பரப்ப வேண்டுமென்றால் அது அரசியலாகிவிடும். 'இந்து மதம் தான் உலகிலேயே சிறந்த மதம்; இந்து மத தர்மம் எங்கும் ஓங்க வேண்டும்' என்று ஒரு சார்பினர் பேசினால் அது அரசியலாகாது. ஆனால், நம் நாட்டில் விதவைக் கொடுமைக்கும், தீண்டாமைக்கும் காரணம் இந்துமதம்தான் என்று நாம் எடுத்துக் காட்டினால் அது அரசியலாகிவிடும். ஆகவே, எது அரசியல்? எது அரசியல் இல்லை? என்பது

இந்த நாட்டில் பேசுபவர்களைப் பொறுத்து முடிவு செய்யப்படுகிறதேயொழிய, பேசப்படும் பொருள்கள் பற்றியதல்ல. ஆனால், இம் முறை மாற்றமடைய இளைஞர்கள் கழகம் வழிகாட்ட வேண்டும். இது போன்ற சமூகச் சங்கங்கள் நூற்றுக்கணக்கானவை நாட்டில் தோன்ற வேண்டும்''

### 'விடுதலை' ஆசிரியர் குத்தூசியார்

சென்னையில் உள்ளாட்சித் துறையின் பொது ஆய்வாளர் அலுவலகத்தில் வேலை பார்த்து வந்த குருசாமி, டெல்லியில் இந்திய அரசின் வணிகத் துறை அமைச்சகத்தில் பதவி பெற்றார். சில காலம் அலுவல் பார்த்துவிட்டு, மீண்டும் சென்னைக்கே திரும்பி வந்தார். இதன் பின், 1944 டிசம்பர் 21 முதல் 1945 செப்டம்பர் 30 வரை, தேசிய யுத்த முன்னணியின் பிரச்சாரத்துக்காகக் கொடுக்கப்பட்டிருந்த 'விடுதலை'ப் பத்திரிகையில் ஆசிரியராகப் பணியாற்றினார்.

யுத்த முடிவிற்குப் பிறகு மீண்டும் 'விடுதலை'ப் பத்திரிகையை இயக்கப் பணிக்குத் திருப்பினார் பெரியார்.

1928-லிருந்தே தமது வலக் கரமாக விளங்கிய குருசாமியைத் தொடர்ந்து 'விடுதலை' ஆசிரியராக இருக்க வேண்டுமென்று பெரியார் கேட்டுக் கொண்டார். பெரியாரிடத்தில் பெரிதும் ஈடுபாடுடைய குருசாமி 'விடுதலை' ஆசிரியர் பொறுப்பை ஏற்றார்.

இதுவரை குருசாமி ஆற்றிய பணிகள் அனைத்தும் அரசு ஊழியராக இருந்துகொண்டே செய்தவையாகும் என்பதை அறியும் போது பெரும் வியப்புதான் ஏற்படுகிறது.

குருசாமி அரசுப் பணியையும் உதறிவிட்டு, இயக்கத்தில் முழு நேர ஊழியராகப் பணியாற்ற முடிவு செய்தார்.

குருசாமி 1946-ம் ஆண்டு ஜூன் 20-லிருந்து 1962 ஜனவரி 22 வரை—அதாவது 16ஆண்டுகள் 'விடுதலை'யின் ஆசிரியராக இருந்தார். இந்த நாட்களில் தலையங்கக் கட்டுரைகளின் முழுப் பொறுப்பும் குருசாமியைச் சார்ந்தது. பெரியாருடைய அறிக்கைகள்,

தலையங்கங்கள் தவிர, இக் காலத்தில் சுமார் 4000 தலையங்கக் கட்டுரைகளையும் 3000த்துக்கு மேற்பட்ட 'குத்தூசிக்' கட்டுரைகளையும் எழுதியுள்ளார். மிகப் பெரும் பிரச்சினைகள், மக்களின் முற்போக்கு வளர்ச்சிக்குத் தக்கபடியான கட்டுரைகள் முதற்கொண்டு, குழந்தைகளின் ஒழுக்க நடவடிக்கைகள், பெரியவர்களின் 'பருத்திச் சூதாட்டம்', 'குதிரைப் பந்தயம்' வரை அவர் எழுதாத கட்டுரைகளே இல்லை.

குருசாமி 'விடுதலை'யின் ஆசிரியராக இருந்த காலம் திராவிடர் கழகத்தின் பொற்காலம். ஏன்,—தமிழகத்தின் பொற்காலம் என்றே சொல்லலாம். குருசாமியாருடைய 'குத்தூசி, பாணிக் கட்டுரைகள், **பெரியாரையே** அவர் தாம் பல பிரச்சினைகளில் கொண்டிருந்த, கருத்துகளையும் எண்ணங்களையும் மாற்றிக் கொள்ளச் செய்தது என்றால் குத்தூசியாரின் கட்டுரைகளுக்கு வேறு என்ன சிறப்பு வேண்டும்?

1948-ல் வெளியான 'குத்தூசித் தொகுப்பி'ற்கு பெரியார் அளித்த முன்னுரையில் எழுதினார்:

''விடுதலை தினசரிப் பத்திரிகையில் பல நாட்களாக 'குத்தூசி' என்ற புனை பெயரில் தினம் சுமார் 1½ கலத்துக்குக் குறையாமல் பல விஷயங்களைப் பற்றி நகைச் சுவை தோன்றப் பிரசுரிக்கப்பட்டு வருவதைத் திராவிட மக்கள் படித்து மகிழ்ந்து வருவதோடல்லாமல், பல துறைகளில் உணர்ச்சி பெற்று, திடுக்கிடும்படியான, ஆத்திரப்படும்படியான பல அதிசயக் கருத்துகளை—மனத்தில் தானாகவே பதிந்து விடும்படியான கருத்துகளைப் புதிதாகக் கொண்டும் தெளிவு பெற்று வருவதை நான் மனதார உணர்ந்திருக்கிறேன். நானே பல சந்தர்ப்பங்களில் எவ்வளவு பலமான கருத்துகளில், ஊறிப் போன பழக்க வழக்கங்களில், பிடிவாதமாக புனிதமானது என்று ஏற்பட்ட தீர்மானங்களில், வெகு சாதாரணத் தன்மையில் வெறுப்பும், பரிகாசமும், ''இவை மகாக் கொடுமை, முட்டாள் தனம், இழிவு'' என்று கருதும்படியான உணர்ச்சி ஏற்படும்படியாக 'குத்தூசி' வாசகங்கள்

காணப்படுகின்றன என்று ஆச்சரியப்பட்டதுண்டு; குலுங்கக் குலுங்கச் சிரித்துப் பாராட்டிய துண்டு—என்று சொல்லுகிறேன் என்றால், அவை மற்ற சாதாரண மக்களுக்கு எவ்வளவு உணர்ச்சியை ஊட்டி இருக்கக்கூடும் என்பதைப் பற்றி அதிகம் எழுத வேண்டியதில்லை.

நான் வெளியில் சுற்றுப் பிரயாணம் செல்லும் போது பல இடங்களில், பலப்பல பேர்கள் நான்தான் 'குத்தூசி' என்கிற புனை பெயர் கொண்டவன் என்று கருதி என்னைப் பாராட்டிப் புகழ்ந்ததைக் கண்டும், கேட்டும் நான் உண்மையில் வெட்கமும், பொறாமையுங் கொண்ட சந்தர்ப்பங்கள் உண்டு.

'குத்தூசி' காணப்படாத 'விடுதலை'யைக் கண்டு மக்கள் ஏமாற்றமடைந்ததையும் பார்த்து வருகிறேன்.

'குத்தூசி'யைப் பற்றிய என் உண்மையான கருத்தைச் சொல்ல வேண்டுமானால்-ஒரு வாக்கியத்தில் முடிக்க வேண்டுமானால், எந்தக் காரணங் கொண்டாவது 'குத்தூசி', 'விடுதலை'யில் வெளிவருவது நின்று விடுமானால் 'விடுதலை'ப் பத்திரிகையைப் படிக்கும் மக்களுக்கு, 'விடுதலை' அலட்சியப் படுத்தப்பட்டு விடுமே என்று பயப்படுகின்றேன் என்பதைத் தெரிவிப் பதன் மூலமே அதன் பெருமையைப் பற்றிய என் கருத்தை உணர்ந்து கொள்ளலாம்.''

''ஈ. வெ. ராமசாமிப் பெரியாரின் இம் முன்னுரையைப் பற்றிக் குத்தூசி ''பெரியாரவர்கள் குத்தூசிக்குத் தந்துள்ள சிறப்புரை, தாய் தன் மகனைப் பாராட்டுவது போன்றது'' என்று எழுதினார்.

குருசாமியினுடைய தலையங்கக் கட்டுரைகளைவிட புகழ் வாய்ந்தது 'குத்தூசி' பாணிக் கட்டுரைகள்தான். தமிழகத்தில் இதுவரை எந்தவொரு பத்திரிகை ஆசிரியரும் கையாளாத முறையை குருசாமி கையாண்டார்.

தமது பகுத்தறிவுக் கொள்கைக்கு முரணான கருத்துகளைக் கூறுபவர்கள் எவ்வளவு பெரியவர்களாக இருந்தாலும், அவர்கள் எத்தகைய அறிஞர்களாக இருந்தாலும், எவ்வளவு பெரிய தியாகங்

களைச் செய்தவர்களாக இருந்தாலும், அவர்களின் தவறான செயலைக் கண்டிக்க குருசாமி தவறியதில்லை. அதில் பாகுபாடே கிடையாது. இந்த விஷயத்தில் காந்தியார் கூட குத்தூசியாரிட மிருந்து தப்பவில்லை.

1946-ல் வங்காளத்தில் நடந்த இந்து—முஸ்லீம் கலவரத்தை யொட்டி அங்கு சென்ற காந்தியார் ''வங்காளத்தில் நான் எவ்வளவு நாள் தங்கியிருப்பேன் என்பது எனக்குத் தெரியாது. அடுத்தபடியாக நான் என்ன செய்ய வேண்டுமென்பதைக் கடவுளே எனக்குச் சுட்டிக்காட்ட வேண்டும்''—என்று பத்திரிகையாளர் களிடம் கூறினார்.

இந்தச் செய்தியை அறிந்த குத்தூசியார் ''கடவுளே துணை' என்னும் தலைப்பில் ஒரு கட்டுரை எழுதினார். அதில் ஒரு பகுதி:

> ''சிலர் கடுதாசி எழுதும் போது 'கடவுள் துணை' என்று தான் எழுதுவது வழக்கம். 'கடவுளே துணை' யென்று ஏன் எழுதவில்லை, தெரியுமா? கடுதாசி போய்ச் சேருவதற்கு ஸ்டாம்பு துணை, சரியான—விலாசம் துணை, தபால்காரனின் நாணயமும் துணை என்றாலும் - கடவுள் துணையாய் இருக்கட்டுமே என்பது அதன் பொருள். அதுபோல, காந்தியார் பத்திரிகையாளரிடம் பேசியதுதான் நல்ல பேச்சு. அடுத்தபடி, இவர் தப்பாக நடந்து கொண்டாலும், 'கடவுள் தப்பு வழியில் அழைத்துப் போய்விட்டார்' என்று கூறித் தப்பித்துக் கொள்ளலாம். ஒருவேளை நல்ல காரியமாக ஏதேனும் நடந்து விட்டாலும், ''கடவுள் காந்தியாருக்கு எப்போதுமே துணையாக நிற்கிறார். அதனால்தானே 'மகாத்மா' என்ற பட்டமும் பெற்றார்'' என்பார்கள் பாமரமக்கள், அதாவது பத்திரிகை படிப்பவர்கள்.
>
> ஆனால், இவருக்குச் சுட்டிக் காட்டவேண்டிய 'கடவுள்' இந்துக் கடவுளா, முஸ்லீம் கடவுளா என்பது தான் தெரிய வேண்டும்.''

1946-ல் டில்லி அரசியல் நிர்ணய சபைக் கூட்டத்தில்—உறுப் பினர் ஒருவர் பேசும்போது இந்தியில் பேசினார். சபைத் தலைவர்

உறுப்பினரை ஆங்கிலத்தில் பேசுமாறு கூறினார். அவர் மறுக்கவே, 'சபைத்தலைவர் ராஜகோபாலாச்சாரியார் போன்ற பெரியவர்கள் சபையில் இருக்கிறார்கள். அவர்களுக்கு இந்தி தெரியாது. தயவுசெய்து ஆங்கிலத்தில் பேசுங்கள்' என்றார். அதற்கு அந்த உறுப்பினர் "இந்தி தெரியாத மனிதனுக்கு இந்தச் சபையில் இடம் கிடையாது. அது மாத்திரமல்ல நான் சொல்லுவது; இந்தி தெரியாத மனிதனுக்கு இந்தியாவிலேயே இடம் கிடையாது என்கிறேன்!" —என்றே அடித்துச் சொல்லிவிட்டார்.

இச் செய்தியை வெளியிட்டால் ஆச்சாரியாரை உறுப்பினர் அவமதித்ததை மக்கள் தெரிந்துகொள்வார்களே என்ற எண்ணத்தில் சென்னைப் பத்திரிகைகள் நல்ல முறையில் வெளியிடவில்லை. ஆனால் ஆசிரியர் குருசாமி "**பெரிய இடத்துக் காலித்தனம்**" என்ற தலைப்பில் அரசியல் நிர்ணய சபையில் உறுப்பினர் பேசிய பேச்சைக் கண்டித்து, ஆச்சாரியாருக்கு ஆதரவாக எழுதி, தமது நேர்மைக் குணத்திற்கு ஒரு எடுத்துக்காட்டானார்.

கோயில்களை ஆதித் திராவிடத் தோழர்களுக்குத் திறந்து விட்ட பெருமையைக் கூறி, தங்களைப் புகழ்ந்து கொண்டனர் காங்கிரசார்.

**'அடுத்த இடம் மடப்பள்ளி!'**—என்ற தலைப்பில் ஆசிரியர் குத்தூசி குருசாமி கேலியாகக் கூறிய அறிவுரை:

> "தாழ்த்தப்பட்ட தோழர்கள் உள்ளே செல்வதற்காகக் கோயில் கதவுகள் திறந்துகொண்டேயிருக்கின்றன. 'தீண்டாத சாதியார் உள்ளே நுழைந்தால் என் உயிர் போய்விடும்' என்று சொல்லி வந்த சாமிகள், அவைகளின் மனைவி மக்கள் எல்லாம் இன்று வாய் திறக்கவில்லை—அதாவது பேசாமல் இருக்கின்றன. இதிலிருந்து என்ன தெரிகிறது? கோயிலின் புனிதத் தன்மை, தீட்டு என்றெல்லாம் பூசுரர் கூட்டம் கூறிவந்தது பச்சைப் புளுகு என்பது உறுதியாகிவிட்டது."
>
> "இனி, அடுத்த பாடத்தையும் படிக்க வேண்டாமா? அய்யர், அய்யங்கார் மட்டுமே மணி அடிப்பானேன்? அவர்கள் மட்டுமே பரம்பரையாய்ச் சிலைகளைத் தொடு

வானேன்? அவர்கள் மட்டுமே மடப்பள்ளி வேலையைச் செய்வானேன்? தாழ்த்தப்பட்ட திராவிடர்களும் இக் காரியத்தைச் செய்தால் என்ன மோசம் வந்துவிடும்? ஆரிய மொழியான சமஸ்கிருதத்திலேயே அர்ச்சனை செய்வானேன்? அவரவர் மொழியிலேயே சொல்லிக் கொள்ளக் கூடாதா? அவைகள் மட்டும் போதுமா? இத்தனை ஆண்டுகளாக தமிழர் சாமி தூக்கினர், அர்ச்சகர் மேலே அமர்ந்திருந்தனரே! இனிமேல் அர்ச்சகர் சாமி தூக்கவேண்டாமா? வேதபாராயண கோஷ்டி சாமிக்கு முன்னே செல்லலாமா? ஏன் செல்லவேண்டும்? இந்த விஷயங்களிலெல்லாம் நமது புதிய பக்தர்கள் (தாழ்த்தப்பட்டவர்கள்) இனிமேல் கவனம் செலுத்த வேண்டும்.''

பிராமணர்களை மட்டுமன்று; தமிழினப் பிரமுகர்கள் தவறு செய்தபோதும் குருசாமி காணாததுபோல் இருந்துவிடுவதில்லை. குருசாமிக்கு, தவறு செய்பவர்கள் பார்ப்பனர்களாக இருந் தாலும், பார்ப்பனரல்லாதவர்களாக இருந்தாலும் ஒன்றுதான்.

பல லட்ச ரூபாய் செலவில் சென்னையில் கட்டப்பட்டிருக்கும் தமிழிசை மண்டபம் திறக்கப்பட்டபோது, மந்திரிகளும் தமிழினத் தலைவர்களும் திறப்புவிழா செய்வதற்கு முன்பாக பசுமாடும் (கன்றுக் குட்டி சகிதமாக) பார்ப்பானும் புகுந்து திறப்பு விழா நடத்தினர்.

அதனைக் கண்டித்து குருசாமி 'விடுதலை'யில் எழுதினார் :

''அசல் திறப்பு விழா நடத்திய மேற்படித் தலைவர்களைப் பாராட்டுகிறேன்.''

''டேய், தமிழா! மானங் கெட்ட தமிழா! மதிப்புக் கெட்ட தமிழா! அயோக்கியத் தமிழா! துடை நடுங்கித் தமிழா! சொரணை கெட்ட தமிழா! அறிவையிழந்த தமிழா! படித்தும் பதரான தமிழா! முதுகெலும்பில்லாத தமிழா! மூளையை அடகு வைத்த தமிழா! தமிழிசையை வளர்ப்பதற்காகக் கட்டப்பட்ட உன் புதுக் கட்டிடத்துக் காக நாங்கள் காலணாவாவது கொடுத்திருப்போமா?

எல்லாம் உங்களவன்களின் பணம்தானே? நாங்கள் எதற்காகக் கொடுப்போம்? கோவில் கட்ட நாங்களா பணம் கொடுக்கிறோம்? நீங்கள் கட்டினால் நாங்கள் தானே அதில் குடியேறுகிறோம்? அதுபோலத்தான் இதுவும்! அதிகாலையிலிருந்து புதுக் கட்டிடத்தில் நடந்த தென்ன தெரியுமா? எங்கள் வேதப் பிராமணாள் மந்திரம் ஓதினார்கள்! ஓமம் வளர்த்தார்கள். 'மந்திரம்' எந்த மொழியிலடா ஓதினார்கள்? உன் தமிழாடா? இல்லையடா; மானங்கெட்டவனே! எங்கள் தேவ பாஷை யிலடா? தமிழிசையை வளர்க்கின்ற லட்சணத்தைப் பார்த்தாயாடா! ஒரு முழக் கயிறு இருந்தால் தேடிப் பாரடா, தமிழா! உன் தலைவன்களும் நீயும், இருக்கின்ற லட்சணத்துக்கு உனக்கு மேடைப் பேச்சு வேறே! எழுத்து வேறே! உனக்குக் கொஞ்சங்கூட ரோஷமில்லையாடா!

—என்று அக்கிரகாரக் குஞ்சு ஒன்று என்னைப் பார்த்துக் கேட்டது போல் நேற்றிரவு கனவு கண்டேன்! அரைத் தூக்கத்திலேயே கையை ஓங்கி அறைந்தேன். பக்கத்திலி ருந்த சுவரில் பட்டு, விரலில் சிறிது இரத்தம் வந்ததுதான் பயன்!''

''மேற்படி கட்டிடத்துக்காக மண்வெட்டியெடுத்து, முதல் பள்ளம் தோண்டிய தொழிலாளியை அழைத்து வந்து, அவன் கையில் ஒரு பெரிய வெள்ளிச் சாவியைக் கொடுத்து, கட்டிடத்தைத் திறக்கச் செய்து (சாவியையும் அவனிடமே இனாமாகக் கொடுத்து) விழாவைத் துவக்கி யிருந்தால் அது எவ்வளவு புத்திசாலித்தனமாயிருந்திருக் கும்?''

(விடுதலை 1-11-1952)

1946-ம் ஆண்டில் ஆகாகான், இலண்டனில் 50,000 ரூபாய்க்கு பந்தயக் குதிரை ஒன்று வாங்கினார்.

இதே சமயம் குவாலியர் சமஸ்தான மன்னர், இங்கிலாந்தில் இரண்டு நாய்கள் வாங்கினார். ஒவ்வொன்றின் விலை 4000 ரூபாய்!

கள்ள மார்க்கட் வியாபாரி ஒருவர், ஆங்கிலேயர் ஒருவருக்குத் தேநீர் விருந்தளித்தார். செலவான ரூபாய் 25000. மற்றொரு

வியாபாரி திருப்பதி வெங்கிடாசலபதிக்கு 10 லட்ச ரூபாய் செலவில் வைர முடி செய்து வைத்தார்.

இந்த ஊதாரிச் செலவுகளைப் பத்திரிகை மூலம் அறிந்த குத்தூசியார், **''தகப்பன் தேவை''** என்று குத்தூசிக் கட்டுரை ஒன்று எழுதினார். எதற்கு என்று பார்ப்போம்:

''மாதம் இரண்டு ரூபாய் சம்பளம் அதிகமாகக் கேட்டு வேலை நிறுத்தம் செய்கிறார்கள், தொழிலாளர்கள்! அவர்கள்மீது தடியடிப் பிரயோகம் செய்கிறார்கள், போலீசார்.

''போலீஸாரின் சம்பளம் தானாகட்டும்; என்ன வாழ்கிறது? தொழிலாளர் சம்பளமே தேவலாம் என்கிற மாதிரியில் தானே இருக்கிறது?

''சோறு இல்லை; துணி இல்லை'' என்று கூச்சல் எங்கு பார்த்தாலும்! ''இந்த இரண்டையும் அதிகமாக உற்பத்தி செய்வதற்கு வழியில்லையே!'' என்கிறார், ஆளும் கூட்டத்தார்.

''குடிசை கூட இல்லாததால் சாலை ஓரங்களில் பெண்டு பிள்ளைகளுடன் படுத்திருக்கிறானே கைவண்டிக்காரன்'' என்று சொன்னால், ''பணமிருந்தால் கட்டடம் கட்டித் தரலாமே,'' என்கிறார்கள், நகர சபைக்காரர்.

''ஏழைக் குழந்தைகளுக்கு இலவசமாக உணவும் கொடுத்து படிப்பும் சொல்லிக் கொடுப்பதானால், தற்குறித்தனம் ஒழியுமே,'' என்று சொன்னால் ''அதற்குப் பணம் வேண்டுமே, என்ன செய்வது?'' என்று கேட்கிறார் கல்வி மந்திரி.

''குடிப்பதற்குத் தண்ணீர் இல்லையே! கிராமவாசிகள் கஷ்டப் படுகிறார்களே! கிராமத்துக்கு ஒரு குடிதண்ணீர்க் குளமாவது வெட்டக் கூடாதா?'' என்று கேட்டால், ''நியாயந்தான்! பணத்திற்கு என்ன செய்வது?'' என்கிறார்கள், சர்க்காரும், பணக்காரரும்.

''கிராமத்துக்கு ஒரு ஆஸ்பத்திரியாவது இருந்தால், எவ்வளவு சாவுகளைத் தடுக்கலாம்?'' என்று சொன்னால் ''அதற்கு ஏராளமான பணம் வேண்டுமே, எங்கேயிருக்கிறது?'' என்று கையை விரிக்கிறார், வைத்திய இலாகா மந்திரி.

நாய்க்கும், குதிரைக்கும், வைஸ்ராய் விருந்துக்கும், வைர முடிக்கும், கோபுரம் கட்டவும், கும்பாபிஷேகம் செய்யவும்

பணமிருக்கிறது இந்தப் பாழும் நாட்டில்! ஆஸ்பத்திரிக்கும் ஆரம்பக் கல்விக்கும் பணமில்லை.

பள்ளிக் கூடத்துப் பையனிடம் செலவுக்குப் பணம் கொடுத்தால், என்ன சாமான் எவ்வளவுக்கு வாங்குவது என்பதே தெரியாது. நல்ல புளிப்பு மாங்காயில் 5, 6 வாங்கித் தின்று விடுவான். தீபாவளி சமயமாயிருந்தால் எல்லாப் பணத்துக்கும் பட்டாசுக் கட்டு வாங்கிக் கொளுத்தி விடுவான். சிறுபிள்ளைதானே, பாவம்!

அதற்காக என்ன செய்கிறான், புத்திசாலியான தகப்பன்? பணத்தைத் தன் பிள்ளையிடம் கொடுக்க மாட்டான். தானே வைத்துக்கொண்டு தேவையான சாமானை வாங்கித் தருவான் அல்லவா? அதைப் போலத்தான், பணம் படைத்த தோழர்கள் நிலைமையும். இவர்களுக்கு ஒரு தகப்பன் வேண்டும், புத்திசாலியாக! அப்படியொருவன் கிடைக்கிற வரையில் பட்டினி ஒரு பக்கமும் பந்தயக் குதிரை ஒரு பக்கமும் இருந்துதான் தீரும்! வயிறு ஒட்டியவன் பக்கத்தில் வைர முடியும் இருந்து கொண்டு தான் இருக்கும்!

அந்தத் தகப்பன் கிடைப்பானா? எப்போது கிடைப்பான்?"

(விடுதலை: 19 7-1946)

## 'விடுதலை'க்கு ஜாமீன்

1948 ஜனவரி 30-ம் நாள் உலக சரித்திரம் மறக்க முடியாத ஒரு நாள். ஆம்; உலக உத்தமர் காந்தியடிகள் வினாயக நாத்ராம் கோட்சே என்ற மத வெறியனால் சுடப்பட்ட நாள்.

காந்தியார் சுடப்பட்ட செய்தியும், அதைத் தொடர்ந்து தமிழ் நாட்டில் சில வட்டாரங்கள் இனிப்பு வழங்கி மகிழ்ந்ததும், குத்தூசியாரின் உள்ளத்தை எரிமலையாக்கியது. 'விடுதலை'யில் தொடர்ந்து தலையங்கக் கட்டுரைகள் எழுதித் தம் உணர்ச்சிகளை வடித்துக் கொட்டினார்.

இதோ ஒரு சோறு :—

> "எந்த வர்ணாச்ரமத்தையும், அதன் மூத்த பிள்ளையாகிய சாதி அமைப்பையும் பாதுகாப்பதற்காக ஆயுள் முழுவதும் பாடுபட்டாரோ, அதே கொள்கையைக்

கொண்ட ஒரு மராத்தி மத வெறியனால்—உயர் சாதிக்காரன் என்பவனால் ஆம்; ஒரு பார்ப்பனனால் — காந்தியார் சுட்டுக் கொல்லப்பட்டார்.''

''இந்து - முஸ்லீம் ஒற்றுமைக்காகப் பாடுபட்டார். இந்து மத வெறியனால் சுட்டு எறியப்பட்டார். மதம் என்ன செய்யும்! மகாத்மாவின் உயிரையும் கூடக் குடித்துவிடும். பிற தலைவர்களைப் போல பதவி ஆசையுண்டா? பணத் தாசை உண்டா? குடும்ப பாசமுண்டா? தனக்கென்று பத்து ரூபாய் மதிப்புள்ளஓர் உடமையாவது உண்டா? துறவியாக வழ்ந்தார்! தியாகியாய் வீழ்ந்தார்.''

மேலும் அச் செய்திக்கான பின்னணியை விளக்குகின்ற வகையில் **'அடியே, மிட்டாய் எடுத்துக்கோடி', 'பட்டுக்கோட்டையும் புதுக்கோட்டையும்', 'டேய் பூணூலை அறுத்தெறிடா', 'பட்டம் மாளும் சுந்தராம்பாளும்'** என்னும் தலைப்புகளில் பல 'குத்தூசி'க் கட்டுரைகள் எழுதினார்.

இக் கட்டுரைகளை எழுதியதற்காக ''விடுதலைப் பத்திரிகை சாதித் துவேஷத்தைத் தூண்டி விடுகிறது''—என்று அன்றைய காங்கிரசு அரசு குற்றஞ்சாட்டி, ரூபாய் பத்தாயிரம் ஜாமீன் தொகையாகக் கேட்டது.

இதற்கு முந்திய ஆண்டு அரசு, 'விடுதலை'யிடம் ரூபாய் இரண்டாயிரம் ஜாமீன் கேட்டு வசூலித்திருந்தது. ஜாமீன் தொகைக்காக **' வெள்ளித் தோட்டாக்களை அள்ளி வீசுங்கள்''** என்று இயக்கத்தவர்களுக்கு குருசாமி 'விடுதலையில்' வேண்டு கோள் விடுத்தார்.

கேட்டதோ சில ஆயிரம், மக்கள் தந்ததோ பல ஆயிரம்! வெள்ளித் தோட்டாக்களின் வீச்சின் வேகத்தைக் கண்ட வெண்தாடி வேந்தர் மனம் மகிழ்ந்தார்.

### தூத்துக்குடி, ஈரோடு மாநாடுகள்

1948 ஜூனில் நடந்த தூத்துக்குடி மாநாடு கழகத்தின் முக்கிய மாநாடுகளில் ஒன்று. எதிர் பார்த்ததற்கு மேலாக மாநாடு வெற்றி கரமாக முடிந்தது.

இந்த மாநாட்டில்—குருசாமியின் பேச்சு கழகத்தவர்களுக்குப் புத்துணர்ச்சியை ஊட்டக் கூடியதாகவும், தொடர்ந்து பல போராட்டங்களில் கழகம் ஈடுபடவேண்டும் என்ற வேண்டு கோளாகவும் அமைந்தது.

1948-ல் மீண்டும் இந்தி ஆதிக்கப் புயல் வீசுவதற்கான அறிகுறி தென்படவே, அதைத் தடுக்க நடவடிக்கை எடுப்பதற்கு ஏதுவாக அக்டோபரில் 23, 24-ல் ஈரோட்டில் தனி மாநாடொன்று கூட்டப் பட்டது.

இம் மாநாட்டிற்குத் திரளாகப் பொது மக்களும், கழகத்தவர் களும் கலந்து கொள்ள வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்து **16-10-1948** 'குடிஅரசு' இதழில் 'வரவேற்கின்றோம்' என்னும் தலைப்பில் தலையங்கம் வெளியாயிற்று.

"இந்தி எதிர்ப்புப் போராட்டம் துவக்கப்பட்டதும் தளபதி தோழர் சி. என். அண்ணாத்துரை அவர்கள் தளபதியுடன் சர்வாதி காரியுமாக ஆகி, இந்தப் போராட்டத்தை நடத்த முன்வந்தார். அண்ணாத்துரை அவர்களையே மேற்படி தனி மாநாட்டிற்கும் தலைவராக இருந்து வழிகாட்டி நடத்திச் செல்லும்படி, மாநாட்டின் வரவேற்புக் கமிட்டியார் அண்ணாத்துரையைத் தேர்ந் தெடுத்திருப்பதானது மிகமிகப் பொருத்தமான காரியமாகும்."

"அது போலவே, நமது 'குத்தூசியாரும்' ஒரு எழுத்துப் போராட்டத் தளபதியாவார். அவரது எழுத்தைக் கண்டே சர்க்கார் மிரண்டு 'விடுதலை'க்கு ரூ. 2000 ஜாமீன் கேட்டார்கள். ஆனால், அதன் விளைவு மக்களிடையே புத்துணர்ச்சியை ஊட்டி, 'இரண்டாயிரமா கேட்கிறார்கள். இதோ! பதினையாயிரம் தரு கிறோம்' என்று சங்கநாதம் செய்து, **குத்தூசியாரிடம் இருக்கும் அன்பைக் காட்ட பொது மக்கள் வெள்ளித் தோட்டாக்களை அள்ளி வீசினர்,** 'விடுதலை' நிலையத்திற்கு. அந்தக் குத்தூசியாரைத் தான் மாநாட்டுத் திறப்பாளராகத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். ஆம்! அவர்தான் நமது தோழர் எஸ். குருசாமி அவர்கள்."

ஈரோடு தனி மாநாட்டினை ஒட்டி நடந்த ஊர்வலத்தில் மேள வாத்தியம் முன் முழங்க, அதன்பின் கருஞ் சட்டைத் தோழர்கள் இயக்க ஒலி முழக்கம் செய்ய, தலைவர் பெரியார், தாய்மார்களும்

தோழர்களும் புடை சூழ முன் நடந்து செல்ல, குருசாமி, குஞ்சிதம் அம்மையார், அண்ணாத்துரை, பெத்தபாளையம் பழனிச்சாமி, இந்திராணி பாலசுப்ரமணியம் ஆகியோர் இரு காளைகள் பூட்டப் பட்ட 'சேரியட்டில்' அமர்ந்து மாநாட்டுப் பந்தலுக்குச் சென்றனர்.

மாநாட்டிற்கு அண்ணாத்துரை தலைமை தாங்க, குருசாமி மாநாட்டைத் திறந்து வைத்தார். பெரியார், திரு. வி. கல்யாண சுந்தரனார், தி. பொ. வேதாசலனார், குஞ்சிதம் குருசாமி, பட்டுக் கோட்டை அழகிரிசாமி, சேலம் சித்தய்யன், கே. கே. நீலமேகம், சி. டி. டி. அரசு, ஏ. வி. பி. ஆசைத்தம்பி முதலானோர் கலந்து கொண்டனர். இன்றையத் தமிழக முதல் அமைச்சர் மு. கருணா நிதியின் 'தூக்கு மேடை' நாடகம் குஞ்சிதம் குருசாமி தலைமையில் நடைபெற்றது. திருவாரூர் கே. தங்கராசு எழுதி, எம். ஆர். ராதா நடித்த 'இரத்தக் கண்ணீர்' நாடகம் இம் மாநாட்டில் அரங்கேற்றப் பட்டது. இம் மாநாட்டில் குருசாமி ஆற்றிய திறப்புரை :

"பெரியார் அவர்கள் ரஷியாவிலிருந்து திரும்பிய உடனே, 1932 டிசம்பர் 28, 29 தேதிகளில் இதே ஊரில் பெரியார் வீட்டில் சுயமரியாதை சமதர்மத் திட்டம் ஒன்று வகுக்கப்பட்டது. அதில் சொத்துகள் யாவையும் பொது மக்களின் சொந்தவுடைமையாக்க வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. அக் காலத்தில் கம்யூனிஸ்டு கட்சி என்ற ஒரு கட்சி கர்ப்பத்தில் கூட இந்தியாவில் தோன்ற வில்லை. அத்தகைய புரட்சித் திட்டத்தை வகுத்த ஊரில் தான் இன்று நாம் கூடியிருக்கிறோம்."

"ராஜாக்கள், ஜமீன்தார்கள், கோடீஸ்வரர்கள் — இவர்கள் தலைமை வகிப்பதுபோய் சி. என். அண்ணா துரை போன்ற சாதாரண பாட்டாளித்தோழர் தலைமை வகிக்கவும்,என்னைப் போன்ற அதைவிடச்சாதாரணமான ஒரு தோழர் மாநாட்டைத் திறந்து வைக்கவும்,உங்களைப் போன்ற பல்லாயிரக்கணக்கான பாட்டாளித் தோழர்கள் பங்கு கொள்ளவும் ஆன நிலை ஏற்பட்டு விட்டது. இது மிகமிக வரவேற்கத் தக்க முன்னேற்றமாகும்."

"இந்தியை எதிர்க்கிறோம் என்றால் இந்தி

மொழியை நாம் எதிர்க்கிறோம் என்று அர்த்தமில்லை. இந்தி மொழி மூலம் நம் நாட்டின் மீது வடநாட்டு ஆதிக்கம் ஏற்படுவதை எதிர்க்கிறோம்—என்றுதான் பொருள். நமக்குள் கட்டுப்பாடு வேண்டும். ஒவ்வொருவருக்கும் வீர உணர்ச்சி, தியாக உணர்ச்சி நிரம்பியிருக்க வேண்டும். ஒவ்வொருவரும் பெரியாரைப்போல திண்மை பெற்றிருக்க வேண்டும். அவரைப் போன்றே, நினைத்ததை உடனே செய்ய வேண்டும். அதைச் சிறக்கவும் செய்யவேண்டும். ஒழுங்காகவும் முறைப்படியும் செய்ய வேண்டும்.''

('குடி அரசு' 30—10—1948)

மாநாட்டை யடுத்து, இந்தி எதிர்ப்புப் போர் துவங்கியது. பெரிய அளவிலும் நடந்தது. பெரியாரும் மற்றத் தலைவர்களும் சிறையில் அடைக்கப்பட்டனர்.

எதிர்ப்பாளர்களின்மீது காங்கிரசு அரசு பலத்த அடக்கு முறையைக் கையாண்டது. எங்கு பார்த்தாலும் கோரச் சம்பவங்கள் கூத்தாடின.

குடந்தையில் 144 தடை உத்தரவை மீறிச் சென்ற ஊர்வலத்தில் போலீசாரின் அடக்குமுறை வெறி பிடித்து ஆடியது. கர்ப்பிணிப் பெண்கள் உட்பட பலர் போலீசாரின் கடுமையான தாக்குதலுக்குப் பலியாயினர். இதைக் கண்டித்து—''கும்பகோணத்தில் கொந்தளிப்பு'', ''பிணத்திற்கு மணம்'', ''இனி அடுத்தபடி யென்ன?'' என்ற தலைப்புகளில் குருசாமி எழுதிய தலையங்கங்கள் காங்கிரசு அரசுக்கு அபாய அறிவிப்பாக இருந்தன. அதன் பின்னரே அரசு தனது வன்செயலைத் குறைத்துக் கொண்டது.

**குருசாமியும் பொதுவுடைமை இயக்கமும்**

1948—49-ல் இந்தியப் பொதுவுடைமைக் கட்சியினர், - இந்திய, மாநில அரசுகளின் மக்கள் விரோதப் போக்கைக் கண்டித்து, நாடு முழுதும் போராட்டம் நடத்தி, கொடிய அடக்கு முறைகளுக்கு ஆளாயினர்.

அன்றையக் காங்கிரசு அரசு, பொதுவுடைமை இயக்கத்தார் களையும் அவர்களின் ஆதரவாளர்களையும் கண்ட கண்ட இடங்களிலெல்லாம் சுட்டுக்கொன்றனர். சிறையிலடைத்தனர். அங்கு

அவர்களைச் சித்திரவதை செய்தனர். கட்சியும் தடைசெய்யப் பட்டது. தமிழகத்தில் 'ஜனசக்தி' பத்திரிகையும் தடைசெய்யப் பட்டது.

வேலூர், சேலம், கடலூர் ஆகிய சிறைகளில் அடைக்கப்பட்டுக் கிடந்த பொதுவுடைமைத் தோழர்கள் 'தம்மை மனிதத் தன்மையுடன், நடத்தக் கோரி உண்ணாவிரதம் இருந்தனர். அவர்கள்மீதும் துப்பாக்கிப் பிரயோகம் செய்தனர். இதன் விளைவாக, சேலம், கடலூர்ச் சிறைகளில் பலர் துப்பாக்கிச் சூட்டுக்குப் பலியானார்கள்.

ஆட்சியாளரின் இந்தப் படுமோசமான செயலைக் கண்டித்து எழுதுகின்ற துணிவு தமிழ் நாட்டில் குருசாமியைத் தவிர எவருக்கும் இல்லை.

குருசாமி ஒருவர்தான் காங்கிரசு அரசின் மனிதாபிமானமற்ற செயலைக் கண்டித்து எழுதினார்; பேசினார்.

'விடுதலை'யில் அவரது தலையங்கங்கள், குத்தூசிக் கட்டுரைகள் ஒவ்வொன்றும் ஆட்சியாளரை அலற அடித்தன. குத்தூசியின் எழுத்துகள், வேல் கொண்டு குத்துவதுபோல் இருந்தன.

''வாய்ப் பூட்டும், கை விலங்கும்''—என்ற 'விடுதலை' தலையங்கத்தில் :

> ''அன்று நடந்தது அன்னியராட்சி; இன்று நடப்பது சொந்த ஆட்சி, அன்று நடந்தது அடிமையாட்சி. இன்று நடப்பது சுதந்திர ஆட்சி.''
>
> ''அன்று வெலிங்டனும், லின்லித்கோவும் ஆண்டனர்; இன்று ஆச்சாரியாரும், நேருவும் ஆள்கின்றனர்.''
>
> ''அன்று மில் துணியில் கால் சட்டையும், கோட்டும் அணிந்தவர் ஆண்டனர். இன்று கதர்த் துணியில் வேட்டியும், குல்லாயும் அணிபவர்கள் ஆட்சி புரிகின்றனர்.''
>
> ''அன்று பிரிட்டிஷ் மன்னரின் பெயரைக் கூறிக் கொண்டு சுரண்டி வந்தனர். இன்று காந்தியார் பேரைக் கூறிக்கொண்டு சுரண்டுகின்றனர்.''
>
> ''தங்களுக்கு மாறுபட்ட கருத்துகளைப் பேசவோ,

எழுதவோ முடியாதபடி—தாங்கள் சொல்வதும் எழுதுவதும்தான் சரி, அவைகளைத்தான் பின்பற்ற வேண்டும் என்று வற்புறுத்துவதில் இன்றைய மந்திரிகள் ஹிட்லரையும், முசோலினியையும் அற்பர்களாக்கி விட்டனர்.''

''பேசுகிறவர்களுக்குத் தடை; பத்திரிகைகளுக்கு ஜாமீன்; புத்தகங்கள் பறிமுதல்; நாடகங்களுக்குத் தடை!''

''பொதுவுடைமைக் கொள்கை பரவக் கூடாது; பரவினால் தங்கள் கட்சியின் மறைமுக பாங்கர்களாகிய டாடா, பிர்லா, டால்மியா, முத்தய்யா, வடபாதி மங்கலம், கோயங்கா, சீனுவாசன் கும்பல்கள் ஒழிந்து விடும் என்ற அச்சம் காங்கிரசுக்கு இருப்பது இயற்கை தான்.''

''ஆனால், அதற்காக முதலாளித்துவத்தை ஆதரித்தும், பொதுவுடைமையை எதிர்த்தும் தங்களிடமுள்ள பிரச்சார பீரங்கிகளை பிரயோகப்படுத்துவதுதான் நேர்மையே யொழிய, அக் கொள்கையைப் பரப்பும் பத்திரிகையைத் தடுப்பது, அச்சகத்தைப் பூட்டுவது, தோழர்களைக் கைது செய்து, வழக்குத் தொடராமல் சிறையில் வைத்திருப்பது—ஆகிய காரியங்கள் ஜனநாயகத்தின் பெயராலும், பேச்சு உரிமைக்கும், எழுத்து உரிமைக்கும் ஆயுள் முழுதும் போராடிய காந்தியாரின் பெயராலும் நடைபெறுவது நேர்மையா?என்று பொதுமக்களை மட்டுமல்ல,காங்கிரசுத் தோழர்களையும் கேட்கிறோம்''

(விடுதலை: 28—3—1949)

என்று அனல் கக்க எழுதினார் குருசாமி.

இதன் பின்னரே பொதுவுடைமைத் தோழர்களைக் கொஞ்சம் மனிதாபிமானத்துடன் காங்கிரசு அரசு நடத்தியது.

பி. ராமமூர்த்தி, ப. ஜீவானந்தம், மணலி கந்தசாமி, கே. பால தண்டாயுதம் போன்ற பொதுவுடைமைத் தலைவர்கள் தலைமறைவாக வந்து தங்கிப் போவதும் குத்தூசியாரின் இல்லத்தில் தான்.

எவ்வளவோ கருத்து வேற்றுமைகள் இருந்த போதிலும், தத்துவ ரீதியாக, பொதுவுடைமைத் தலைவர்களைப் பாதுகாக்கின்ற உரிமையுடையவராகவே இருந்தார், குருசாமி.

ஓரிரவு மணலி கந்தசாமி மாறுவேடம் பூண்டு இரவு 12 மணியளவில் குருசாமியின் ஷெனாய் நகர் இல்லத்திற்கு வந்து கதவைத் தட்டினார். கதவு திறக்கப்பட்டது. உள்ளே நுழைந்தார் மணலி. அடையாளம் தெரியாததனால் திகைத்த குருசாமி, பின் அடையாளம் தெரிந்து கொண்டு, குஞ்சிதம் குருசாமியை அழைத்து ''இவர் யார் என்று கண்டுபிடி பார்ப்போம்'' என்றார். அம்மையார் புரியாமல் திகைக்கவே பின்பு உண்மையைச் சொன்னார்.

மறுநாள் 'விடுதலை'யில் ''இதோ மணலி கந்தசாமி'' என்று ஒரு குத்தூசிக் கட்டுரையும் எழுதினார். அதில் ஒரு பகுதி:

> ''இன்றைய நமது போலீஸ் நண்பர்களிடத்தில் ஒரு பெரிய எருமை மாட்டைச் சுட்டிக் காட்டி, இதன் வயிற்றுக்குள்தான் மணலி இருக்கிறார் என்று ஒரு கிறுக்கன் சொன்னாலும் போதும், கொஞ்சம்கூட யோசனை செய்யாமல் அந்த எருமையைக் கொலை செய்து வயிற்றைக் கிழித்துப் பார்த்த பின்புதான் போலீசார் தமது மடமையை உணருவார்கள்.''

கொடூரமான அடக்குமுறைக்காட்பட்ட பொதுவுடைமைத் தோழர்கள் 1951-ல் சிறையிலிருந்து விடுதலையான போது, பொது மக்களோடு தொடர்பு கொள்வதற்கு மேடை கிடைப்பதே அரிதாக இருந்தது. இக் காலத்தில் குருசாமியே முன்னின்று அவர்கள் பேசுவதற்கு மேடைகள் அமைத்துக் கொடுத்தார்.

1951-ல் சென்னை ஒற்றைவாடை அரங்கில் சமாதான மாநாடு நடைபெற்றது. இதில் குருசாமியின் பங்கு மகத்தானதாக அமைந்திருந்தது. பொதுவுடைமைத் தோழரான கே.டி.கே. தங்கமணியும், குருசாமியும் இம் மாநாட்டில் சிறப்புப் பேச்சாளராக விளங்கினர்.

இதைத் தொடர்ந்து பம்பாயில் பண்டித சுந்தர்லால் தலைமையில் நடைபெற்ற அகில இந்திய சமாதான மாநாட்

டில் தமிழகத்தின் சிறப்புச் சொற்பொழிவாளராக குருசாமி ஒருவரே கலந்து கொண்டார். இம் மாநாட்டிற்கு குருசாமியை அழைத்துச் சென்றவர் கே. டி. கே. தங்கமணி ஆவார். இம் மாநாட்டில் கலந்து கொண்ட பொதுவுடைமைத் தலைவர்களான ஜோகன்சிங் ஜோன், ரோமேஸ் சந்திரா முதலியோரும், கோசாம்பி, நடிகர் பிருத்விராஜ் போன்றவர்களும் குருசாமியை மிகவும் பாராட்டினர். ரோமேஸ் சந்திரா இன்று உலகச் சமாதானக் குழுவின் பொதுச் செயலாளராகப் பின்லாந்தில் பணியாற்றி வருகிறார்.

## ஆதித் திராவிடரின் எழுச்சி

திராவிடர் கழகத்தின் பிரச்சார வேகம், மனிதராகப் பிறந்தும் மாக்களாக வாழ்ந்து கொண்டிருந்த—அடிமைப் புத்தி படைத்த மனிதர்களை எழுச்சி கொள்ளச் செய்தது.

இவ் வியக்கத்தின் பலனாக, தான் அடிமையாக வாழ்ந்து கொண்டிருப்பதைப் புரியாமலேயே, வாழ்க்கைப் படகைச் செலுத்தி வந்த மனிதன், தான் அடிமையாக வாழ்ந்து கொண்டிருப்பதை புரிந்து கொண்டதைக் கீழ்க்காணும் நிகழ்ச்சி மெய்ப்பிக்கும்.

ஜோலார்பேட்டை, தஞ்சை, திருச்சி, சேலம், மாவட்டங் களில் உள்ள ஆதித் திராவிடத் தோழர்கள் சிலர் அங்கு நடந்த திராவிடர் கழகக் கூட்டங்களில் தங்கள் தப்பட்டைகளைக் கொண்டு வந்து குவித்து அதற்குத் தீ வைத்தனர்.

இச்செய்தி அறிந்த சனாதனிகள் கூக்குரலிட்டனர்; கண்டித் தனர்.

அதற்கு குருசாமி, ''அது மட்டும் போதாது; தப்பட்டைத் தீயில் பஞ்சாங்கத்தையும் எறிய வேண்டும்'' என்றார்.

> ''தொழில்பற்றித்தான் முதன் முதல் சாதிகள் ஏற்பட்ட தாகச் சொல்லுகிறார்கள்; இருக்கலாம். ஆனால், அந்தப் பிரிவுகூட இன்று எவ்வளவு ஆபத்தை உண்டாக்கிவிட்டது! மண்பாண்டம் செய்பவன் மகன் வக்கீலாகிறான். ஆனால், அதே தொழிலைச் செய்கின்ற வக்கீல் வரதாச்சாரியார் பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள முடிய

வில்லையே! தொழில் பற்றிச் சாதியென்றால், வக்கீல் வேலை புரியும் இரண்டு பேரும் ஒரே சாதி தானே!''

''பறையடித்ததற்காகப் பறையன் (சாதிப் பிரிவு) என்று ஏற்பட்டதாம். ஆனால், அவர் மகன் போலீஸ் இன்ஸ்பெக்டராக இருக்கிறான். அதே இன்ஸ்பெக்டர் சாதியைச் சேர்ந்த கிருஷ்ணசாமி முதலியார் வீட்டுடன் சம்பந்தம் வைத்துக் கொள்ள முடிகிறதா? முடிய வில்லையே, ஏன்?''

''பிராமண நண்பர்களே! நீங்களும் முந்திக் கொள் ளுங்கள். உங்களுடன் உங்களைக் காப்பி அடித்திருக்கிற மீதித் திராவிடர்களையும் சேர்த்துக் கொண்டு, உங்கள் அடையாளமான பூணூல், பஞ்சாங்கம், தர்ப்பை முதலிய வைகளைத் தீயிலிட்டு விடுங்கள். அதுதான் நல்லது; ஏதோ உங்கள் நன்மைக்குச் சொன்னேன்!''

## திராவிடர் கழகத்தில் பிளவு

1947-ஆக 15-லிருந்தே அண்ணாத்துரை பெரியாரிடம் கருத்து மாறுபாடு கொண்டிருந்தார். 1949-ல் பெரியார்—மணியம்மை திருமணம் இக் கருத்து வேறுபாட்டைப் பெரிதாக்கிப் பிளவில் கொண்டு போய் விட்டது. அண்ணாத்துரையும் அவரது தோழர் களும் திராவிடர் கழகத்திலிருந்து விலகி, திராவிட முன்னேற்றக் கழகத்தைத் தோற்றுவித்தனர்.

பெரியார் அப்பொழுது திருமணம் செய்து கொண்டது தவறு என்று அவர்கள் கருதினாலும், புதிய கழகம் கண்டவர்கள் அதையே ஒரு காரணமாகக் காட்டியது மாபெரும் தவறு என்பது குருசாமி யின் கருத்தாகும்.

திராவிடர் கழகத்தில் நெருக்கடி மிக்க, குழப்பமான அந்தக் கட்டத்தில் தலைவர் பெரியாரின் பக்கம் உறுதியாக நின்றவர்கள் தி. பொ. வேதாசலனாரும், குருசாமியுமே ஆவர்.

தாம் வளர்த்த கழகம் தம் கண் முன்னால் உடைவதைக்கண்டு உள்ளம் வருந்தினார் குருசாமி. ஒற்றுமை உண்டாக்க முயன்று தோற்றார். இம் முயற்சியின் காரணமாக, 'மத்தளத்துக்கு இரண்டு பக்கம் அடி' என்பது போல, இரு கட்சியினராலும் பிற்

காலத்தில் தாக்கப்பட்டார். குத்தூசியார் அதற்காக ஒரு போதும் வருந்தியது கிடையாது.

கழகம் பிளவுபட்டதற்குப் பிறகு, ஆசிரியர் குருசாமியின் வேலை மிகவும் தீவிரப் பட்டது; தனக்குப் புதிய எதிரிகள் என்று அவர் கருதியவர்களை—கடுமையாக விமர்சித்தார். குத்தூசியின் குத்தல்களினால் பலர் புண்பட்டதுண்டு. கழகத்தின் பாதுகாப்புக்கு அத்தகைய தாக்குதல் முறைகள் அன்று தேவைப்பட்டன.

**கம்யூனல் ஜி.ஓ.**

1950 லிருந்து திராவிடர் கழகம் தீவிரமான போராட்டங்கள், கிளர்ச்சிகள், மறியல்கள் ஆகியவற்றில் தொடர்ந்து ஈடுபட்டது. பெரியார் குருசாமியைக் கலக்காது எந்தவொரு காரியத்தையும் செய்வதில்லை. பெரியாரும், குருசாமியும் தனித்தனியே பிரித்துச் சொல்ல முடியாத அளவுக்கு இணைந்து, திராவிடர் கழகத்தைக் கட்டிக் காத்தனர்.

பெரியார் தமிழக முழுவதும் இரவு பகலென்று பாராமல் இயக்கப் பிரச்சாரத்தில் ஈடுபட்டார். அதுபோலவே குருசாமியும் பிரச்சாரத்தில் ஈடுபட்டுக் கொண்டே தமது எழுத்துப் பீரங்கியைக் கொண்டு பகைவர்களைச் சாடினார்.

1950 ஆகஸ்டில் கல்வியிலும் உத்தியோகத்திலும் உரிமை பெறுவதற்கான வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் வேண்டி, தமிழ் நாடெங்கும் திராவிடர் கழகக் கூட்டங்கள் நடைபெற்றன. பெரியாரும், குருசாமியும் தமிழ்நாடெங்கும் சூறாவளிப் பிரச்சாரம் செய்து, மக்களிடையே வகுப்புவாரி பிரதிநிதித்துவ முக்கியம் பற்றிக் கூறினர்.

குருசாமி 'விடுதலை'யில் எழுதிய தலையங்கங்கள் பல அரசாங் கத்தின் கவனத்தைக் கவர்ந்தன.

இக் கிளர்ச்சி, ஷெடியூல் வகுப்பார்களுக்கும், பின் தங்கிய வகுப்பினர்களுக்கும் அரசின் பதவிகளில் ஒதுக்கீடு செய்யும் வகையில் அரசியல் சட்டத்தில் விதி செய்வதற்குக் காரண மாயிற்று.

வகுப்புவாரி பிரதிநிதித்துவத்தின் கூட்டங்கள் பற்றிய "இன்றைய நிகழ்ச்சிகள்" பகுதியில் 'இந்து' பத்திரிகை 'கம்யூனல்

ஜி. ஒ. என்பதை 'கம்யூனிஸ்ட் ஜி. ஒ.'—என்று தவறாக அச்சிட்டு விட்டது. இதைக் கண்ட குத்தூசியார் "இந்துப் பத்திரிகையே கம்யூனிஸ்ட் கிலி பிடித்துத் தவறாக அச்சிடும்போது, பாமரர்களைப் பற்றிச் சொல்வதற்கு என்ன இருக்கிறது!" என்று தம் கண்டனக் கட்டுரையைத் தொடங்கி இவ்விதம் எழுதினார்:

"கம்யூனல் ஜி. ஒ. உண்மையில் கம்யூனிஸ்ட் ஜி. ஒ. தான்! மேடு பள்ளத்தை, நிரப்புகின்ற உத்தரவு. மிட்டா-மிராசு மேடுகளை வெட்டி, உழவன் பள்ளத்தில் போட்டு சமப்படுத்தினால் தான் பயிர் விளையும். இல்லாவிடில், மேட்டில் தண்ணீரே நிற்காது. பள்ளத்தில் குளமாக நிற்கும். இரண்டு இடங்களிலும் பயிர் விளையாது."

"கல்வித் துறையிலும் மிட்டா-மிராசு மேடுகள் இருக்கின்றன; பள்ளங்களும், ஏராளமாக இருக்கின்றன. பல நூற்றாண்டுகளாக இருக்கின்றன. மேட்டை வெட்டினால், மேடு 'அய்யய்யோ!' என்று அலறுகிறது! "தகுதியினால் மேடாகியிருக்கிறேன்" என்கிறது. அறிவுள்ள மனிதன் ஒப்புக்கொள்வானா? இயற்கையில் மேடாக இருக்கும் மலையையே உடைக்கிறான். குடைந்து செல்லுகிறான். அப்படியிருக்க, செயற்கை மேட்டையா மனிதன் விட்டுவிடுவான்?"

"கம்யூனல் ஜி. ஒ. பிற்போக்கு ஏற்பாடல்ல. சமநிலையை உண்டாக்குவதற்கு முந்தி வேண்டிய கம்யூனிஸ்ட் ஜி. ஒ. தான்."

"இன்று நியாயக் கூலி கேட்டுக் கிளர்ச்சி செய்கிறவர்கள் நாளைக்கு லாபத்தில் பங்கு கேட்கப் போகிறார்கள்! மறுநாள், 'எனக்குத்தான் சொந்தம்!" என்று கூறப்போகிறார்கள். ஆகவே, இப்போது நியாயக் கூலி கேட்பது மடிப் பிச்சையல்ல; உரிமைக் கிளர்ச்சி. படிப்பிலும், பதவியிலும் விகிதாச்சார உரிமை கேட்பது மடிப் பிச்சையல்ல; உரிமைக் கிளர்ச்சி."

> "நியாயக் கூலி கேட்பவன் மீது முதலாளி உலகம் துப்பாக்கிப் பிரயோகம் செய்கிறது. விகிதாச்சார உரிமை கேட்பவன் மீது பிறவி முதலாளி உலகம் சட்டக் குண்டை வீசி ஒழிக்கப் பார்க்கிறது."

"பச்சையாகச் சொல்கிறேன், மறைப்பானேன்.

இரண்டுமே கம்யூனிஸ்ட் கிளர்ச்சிதான்.''

(விடுதலை 26-8-1950)

திருச்சி புத்தூரில் 'வடநாட்டுச் சுரண்டல்' ஒழிப்பு மாநாடு நடந்தது. அம் மாநாட்டுத் தீர்மானப்படி, வடநாட்டார் தொழில் செய்கின்ற இடங்கள் முன்பு திராவிடர் கழகத்தினர் மறியல் செய்வது என்று தீர்மானிக்கப்பட்டது.

தீர்மானத்தை விளக்கி நாடெங்கும் கூட்டங்கள் கூட்டப் பட்டன. கூட்டங்களில் பேசிய குருசாமியின் பேச்சும், அவரது 'விடுதலை' தலையங்கங்களும், குத்தூசிக் கட்டுரைகளும் சுமார் இரண்டு லட்சம் தொண்டர்களைத் திரட்டித் தந்தன.

பெரியார் போராட்டத்தின்போதே கைது செய்யப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டார். சென்னையில் மறியல் செய்த குருசாமியும், மேலும் பல தோழர்களுடனும் சிறை சென்றார்.

பெரியாரும் மற்ற தோழர்களும் மூன்று நாட்களுக்குப் பின் விடுதலை செய்யப் பெற்றனர்.

## ''சினிமாவை விடு, சிலம்பத்தை எடு''

குத்தூசி குருசாமி, இளைஞர்கள் திரைப் படங்களைப் பார்த்து சினிமாக்காரர்களின் விசிறியாகி, சீரழிவதைக் கடுமையாகக் கண்டித்தார். இளைஞர்களுக்கு ''சினிமாவை விடு; சிலம்பத்தை எடு'' என்று புதிய முழக்கத்தை அளித்தார்.

குருசாமி நாடகத்தையும் சினிமாவையும் அடியோடு வெறுத்த வரல்லர். 1934-ல் அவரே இரணியனாக வேடந்தாங்கி நடித்தவர்.

1944 பிப்ரவரி 27-ல், சென்னையில், 'திராவிட நாடு' பத்திரிகை நிதிக்காக அண்ணா நடித்த 'சந்திரோதயம்' நாடகம் நடந்தது.

குத்தூசியார், தமது குடும்பத்துடன் மட்டுமல்லாமல், வழக் கறிஞர் எத்திராசு போன்றவர்களையும், அந்த நாடகத்திற்கு அழைத்துச் சென்றவர்.

என். எஸ். கிருஷ்ணன் தலைமையில் நடைபெற்ற, இந்த நாடகத்தின் இடைவேளையில், குஞ்சிதம் குருசாமியின் மகள் செல்வி ரஷ்யாவின், நடனமும் நடைபெற்றது.

நாடக முடிவில் என். எஸ். கிருஷ்ணன் செல்வி ரஷ்யாவுக்கு அன்பளிப்பாக ரூபாய் 100 கொடுத்தார்.

நாடகமும் சினிமாவும் நாட்டைக் கெடுத்து விடக்கூடாது என்பதுதான் குருசாமியின் கவலை.

குருசாமி 4—2—1953 'விடுதலை'யில் எழுதினார்:

"நாடகமும் சினிமாவும் நாட்டைத் திருத்தி நல்வழிப்படுத்து வதற்காகப் பயன்படுமானால் நல்லதுதான். மனிதனுக்கு மருந்து போன்றவை இந்த இரண்டும்! வேதனை நோய் ஏற்பட்ட போது எப்போதாவது மாத்திரை போட்டுக் கொண்டால் நல்லதுதான். நோய் தீரும்! ஆனால், வேளை தோறும் தொடர்ந்து சாப்பாட்டிலேயே கலந்து சாப்பிடுவதும், தண்ணீரிலும் பாலிலும் காஃபியிலும் கலந்து குடிப்பதுமாக இருந்தால், எவ்வளவு நல்ல மருந்து கூட ஆளைக் கொன்று விடாதா?"

"சினிமாவும் நாடகமும் தனித் தொழிலாகவோ கலையாகவோ இருப்பதுபற்றி அப்புறம் பேசலாம், எழுதலாம்! ஆனால், இந்த இரண்டையும் பொது வாழ்க்கையிலுள்ளவர்கள் கையாளுவது சரியா?"

சிலர் 'ரஷ்யாவில் சினிமாவிற்கு ஒரு மந்திரியே இருக்கிறாரே, இதை அறியாரா, குருசாமி?' என்றனர். அதற்கு விடை அளித்து குருசாமி எழுதியதன் சில பகுதிகள்:

> "ரஷ்யாவில் எப்போது சினிமா மந்திரி ஏற்பட்டார்? புரட்சியின் போதா? தயவு செய்து சிந்தனைக்கு வேலை கொடுக்கவேண்டும். நாட்டை மீட்கவேண்டிய சமயத்திலா ரஷ்யாவிலே சினிமாக் கதை எழுதிக் கொண் டிருந்தனர்? இல்லை, இல்லை! எல்லாரும் ஒரே சக்தி யாகத் திரண்டெழுந்தனர். ஜார் ஆட்சியை வீழ்த்துவதற் காக இரத்தஞ் சிந்தினர். வீட்டுக்கு வீடு படைமுகாம்; எல்லோரும் கிளர்ச்சி செய்தனர்.
>
> "நாட்டிலே நல்லாட்சி ஏற்பட்டது. சர்வாதிகார ஆட்சி ஒழிந்தது. மக்கள் கைக்கு அதிகாரம் கிடைத்தது. உணவு, உடை, வீடு யாவும் தேவைக்கு மேல் கிடைக்கக் கூடிய திட்டங்கள் வகுத்தனர். அதன் பிறகு தான்

கலை யுணர்ச்சி! சர்க்கார் சார்பில், சர்க்கார் கொள்கை யைப் பிரச்சாரஞ் செய்வதற்காக!''

''சினிமாவே ஒழியவேண்டும் என்பதல்ல என் கருத்து. கள், சாராயக் குடியை விடப் பெருங்கேடாக இன்று முளைத்திருக்கின்ற சினிமாக்கள், ஏழைகள் பணத்தைச் சுரண்டத்தான் பயன்படுகின்றன!''

''ஏனப்பா குடிக்கின்றாய்? என்று கேட்டால், 'என்னைக் கண்டு உனக்குப் பொறாமையா? வேணு மானால் நீயுந்தான் குடித்துப் பாரேன்! ஒரு அவுன்ஸ் குடித்தால் மயக்கம் வந்துவிடுமே உனக்கு? நீ ஒரு கையாலாகாதவன். அதற்கு நானென்ன செய்வது?'' என்று கேட்கலாமா? குடிக்கப் பழகுவது என்பது பிர மாதமல்ல; குடியர்களுடன் ஒரு வாரத்துக்கு நெருங்கிப் பழகினால் தானாக வந்துவிடும்! குடி மட்டுமா? எதுவுமே வரும்! குடியர்களெல்லாம் பிறவிக் குடியர்களா, என்ன?

''இந்த மாதிரிப் போட்டியை என் போன்றவரிடம் போட்டுப் பயனில்லை. ''கூடாது'' என்பதுதான் எண்ணமே ஒழிய, ''முடியாது'' என்பது அகராதியிலேயே இல்லை!''

## ஆச்சாரியார் மந்திரிசபை

1952 பொதுத் தேர்தல் நெருங்கியது.

தேர்தலின்போது 21—10—1951 அன்று உருவான 'ஐக்கிய முன்னணி' என்ற பொதுவுடைமைக் கூட்டணியைப் பெரியாரும் திராவிடர் கழகமும் ஆதரிப்பது என்ற முடிவுக்கு வந்தனர். காங்கிரசை முறியடிக்கப் பொதுவுடைமைக் கட்சிதான் சரியான ஆயுதம் என்பது அவர்கள் கருத்து.

பெரியார் முழு மூச்சாகத் தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபட்டார். கழகப் பொதுச் செயலாளரான குருசாமி சூறாவளிப் பயணத்தை மேற்கொண்டு, கூட்டணியை

ஆதரித்துப் பிரச்சாரம் செய்தார்.

அவருடைய பேச்சும் எழுத்தும் பொதுவுடைமைக் கூட்டணியின் வெற்றிக்கு, குறிப்பாக பொதுவுடைமைத் தோழர்களின் அதிக வெற்றிக்கு—கணிசமான முறையில் உதவின. நாடு சுதந்திரம் பெற்ற பின்னர் நடைபெற்ற முதல் பொதுத் தேர்தலிலேயே காங்கிரசுக் கட்சி, திராவிடர் கழகத்தின் தீவிரப் பிரச்சாரத்தின் விளைவாகத் தமிழகத்தில் பலவீனப்பட்டது.

ஆயினும், காங்கிரசின் இராஜதந்திரத்தினால் மீண்டும் ராஜாஜி தமிழ் நாட்டின் முதல் அமைச்சரானார்.

இதைக் கண்டித்து, 'கொல்லைப் புறவழியில் ஆச்சாரியார்' என்று குருசாமி எழுதியதை நாடு என்றும் மறக்காது. தேர்தலில் நிற்காமல் ஆச்சாரியாரைப்போல் பதவிக்கு வருகின்ற முறைக்கு 'கொல்லைப் புறவழி' என்ற பெயரையே உண்டாக்கி, தமிழ் நாட்டு அரசியல் வாதிகளின் பேச்சுகளில் அது இன்றளவும் இடம் பெற்று வரும்படி செய்து விட்டார், குத்தூசியார்.

1952 ஜூன் 29-ல் சென்னை திருவான்மியூர் சலவைத் தொழிலாளர் மாநாட்டில் பேசிய முதலமைச்சர் ஆச்சாரியார் "அவரவர் சாதித்தொழிலையே அவரவர் செய்து வரவேண்டும். எல்லா மக்களுமே படிப்பது என்றால் இத்தனை பேருக்கு உத்தியோகம் எங்கேயிருக்கிறது? ஆதலால், சாதிமுறை நல்லது தான்" என்று பேசினார்.

குருசாமி சீறி எழுந்தார். மறுநாள் 'விடுதலை'யில் குத்தூசி பாணியில் இவ்விதம் எழுதினார்:

> "பிராமணனுக்கு. ஓதல் — ஓதுவித்தல், யாகம் செய்தல்—யாகம் செய்வித்தல், தானம் கொடுத்தல்—தானம் வாங்குதல்—ஆகிய அறு தொழில்களையும் 'பிரம்மா' ஏற்படுத்தினார் என்பது மனு தர்மம், முதல் அத்தியாயம் 88-வது சுலோகத்தின் விதி. வேதங்களும் இதையே முறையிடுகின்றன.
>
> இட்டிலியும், வெங்காயச் சாம்பாரும், ஒவல் டின்னும், காபியும் சாப்பிட்டு விட்டு இங்கிலீஷ் படித்து விட்டு, சட்டை போட்டுக் கொண்டு, மோட்டார் காரில் போய்,

மந்திரி வேலை பார்க்கச் சொல்லி பிராமணனுக்கு எங்காவது விதிக்கப்பட்டிருக்கிறதா ?

"செருப்புக் கடை முதல் டாக்டர் வேலை வரையில், லாண்டரி முதல் இஞ்சினியர் வரையில், காபி கடை முதல் போலீஸ் வரையில்—எந்த வேலையைச் செய்யவில்லை பார்ப்பனர்கள்? இவர்கள் மட்டும் ஏன் தங்கள் குலத் தொழிலைச் செய்யாமல், 'படிப்பு' 'படிப்பு' என்று பள்ளிகளைச் சுற்றிக் கொண்டிருக்கிறார்கள்? தர்ப்பையை ஏந்தி ஆற்றங்கரையில் உட்கார்ந்திருக்க வேண்டிய திரு மேனிகள் தங்கள் குல ஆச்சாரத்தைக் கைவிட்டு விட்டு, பேனாவை ஏந்தி மின்சார விசிறிக்கு அடியில் உட்கார லாமா?" என்று நான் கனம் மந்திரியாரைக் கேட்டால் அவர் என்ன சொல்வார் தெரியுமா?

"இது என்ன கேள்வி, ஓய்? நான் உங்கள் கூட்டத்துக் காக உபதேசம் செய்தேனா? அல்லது எங்களுக்காகச் சொன்னேனா? அவரவர் சாதித் தொழிலை அவரவர் செய்யவேண்டுமென்று, பிராமணர்களைப் பார்த்துச் சொல்வதற்கு நான் என்ன அவ்வளவு முட்டாளா? மற்ற வர்களை முட்டாளாக்குவதுதானே என் வேலை! அதற் காகத்தானே நான் இந்தப் பதவியை ஏற்றிருக்கிறேன். நீ எதை வேண்டுமானாலும் எழுதித் தள்ளு. உன் இனத்தில் ஊருக்கு ஒரு டஜன் முட்டாள்கள் கிடைக்கமாட்டார்களா? அதுவே போதும்!' என்று தான் பதில் சொல்லுவார்."

(விடுதலை. 30-6-1952)

இந்த எழுத்துகள் உறங்கிக் கிடந்த தமிழர்களை விழித் தெழச் செய்தன.

ஆச்சாரியாரின் திருவான்மியூர்ப் பேச்சை 'விடுதலை' இதழின் தலையங்கப் பகுதியின்மேலே, கட்டம் கட்டி, நாள் தோறும் வெளியிட்டு வந்தார் குத்தூசியார். ஆச்சாரியாரின் எதிர்ப்புப் பிரச்சாரத்தை அன்றே தொடங்கி வைத்தார்.

**குத்தூசியார்—காமராசர்—ஆச்சாரியார்**

ஆச்சாரியார் திருவான்மியூரில் தாம் பேசிய பேச்சை 1953

கல்வி ஆண்டில் செயல்படுத்தத் தொடங்கினார்.

"குழந்தைகள் அரை நேரம் மட்டிலும் பள்ளியில் படிக்க வேண்டும். மீதி அரை நேரத்தில் அவனவன் பரம்பரைச் சாதித் தொழிலைக் கற்றுக் கொள்ள வேண்டும்" என்பதே அத் திட்டமாகும்.

இத் திட்டம் தயாராகும்போதே அதனையறிந்த குருசாமி, "ஆச்சாரியார் குலக் கல்வித் திட்டம் ஒன்று தயாரிக்கிறார், தமிழர்களே உஷார்" என்று எச்சரித்தார்.

இத் திட்டம் நடைமுறைக்கு வந்தவுடன், இதே ஆண்டில் சேலம் ஆத்தூரில் நடந்த திராவிடர் கழக மாநாட்டில் பெரியார், "கழகத் தோழர்களே, கத்தி வைத்துக் கொள்ளுங்கள்" என்றார்.

குலக் கல்வித் திட்டம் பத்திரிகையில் வெளியான அன்று மாலை விருதுநகர் பொதுக் கூட்டத்தில் பேசிய தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் காமராசர் "பயித்தியக்கார உத்தரவு" என்று அதைக் கண்டித்தார்.

மேலும், ஆச்சாரியார் அக் கல்வி ஆண்டில், பொறியியல் கல்லூரிகளிலும், மருத்துவக் கல்லூரிகளிலும், நேர்முகத்தேர்வின் மதிப்பு எண்களைக் குறைத்து, பார்ப்பன மாணவர்களுக்குச் சாதகமாகத் திருத்தம் செய்தார்.

இச் செயல் அறிந்த குருசாமி பொறியியல், மருத்துவக் கல்லூரிகளில் எத்தனை பார்ப்பன மாணவர்கள் சேர்க்கப்பட்டனர் என்பதற்கான புள்ளி விவரங்களைத் திரட்டினார். இந் நிகழ்ச்சியின்போது குருசாமி மிக்க ஆச்சரியப்படத்தக்கதும், மகிழ்ச்சி தரக் கூடியதுமான ஒரு செய்தியை அறிந்தார்.

குருசாமி எந்த நோக்கத்தோடு புள்ளி விவரங்களைத் திரட்டினாரோ அதே நோக்கத்தோடு, தமக்கு முன்பாகவே காமராசர் சேகரித்திருந்தார் என்பது தான் அது. அச் செய்தியை அறிந்த குத்தூசியார் காமராசருடன் தொடர்பு கொண்டு, அவரை மிகவும் பாராட்டினார்.

இச் சமயத்தில் காங்கிரசுக் கட்சியைச் சார்ந்த சட்டமன்ற உறுப்பினர்கள் பலர், குலக் கல்வித் திட்டத்திற்கு எதிராக மகஜர் ஒன்று தயாரித்து காமராசரிடம் கொடுத்தனர்.

காமராசரும் அக் கல்வித் திட்டத்தை அந்தக் கல்வி ஆண்டோடு கைவிடும்படி ஆச்சாரியாருக்கு ஆலோசனை கூறினார். தொடக்கத்தில் ஒப்புக்கொள்வதுபோல் மவுனம் சாதித்த ஆச்சாரியார் பின்னர் தம் திட்டத்தில் பிடிவாதமாக இருந்து விட்டார்.

இவற்றையெல்லாம் குத்தூசியார், முழுமையாக அறிந்திருந் தார்.

இந்தச் சூழ்நிலையில் குருசாமி சென்னையில் சாதி ஒழிப்பு மாநாடு ஒன்று நடத்த ஏற்பாடு செய்தார். மாநாட்டில் பங்கு பெறுபவர்கள் செயலில் சாதி ஒழிப்பைச் செய்தவர்களாக இருக்க வேண்டுமென்று எண்ணினார்.

தமது மகளை காந்தியாரின் மகனுக்குக் கலப்பு மணம் செய்து கொடுத்த ஆச்சாரியாரை, அந்த மாநாட்டைத் திறந்து வைப்பதற்கு ஏற்பாடு செய்ய விரும்பினார்.

குருசாமி ஆச்சாரியாருக்குக் கடிதம் எழுதினார்.

'மாநாட்டில் கலந்து கொள்ள முடியாமைக்கு வருந்துகிறேன்' என்று ஆச்சாரியார் பதில் எழுதிவிட்டார். அந்தக் கடிதத்தில் ஆச்சாரியாரின் செயலாளர்தான் கையெழுத்திட்டிருந்தார்.

இதைக் கண்ட குருசாமி, காமராசருக்குத் தொலைபேசி மூலம் தொடர்பு கொண்டு, அதே மாநாட்டை அவரைக் கொண்டு திறக்க ஏற்பாடு செய்தார்.

1953 மார்ச் 22-ல் சென்னை செயின்ட் மேரி மண்டபத்தில் இம் மாநாடு நடந்தது. மாநாட்டுக்கு குருசாமி தலைமை தாங்க காமராசர் திறந்து வைத்தார். டாக்டர் சுப்பராயன், ப. ஜீவானந்தம், குஞ்சிதம் குருசாமி முதலானோர் பேசினர். மிகச் சிறந்த முறையில் மாநாடும் நடைபெற்றது.

இந்த மாநாட்டிற்குப் பின், காமராசர்—குருசாமி தொடர்பில் நெருக்கம் ஏற்பட்டது. இருவருடைய சந்திப்பும் அடிக்கடி நிகழ்ந்தன. இந்தச் சந்திப்புகள் பெரும்பாலும் குத்தூசியார் இல்லத்திலேயே நடைபெற்றன.

இவ்விருவரும், ஆச்சாரியார் பார்ப்பனரல்லாதார்களுக்குச் செய்யும் பாதகச் செயல்களுக்கு ஒரு முடிவு கட்ட எண்ணினர். இந்த

எண்ணத்தை காமராசரிடம் வலியுறுத்தியவர் குருசாமியே ஆவார்

ஆச்சாரியாரின் குலக் கல்வித் திட்டத்தை எதிர்த்து, நாகைப் பட்டினத்திலிருந்து 'குலக் கல்வி எதிர்ப்புப் படை' ஒன்று நீடாமங்கலம் ஆறுமுகம், பட்டுக்கோட்டை டேவிஸ் ஆகியோர் தலைமையில் சென்னைக்கு வந்தது.

சென்னையிலும் இந்தக் கல்வித் திட்டத்தை எதிர்த்து குருசாமி தலைமையில் மறியல் நடைபெற்றது. கழகத் தோழர்கள் ஆயிரக்கணக்கில் கலந்து கொண்டனர்.

குருசாமியும் கழகத் தோழர்களும் சிறையில் அடைக்கப் பட்டனர்.

குருசாமி சிறையிலிருந்து வெளிவந்ததும் தொடர்ந்து, ஆச்சாரியார் பார்ப்பனரல்லாதாருக்குக் கேடு விளைவிக்கின்ற ஒவ்வொரு செயலையும் கண்டித்து எழுதிக்கொண்டிருந்தார். குத்தூசியாரின் எழுத்தாற்றலைக் கண்டு திணறிய ஆச்சாரியார்,

''நான் செய்கிற ஒவ்வொரு நல்ல காரியத்தையுங்கூட 'ஆச்சாரியார் சூழ்ச்சி, இதை நம்பாதீர்கள்' என்று குருசாமி எழுதுகிறார். அந்தப் பத்திரிகைக்கு 'விடுதலை' என்று பெயர் வைக்கச் சொன்னதே நான்தான். அந்த 'விடுதலை'யே என்னை ஒழித்துக்கட்டப் பார்க்கிறது!''

என்று அழாத குறையாகச் சொல்லி, டாக்டர் வரதராசுலு நாயுடுவைப் பெரியாரிடம் தூதாக அனுப்பினார்.

அதுமட்டுமன்றி, 1949-ல் 'விடுதலை'யில் குருசாமி எழுதியதைக் கண்டு மருண்ட அன்றையக் காங்கிரசு அரசு வாங்கிய ஜாமீன் தொகையாகிய ரூபாய் பத்தாயிரத்தையும் திருப்பிக்கொடுக்கவும் உத்தரவு போட்டார்.

இந் நிலையில் ''**ஆச்சாரியார் ராஜினாமா**'' என்ற தலைப்பில் ஒரு தலையங்கம் எழுதினார் குருசாமி. இதில் ஆச்சாரியாரை மிகமிகக் கடுமையாக விமர்சித்து எழுதினார்.

டாக்டர் வரதராசுலு நாயுடுவின் தூதினால் மனமிரங்கிய பெரியார் இத் தலையங்கத்தைப் படித்தவுடன், ''இதன் கருத்து என் சொந்தக் கருத்து அல்ல; இது குருசாமியின் சொந்தக் கருத்தாகும்'' என்று ஒரு செய்தியை 'விடுதலை'யில் வெளியிட்டார்.

ஆயினும் ஆச்சாரியார் என்ன தவறு செய்தாலும் குருசாமி, உடனுக்குடன் சுட்டிக் காட்டிக் கண்டித்து வந்தார்.

ஆச்சாரியாரின் இனவெறியைப் படம் பிடித்துக் காட்டுகிற வகையில் '*Nepotism*' என்ற தலைப்பில் 'விடுதலை'யில் குத்தூசியார், மற்றொரு தலையங்கம் எழுதினார்.

இதைப் படித்து மிக்க அதிர்ச்சி அடைந்த ஆச்சாரியார் பெரியாரிடம் மீண்டும் டாக்டர் நாயுடுவைத் தூது அனுப்பினார்.

பெரியார், "உங்களுடைய எழுத்துக்கு, ஆச்சாரியார் மிகவும் அஞ்சுகிறார். கொஞ்சம் 'மைல்டாக' எழுதுங்க" என்று குருசாமியிடம் சொல்லிய நேரங்களில், குத்தூசியார் சிரித்துக்கொண்டே இருந்துவிடுவாரே ஒழிய, தமது பேனாவை ஓய விட்டதில்லை.

1954-ல் ஆச்சாரியார் தனது முதல் மந்திரி பதவியிலிருந்து விலகுவதற்கு அடிப்படைக் காரணமே 'காமராசர்—குருசாமி' தொடர்புதான்.

காமராசரும் குருசாமியும் இரகசியமாகக் கலந்து ஆலோசனை செய்ததை; 'ஆச்சாரியார் எதிர்ப்புத் திட்ட'த்தைப் பெரியாருக்குத் தெரியப்படுத்தினார் குத்தூசியார்.

ஆச்சாரியாருக்குப் பிறகு, முதலமைச்சரான காமராசர் உடனடியாக ஆச்சாரியாரின் குலதர்மக் கல்வித் திட்டத்தை ஒழித்தமைக்காக கழகத்தினரின் போற்றுதலுக்கு ஆளானார்.

எந்த ஆச்சாரியார் தமிழரின் குழந்தைகள் குலத்தொழிலைச் செய்யவேண்டும் என்று சொன்னாரோ அந்த ஆச்சாரியாரின் திட்டத்தைக் காமராசர் அடியோடு ஒழித்து, ஆயிரக்கணக்கான புதிய பள்ளிகளை அதிகமாகத் திறக்கச் செய்ததோடல்லாமல், தமிழ்நாடு முழுவதும் புதிய உணவுத் திட்டத்தைச் செயல் படுத்தினார். அதற்காகப் பெரியாரின் பாராட்டுதலைப் பெற்றார்.

குருசாமியும், 1946-ல் தாம் கனவு கண்ட 'தகப்பனாராக' காமராசர் விளங்கவேண்டுமென்று ஆசைப்பட்டார்.

அதன் பின்னரே பெரியார் காமராசரைப் 'பச்சைத் தமிழர்' என்று பாராட்டினார்.

குடியாத்தத்தில் நடைபெற்ற இடைத் தேர்தலில் நின்ற

காமராசரைப் பார்ப்பனர்களும், அவர்களது பத்திரிகைகளும் முழு மூச்சாய் எதிர்த்தன. இதைக் கண்ட பெரியார் முழு மூச்சாக காமராசரை ஆதரித்தார். குருசாமியும் 'விடுதலை'யின் மூலமாக காமராசர் வெற்றிக்காக அரும்பாடுபட்டார்.

### கவர்னர் பிரகாசாவின் நண்பர்

1954-ல் தமிழ்நாட்டின் கவர்னராக இருந்த ஸ்ரீபிரகாசா குஞ்சிதம் குருசாமி தம்பதிகளின் பெருமையைத் தம்முடைய நண்பர்கள் மூலம் அறிந்து, நேரில் கண்டு உரையாட விரும்பி, அதே நண்பர்கள்மூலம் குத்தூசியாருக்குத் தமது விருப்பத்தைத் தெரிவித்தார்.

கவர்னரின் அழைப்பிற்கிணங்க குஞ்சிதம் குருசாமி தம்பதிகள் கிண்டியிலுள்ள கவர்னர் மாளிகைக்குச் சென்றனர். அவர்களே வியக்கத்தக்க வகையில் கவர்னரால் மிகச் சிறப்புடன் வரவேற்கப் பட்டு, விருந்தளிக்கப்பட்டனர்.

அன்று முழுவதும், பெரியாரின் சுயமரியாதை இயக்கம் திராவிடர் கழகம், தமிழ் மொழி, தமிழ் இலக்கியம் பற்றி மிக்க ஆர்வத்தோடு குருசாமி தம்பதிகளிடம் உரையாடினார் கவர்னர்.

ஸ்ரீ பிரகாசா தமிழ்நாட்டில் இருந்த வரையிலும், குருசாமி வாய்ப்புக் கிடைக்கும்போதெல்லாம் அவரைச் சந்தித்து உரையாடி மகிழ்வார். இப்படிப்பட்ட மிக முக்கியமான செய்திகளைக் கூட, சுய விளம்பரத்தை அடியோடு வெறுத்த குருசாமி, தமது 'விடுதலை'ப் பத்திரிகையில் வெளியிட்டுக் கொண்டதில்லை.

### பத்திரிகையாளர் குருசாமி

எவரெஸ்ட் சிகரத்தின் உயரம் 29,002 அடி. இதை அடை வதற்காக எத்தனையோ மலையேறி நிபுணர்கள் பல ஆண்டுகளாக அரும்பாடுபட்டு வந்திருக்கின்றனர்! உலகிலேயே மிக உயர்ந்த இடத்தை யடைந்தோம் என்ற ஒரு பெருமையைத் தவிர வேறொன்றுமில்லை. ஆனாலும், இதற்காக எவ்வளவு உயிர்கள் இது வரையில் பலியாகியிருக்கின்றன, தெரியுமா?



நிற்பவர்கள்: 1. திருமதி காந்தம்மா சுந்தர வடிவேலு 2. டி. எஸ். புருஷோத்துமன் (குஞ்சிதம் அம்மையாரின் இளவல்) 3. டி. எஸ். வெங்கடேசம்மாள் (குஞ்சிதம் அம்மையாரின் தங்கை) 4. கு. கு. ரஷ்யா (குஞ்சிதம்குருசாமி மகள்) 5. திருமதி டி. எஸ். குஞ்சிதம் குருசாமி.
உட்கார்ந்திருப்பவர்கள்: 1. நெ. து. சுந்தர வடிவேலு 2. திருமதி தங்கம்மாள் (குஞ்சிதம் அம்மையாரின் அன்னையார்) 3. டி. எஸ். சுப்பிரமணியம் (குத்தூசியாரின் மாமனார்) 4. குத்தூசியார் 5. கு. கு. கவுதமன் (குஞ்சிதம் குருசாமி மகன்) 6. கா. சு. திருவள்ளுவன் (காந்தம்மா சுந்தர வடிவேலு மகன்)



சிந்தனையாளர் குருசாமிக்கு
சிறை கொடுத்த வடிவம்

1849-ல்தான் முதன்முதல் இந்த மலையுச்சியின் உயரம் இவ்வளவு என்று கண்டுபிடிக்கப்பட்டது. இந்தியாவில் இத் துறையில் தனிக் கவலையெடுத்து ஆராய்ச்சி செய்த சர் ஜார்ஜ் எவரெஸ்ட் என்பவரின் பெயரால் இந்த உச்சிக்குப் பெயரிடப் பட்டது.

1952-ல் இந்த உச்சியை எட்டிப் பிடித்து சுவிட்சர்லாந்துக் கோஷ்டியார் வெற்றியடைந்தனர்.

தீவிரமான பல பிரச்சினைகளைப் பற்றி எழுதிக்கொண்டிருந்த குருசாமி, தாம் ஒரு பத்திரிகையாளர்—*Journalist*—என்பதுடன் இல்லாமல், ஒரு மத எதிர்ப்பாளன், சீர்திருத்தக்காரன் என்பதையும் மறந்துவிடவில்லை.

எவரெஸ்ட் உச்சி நோக்கிப் போய்க் கொண்டிருந்த சுவிட் சர்லாந்துக் கோஷ்டியினரின் வெற்றிச் செய்தியை குத்தூசியார் இவ்வாறு வெளியிட்டார் :—

**''பரமசிவனை நெருங்கி விட்டார்கள்''**

''சைவ மெய்யன்பர்களல்ல; பண்டார சந்நிதிகளல்ல; அருள் நெறிக் கூட்டத்தாரல்ல; குன்றக்குடி சுவாமிக ளல்ல; சிதம்பரம் தீட்சதர்களல்ல; திருச்செந்தூர் பட்டர்களல்ல!''

''பரமசிவனாவது, பரங்கிக் காயாவது—என்று கேட்கின்ற ,சுவிட்சர்லாந்து நாட்டைச் சேர்ந்த சிலர்.''

''400—500 அடி உயரமுள்ள சின்னஞ்சிறு குன்றுகளின் மீது ஏறுவதானால் நம் பக்தர்கள் என்ன செய்கிறார்கள்?''

''அய்யப்பனுக்கு ஜே'' என்று கூவிக்கொண்டு ஏறு கிறார்கள்!

''பழனியாண்டவனுக்கு அரோகரா!'' என்று கதறிக்கொண்டு ஏறுகிறார்கள்!''

''ஏழுமலையானுக்குக் கோவிந்தா!'' என்று கத்திக் கொண்டு ஏறுகிறார்கள்!''

''சாதாரண கருங்கல் பொம்மைகளைப் பார்ப்பதற்கே இவ்வளவு பெரிய கூக்குரல்! காவடி! ஆவேசம்! தடபுடல்!''

"ஆனால், வடக்கே பாருங்கள், இமயத்தை! சாட்சாத் அசல் பரமசிவனே குடும்ப சகிதமாக வீற்றிருக்கின்ற(?) கைலயங்கிரியை நோக்கிச் செல்கிறார்கள், ஸ்விட்சர்லாந்து மலை ஏறிகள்!"

காவடி தூக்காமல், ஆவேசம் வராமல், தங்கள் உணவுக்கு வேண்டிய அன்னக் காவடியுடன், உச்சியை அடைந்து கொடி நாட்ட வேண்டுமென்ற ஒரே ஆவேசத் துடன்—மளமளவென்று ஏறிக் கொண்டிருக்கிறார்கள்! நெற்றியிலே திருநீறு இல்லை. கையிலே தேவாரமில்லை. வாயிலே திருவாசகமில்லை. கழுத்திலே உருத்திராட்ச மில்லை. இதோ போய்விட்டார்கள், பரமசிவனை நெருங்கி!"

"மற்ற நாட்டாரோ, எல்லாம் செயல், ஆக்கவேலை, கண்டுபிடிப்பு, ஆராய்ச்சி, புதுமுயற்சி-இப்படியாக!"

"இங்கேயிருப்பது பக்தி; அங்கேயிருப்பது புத்தி இங்கேயிருப்பது மனித உருவம்; அங்கேயிருப்பது அசல் மனிதன். இங்கே யிருப்பது பழைமைச் சாக்கடை; அங்கே யிருப்பது புதுமைப் பூங்கா!"

"இங்குள்ளவர் முயற்சி பழனியும், திருப்பதியும்! அங்கே உள்ளவர் முயற்சி எவரெஸ்ட்டும் வட துருவமும்"

(விடுதலை: 20-12-1952)

## திராவிடர் கழகப் போராட்டங்கள்

1952 ஆகஸ்ட்டில் புகை வண்டி நிலையத்திலுள்ள பெயர்ப் பலகைகளிலுள்ள இந்தி எழுத்துகளை அழிப்பதற்கான போராட் டத்தை திராவிடர் கழகம் தொடங்கியது. புகைவண்டி நிலையங் களின் பெயர்ப் பலகையிலுள்ள இந்தி எழுத்துகளைக் கழகத் தோழர்கள் தார் கொண்டு அழித்தனர்.

குருசாமி சென்னை எழும்பூர் புகை வண்டி நிலையத்தின் பெயர்ப் பலகையிலுள்ள இந்தி எழுத்துகளை அழித்தார்.

ஆண்டுதோறும் தொடர்ந்து ஆகஸ்ட்டு முதல் தேதியில் இவ்வாறு திராவிடர் கழகம் செய்ததன் பலனாகப் புகைவண்டி

நிலையப் பெயர்ப் பலகையில் தமிழ் மேலேயும், இந்தி கீழேயும் மாறியது.

இந்துமதப் புராணப் புரட்டுகளை மக்களுக்கு எடுத்துணர்த் தவும், கற்பனைக் கடவுள் உருவங்களின் போலித் தன்மையை எடுத்துக் காட்டவும் 953 மே-27 ல் பிள்ளையார் உருவச் சிலை உடைப்புப் போராட்டத்தில் ஈடுபட்டது, திராவிடர் கழகம்.

நாடெங்கும் பல்லாயிரக் கணக்கில் இந்த உடைப்புப் போராட் டத்தில் ஈடுபட்டனர், கழகத் தோழர்கள். ஆயிரக்கணக்கான பிள்ளையார் சிலைகள் உடைக்கப்பட்டன.

திருச்சியில் பெரும் மக்கள் வெள்ளத்தினிடையே பெரியார் தன் கைத்தடியினாலேயே பிள்ளையார் சிலையை நொறுக்கினார். அதேபோல், சென்னையில் மக்கள் வெள்ளத்தில் குருசாமியும் மற்ற கழக முன்னணியினரும் நொறுக்கினர்.

1954-ல் இராமாயண எதிர்ப்புப் போராட்டத்தை பெரியார் மீண்டும் தொடங்கினார்

1928-லிருந்தே இராமாயணத்தைக் கண்டித்துப் பேசியும், எழுதியும் வந்தவரான குருசாமி, மிகுந்த ஆர்வத்துடன் இப் பணியில் ஈடுபட்டார்.

இராமாயண எதிர்ப்புக்குப் பக்க பலமாக, திருவாரூர் கே. தங்கராசு வால்மீகி ராமாயணக் கதையைப் பின்பற்றி எழுதிய இராமாயண நாடகத்தைத் தமிழ்நாடெங்கும் எம். ஆர். ராதா, நடத்தினார்.

1955 ஆகஸ்ட்டு முதல் தேதியன்று, கட்டாய இந்தித் திணிப்பை எதிர்த்துத் தேசியக்கொடி எரிப்புப் போராட்டம் நடத்துவதற்கு அறிவிப்புச் செய்தார் பெரியார்.

போராட்டத்திற்கான காரணத்தை விளக்கி குத்தூசியார் எழுதியதன் சாரம்:—

> "பயிற்சி மொழி அவரவரது தாய் மொழியில் இருப்பதுதான் உண்மையான கல்வித் திட்டத்தின் அடிப் படையாகும் என்றாலும், அப் பயிற்சி மொழியைக்கூட ஒருவன் மீது வலுக்கட்டாயமாகச் சுமத்தக்கூடாது.
>
> "அப்போதுதான், ஏழை எளியவர்கள் உட்பட

எல்லோரும் கல்வியைப் பெற முடியும். அந்நிய மொழியைப் பயிற்சி மொழியாக ஆக்கியதால்தான், இந்த நாட்டில் பணக்காரர்களும், மேல் சாதிக்காரர்களும் மட்டுமே கல்வி கற்க முடிந்தது. மீண்டும் அது தொடராமல் இருக்க வேண்டுமானால் இந்தித் திணிப்பை அவசியம் எதிர்தே ஆகவேண்டும்.''

பெரியாரின் கொடி எரிப்புப் போராட்டத்தைப் பற்றி அறிந்த இந்தியப் பேரரசு அலறியது. மத்திய-மாநில அரசுகளின் சார்பில்' தேர்வுக்குரிய பாடமாக— இந்தி இனி இராது என காமராசர் உறுதி அளித்ததின் பேரில் கொடி எரிப்புப் போராட்டம் ஒத்தி வைக்கப்பட்டது.

1956 ஆகஸ்ட் முதல் நாள் 'இராமன் பட எரிப்பு'ப் போராட்டம் நடைபெற்றது.

முன்கூட்டியே அய்யாவும், ஆசிரியரும் கைது செய்யப்பட்டனர் எனினும், திராவிடர் கழகத்தின் ஏனைய தலைவர்களும் தொண்டர் களுமாகப் பல்லாயிரக்கணக்கில் போராட்டத்தில் கலந்து கொண்டார்கள். சுமார் இருபதினாயிரம் இராமர் படங்கள் வரை தமிழ் நாடெங்கிலும் கொளுத்தித் தீக்கிரையாக்கப்பட்டன.

இப் போராட்டம் நடைபெற்ற சில மாதங்களுக்குப் பின்னர், குருசாமி, சிதம்பரம் பொதுக் கூட்டத்தில் 'இராமன் படஎரிப்பு'க் கிளர்ச்சி ஏன்?'' என்பது பற்றி விளக்கிப் பேசினார்.

பேச்சின் இறுதியில் தானே இராமன் படத்துக்குத் தீயிட்டு எரித்தார். அதன் காரணமாக சிதம்பரம் கோர்ட்டில் வழக்குத் தொடரப்பட்டு, அய்ந்து நாள் சிறைத் தண்டனையும் பெற்றார். மீண்டும் சில மாதங்களுக்குப் பிறகு ஒரு முறை அதே ஊரில் மீண்டும் அதே இடத்தில் இராமன் படத்துக்குத் தீயிட்டதினால் மீண்டும் அய்ந்து நாட்கள் சிறைத் தண்டனை பெற்றார்.

மதச் சார்பற்ற அரசில்—ஒரு வகுப்பார் மட்டிலும் உயர்ந் தோர் என்பதைக் காட்டுவதன் அடையாளமாக 'பிராமணாள் காபி, சாப்பாடு ஓட்டல்' என்ற பெயரில் தொழில் நடத்துவதை பெரியார் கண்டித்தார்.

போராட்டத்திற்கு ஆதரவாக குருசாமி 'விடுதலை'யில்

இவ்வாறு எழுதினார்:

"பார்ப்பான் எங்கே தவறிப் போய் 'சூத்திரன்' கடையில் சாப்பிட்டு விடுவானோ என்று எண்ணி, "பிராமணாள்! இங்கே இருக்கிறேன் வா!" என்று சமிக்ஞை காட்டுவதுதானே 'பிராமணாள் ஓட்டல்' என்பதன் பொருள்?"

"எந்தப் பார்ப்பானாவது மற்ற இனத்தவன் கடையில் பச்சைத் தண்ணீராவது குடித்திருக்கிறானா? அல்லது குடிக்கத்தான் விரும்புவானா? மானமுள்ள தமிழா, சிந்தித்துப் பார்! உன் கைபட்டாலே தீட்டு என்றல்லவா—நினைக்கிறான்? அப்படியிருந்தும் அவன் கடையை நோக்கி மோப்பம் பிடித்துச் செல்கிறாயே, இது எவ்வளவு பெரிய அவமானம்!"

"ஆகவே, கழகத் தோழர்களே! இப்படிப்பட்ட பார்ப்பனர்களின் ஓட்டலுக்குச் செல்லாதீர்கள். பெரியார் காட்டுகின்ற பாதையிலே சென்று, 'பிராமணாள்' எழுத்துகளைத் தார் கொண்டு அழிக்கப் புறப்படுங்கள்"—

1957 மே மாதம் குருசாமி—எம்.கே.டி. சுப்பிரமணியம், டி.எம். சண்முகம், மயிலை லோகநாதன் முதலியவர்களுடன் ஆயிரக்கணக்கான தொண்டர்களும் புடைசூழ தலைமை ஏற்று, சென்னையிலுள்ள உணவு விடுதி ஒன்றின் 'பிராமணாள்' பெயர்ப் பலகையை அழிக்கச் சென்றார். பெயர்ப் பலகையை அழிப்பதற்கு முன்பே கைது செய்யப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டார். ஏனைய தோழர்களும் கைது செய்யப்பட்டுச் சிறையிலடைக்கப்பட்டனர்.

உணவு விடுதியின் உரிமையாளர், மறியல் செய்யச் சென்ற தோழர்களின்மேல் காய்ச்சிய எண்ணெயை ஊற்றச் செய்தார்; மிளகாய்ப் பொடியையும் தூவச்செய்தார். இப்படிப்பட்ட கோரச் செயல்களுக்குப் பின்னும் திராவிடர் கழகத்தினர் ஒரு சிறு துளியும் கண்ணியம் குறையாமல், கடமை தவறாமல், கட்டுப்பாட்டுடன் பல நாட்கள் தொடர்ந்து மறியல் செய்த வண்ணமிருந்தனர். மக்கள் ஆதரவும் பெருகியது. இறுதியில் திராவிடர்கழகத்தவர் வெற்றி பெற்றனர்.

மறியலின் காரணமாக, உணவு விடுதியின் வியாபாரம் வெகுவாகப் பாதிக்கப்பட்டது. இதனை அறிந்த உணவு விடுதி உரிமையாளர் திராவிடர் கழகப் பொதுச் செயலாளர் குருசாமியிடம் சென்று மன்னிப்புக் கோரினார்.

"என்னிடத்தில் மன்னிப்புக் கேட்டால் போதாது; என் தலைவரிடம் சென்று மன்னிப்புக் கேள்" என்று குருசாமி கூறி விட்டார்.

ஒரு கூடைப் பழத்தோடும், ஒரு பெரிய ரோசா மாலையோடும் சென்னை மீரான் சாகிப் தெரு இல்லம் சென்று, பெரியாரைக் கண்டு,பழக்கூடையை அருகில் வைத்துவிட்டு பெரியார் கழுத்தில் மாலையைப் போட்டு, காலிலேயும் விழுந்து வணங்கி மன்னிப்புக் கேட்டார், அந்த உணவு விடுதி உரிமையாளர்.

'பார்ப்பனர்' காலில் 'சூத்திரர்' விழுந்த காலத்தை மாற்றி, 'சூத்திரன் என்றால் ஆத்திரம் கொண்டு அடி' என்று சொன்ன பெரியாரின் காலில் ஒரு பார்ப்பனரை விழச் செய்தவர் குத்தூசி குருசாமியே ஆவார்!

ஆனால் இச்செய்தியைப் பத்திரிகைகள் வெளியிடவில்லை.

1956-ம் ஆண்டு திருச்சி கலெக்டர் ஆர். எஸ். மலையப்பனைப் பற்றிய வழக்கு ஒன்றில், அவருக்கெதிராக இரு நீதிபதிகள் அளித்த தீர்ப்பு வஞ்சனையானது என்று பெரியார் கருதினார். 4-11-1956-ல் திருச்சியில் நடந்த திராவிடர் கழகக் கூட்டமொன்றில் இச் செயலைக் கண்டித்துப் பேசினார்.

### பேச்சில் ஒரு சிறு பகுதி

"இரண்டு அய்யங்கார் நீதிபதிகள் ஒரு தமிழர் கலெக்டரைப் பற்றி எல்லை மீறிய கடுஞ்சொற்களடங்கிய தீர்ப்பை வெளியிட்டிருக்கின்றனர். மற்றொரு அய்யங்கார்-அட்வேகேட் ஜெனரல், கலெக்டர் சார்பில் வாதாட வேண்டிய கடமையைச் செய்யத் தவறிவிட்டார். இன்னொரு அய்யங்கார் ஏடு ("இந்து") இத் தீர்ப்பை ஆதரித்துக் குதூகலப் பட்டிருக்கிறது. இது ஆரியர்-தமிழர் உணர்ச்சியை அடிப்படையாகக் கொண்டதே தவிர,

நீதியையோ, சட்டத்தையோ, நிர்வாகத்தையோ அடிப் படையாகக் கொண்ட பிரச்சினையில்லை.''

''உயர்நீதி மன்றத்தீர்ப்புகளைப் பற்றிப் பொதுமக்கள் கருத்துத்தெரிவிக்க உரிமை இருக்கவேண்டும். கோர்ட்டை அவமதிப்பதானாலும் பரவாயில்லை.''

பெரியார்பேச்சின் தொடர்பாக குருசாமி 6-11-1956 'விடுதலை' நாளிதழில் 'கோர்ட்டை அவமதிப்பதல்ல' என்று தலைப்பிட்டு ஒரு தலையங்கம் தீட்டினார். இத் தலையங்கத்தை ஆதாரமாக எடுத்துக் காட்டி, ''பெரியார் கோர்ட்டை அவமதித்தார்'' என்று ஒரு வழக்கை அரசு தொடர்ந்தது. இதன் தொடர்பாக பெரியார் அளித்த 'ஸ்டேட்மெண்டு' பெரியாரின் வரலாற்றில் பொன் னெழுத்துகளால் பொறிக்கத் தக்கதாகும்.

பெரியார் மீது வழக்கு தொடர்வதற்கு ஆதாரமாக அமைந்த குருசாமி எழுதிய தலையங்கத்தின் ஒரு பகுதி:

''......தமிழ் நாட்டுப் பெரியார் சாதாரணமாகச் சீற்றங்கொள்வதில்லை. இந்தியாவிலேயே இன்று சட்டத்துக்கும் அமைதிக்கும் மரியாதை தருகின்ற ஒரே தலைவர் பெரியார் ஈ.வெ.ரா. அவர்கள்தான்.

இப்பேர்ப்பட்ட உயர்ந்த கொள்கையைக் கொண்ட பெரியார், இன்றையச் சமுதாயக் கொடுமைகள் சில வற்றைக் கண்டு 'சீறுகின்றார்' என்றால் ஆட்சியாளர் அலட்சியப் படுத்த முடியாது.

''......உயர்நீதி மன்றத் தீர்ப்புகளைப் பற்றிப் பொது மக்கள் கருத்துத் தெரிவிப்பது, கோர்ட்டை அவ மானப்படுத்துவதாகும் *(Contempt of Court)* என்ற பூச்சாண்டியை இனியாவது அம்பலப்படுத்த வேண்டும். உயர்நீதி மன்றத்து நீதிபதிகளும் மனிதப் பிறவிகளா தாலால், ஆசாபாசங்களுக்கும், சமுதாய உணர்ச்சி களுக்கும் தவறுகளுக்கும் கட்டுப்பட்டவர்கள். இவர்களை நியமிக்கின்ற இந்தியத் தலைவரையும், அவருக்கு அடுத்த படியாக உள்ள இந்திய முதலமைச்சரையும் கண்டிக்கவும், கொடும்பாவி கட்டிக் கொளுத்தவும், இவர்கள்

எல்லோருக்கும் மேம்பட்டதாகக் கூறப்படுகின்ற இந்திய அரசியல் சட்டம் என்பதையும், அதற்கு மேம்பட்டதாகக் கூறப்படுகின்ற "தேசியக் கொடி" என்பதையுமே கிழித்துப் போட்டுத் தீ வைக்கவும், ஜனநாயக சமூகத்தில் உரிமை யிருக்கும் போது, சாதாரண சர்க்கார் உத்தியோகஸ்தர் களில் ஒருவரான நீதிபதியின் தீர்ப்பைத் தவறு என்று கண்டிப்பதற்கு மக்களுக்கு உரிமை இருக்க வேண் டாமா?"......

1957, ஆகஸ்ட்டு முதல் தேதி காலை 10 மணி அளவில் 'சாதி ஒழிப்புக் கிளர்ச்சி' நிதிக்காக சென்னை கொத்தவால் சாவடியில் உண்டியல் வசூலுக்குச் சென்றபோது, காரணமின்றி குருசாமி கைது செய்யப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டார். பதினைந்து நாட்களுக்குப் பிறகு சிறையினின்றும் விடுவிக்கப்பட்டார்.

1957 நவம்பர் 3-ல் தஞ்சை அரண்மனைத் திடலில் ஒரு மாபெரும் திராவிடர் கழக மாநாடு நடைபெற்றது. கழக சரித்திரம் காணாத வகையில் நடைபெற்ற இம் மாநாட்டின் ஊர்வலம் குருசாமியின் தலைமையில் நடைபெற்றது.

மாநாட்டில் பெரியாருக்கு 'எடைக்கு எடை' வெள்ளிப் பணம் பரிசளிக்கப்பட்டது. அகில இந்தியாவிலுள்ள பல்வேறு நிறுவனத் தினரும் அமெரிக்கர் சிலரும் வந்திருந்து செய்தி திரட்டினர்.

அரசுக்குச் சாதி ஒழிப்பின் அவசியத்தை உணர்த்தும் பொருட்டு ஒரு போராட்டம் நடத்தி, அதில் 'இந்தியச்சட்டத்தைக் *(Indian Constitution)*' கொளுத்த வேண்டும் என்னும் தீர்மானத்தைக் கொண்டுவந்து குருசாமி நிறைவேற்றினார்.

இத் தீர்மானத்தின்படி 26-11-1957-ல் தமிழ் நாடெங்கும் "இந்திய அரசியல் சட்டம்" கொளுத்தப்பட்டது.

சென்னையில் பல்லாயிரக் கணக்கானவர் பின் தொடர, குருசாமி தலைமை ஏற்று, இந்திய அரசியல் சட்டத்தைக் கொளுத் தினார். இதற்குப் பரிசாக 9 மாதம் சிறைவாசம் பெற்றார்.

போராட்டத்தில் கலந்து கொண்ட 4000-க்கும் மேற்பட்ட தோழர்கள் ஓராண்டு முதல் ஒன்றரை ஆண்டு வரை நாடெங்கிலும் தண்டிக்கப்பட்டார்கள்.

இதே ஆண்டில் கரூர், பசுபதி கோயில், குளித்தலை, திருச்சி ஆகிய ஊர்களில் நடந்த பொதுக் கூட்டத்தில் "பார்ப்பனர்களைக் குத்தச் சொன்னார்; வெட்டச் சொன்னார்" என்று பேசியதாகப் போடப்பட்ட பொய் வழக்கிலும் உயர்நீதிமன்ற அவதூறு வழக்கிலும் 18 மாதங்கள் தண்டிக்கப்பட்ட தந்தை பெரியாரும், குருசாமி இருந்த சென்னை மத்திய சிறைக்கே கொண்டு வரப்பட்டார். அய்யாவும் ஆசிரியரும் அடுத்தடுத்திருந்த அறையில் வைக்கப்பட்டனர்.

## குத்தூசியாரின் மரண சாசனம்

1959-ல் திராவிடர் கழகத்தில் பெருஞ் செல்வாக்குப் பெற்றிருந்த குருசாமியின்மீது ஒரு சிலருக்கு மனத்தாங்கல் ஏற்பட்டது. செல்வாக்கோடு இருக்கின்ற ஓர் இயக்கத்தில், பொது மக்கள் ஆதரவோடு விளங்குகின்ற தலைவர்கள்மீது சிலருக்குப் பொறாமை ஏற்படுவது இயல்புதான்,

இம் முறையில் குருசாமியின் மீது சில பிரமுகர்கள் எரிச்சல் கொண்டு, அவதூறுகளைக் கிளப்பிவிட்டனர்; அவரது பெருமையைக் குலைத்துச் சிறுமைப்படுத்த முயன்றனர்.

இதனாலெல்லாம் குருசாமி மனம் உடைந்து போய்விடவில்லை ; மாறாக, நேர்மையற்றோர் உருவாக்கிவிட்ட இந் நிலைகளுக்காக மனம் வருந்தினார்.

புகழுக்கும் பெருமைக்கும் பதவிக்கும் ஆசைப்படாத தம் நிலையைப் பொது மக்களும், இயக்கத்தவர்களும் உணர வேண்டும் என்னும் விருப்பத்துடன், 'மரணக் குறிப்பு' என்னும் தலைப்பில் 'விடுதலை' இதழில் குத்தூசிக் கட்டுரை ஒன்று எழுதினார்.

இறப்பதற்குச் சுமார் 6 ஆண்டுகளுக்கு முன்னதாகவே எழுதப் பட்ட இக் கட்டுரையில் தன்னைப் பற்றித் தானே இவ்விதம் எழுதியுள்ளார்.

இதிலிருந்து, வாழ்நாளெல்லாம் இயக்கத்திற் கென்றே, எவ்வித பலனையும் அடையாமல், மெய் மறந்து உழைத்த குருசாமி எந்த அளவுக்கு மனம் நொந்து போயிருந்தார் என்பதனைப் புரிந்து கொள்ளலாம்.

## மரணக் குறிப்பு
## Obituary

"இந்த ஆள் பிறந்த நாள் 1906-ம் ஆண்டு ஏப்ரல் 23-ம் தேதி மறைந்த நாள், 1969-ம் ஆண்டு ஏப்ரல் 10-ம் தேதி. அதாவது, 12 நாள் குறைய 63 ஆண்டுகள் வாழ்ந்திருக்கிறான்.

இந்த மரணக் குறிப்புக் கல்லை இங்கு நாங்கள் நாட்டியிருப்பதன் நோக்கம், இந்த ஆளை நாங்கள் மதிக்கிறோம் என்பது அல்ல. இந்த ஆள் ஒரு அபாய அறிவிப்பு. இந்த ஆளைப் போல் யாரும் முட்டாளாக வாழக்கூடாது என்பதைத் தமிழர்களுக்கு எடுத்துக் காட்டவே யாகும்.

இவன் வாழத் தெரியாத பழங்காலப் பட்டதாரி! சிலர் இவனை 'அறிவாளி' என்று கூறலாம்! ஆனால், உலகமறிந்த பெரும்பாலோர் 'ஏமாளி' என்றே கூறுகின்றனர். மாதம் ஆயிரம் ரூபாய்க்குமேல் சம்பளம் வரக்கூடிய இந்திய சர்க்கார் பணியை உதறிவிட்டு வந்தான். எத்தனையோ கோடீஸ்வரர்களை நத்திப் பிழைக்கும் திறமையிருந்தும் அந்த நல்ல வழியையும் புறக்கணித்த முட்டாள்! துறவிக் கோலம் பூண்டிருந்தாலும் இவனை மன்னிப்பார்கள், உலகத்தார்! இல்லறத்தை யல்லவா ஏற்றிருந்தான் இவன்? உற்றார் உறவினரையும் பகைத்துக் கொண்டான், தன் திருமணத்தின் மூலமாக. சொந்தத்திலும் சொத்தில்லை; திருமணத்திலும் சொத்துச் சேரவில்லை. ஆகவே, ஏழையாகவே பிறந்து, ஏதோ சிறிது சேர்த்து, இரு குழந்தைகளைப் படிக்க வைத்து, ஏழையர்க்கு உதவி, இறுதியில் ஏழையாகவே மடிந்து, இங்கே எங்கள் சொந்தச் செலவில் இன்று புதைக்கப்பட்டிருக்கிறான்.

"இவனை நேர்மை வழியில் நடக்கச் சொன்னது யார்? யதார்த்த வாதியாயிருந்தான்; எனவே, வெகுஜன

விரோதியாகவே மாண்டான். தன்னைப் போலவே பிறரும் இருக்க வேண்டும் என்ற பகற்கனவு கண்டான். ஏமாந்தான் !

“வாழ்க்கைத் தோல்விக்கு இவன் ஒரு சிறந்த எடுத்துக்காட்டு ! காக்காய் பிடிக்கத் தெரியாத மண்டு களில் முதல் நம்பர் ஆள் ! ஆனாலும், இவனுக்கு எதிலும் மரணத் துணிச்சலுண்டு என்று சிலர் புகழ்ந்து கூறலாம். உலகப் போக்கை அறியாத பன்னாடைகளின் கூற்றல் லவா இது ? குறையுடைய தோழர்களையெல்லாம் எதிர்த்தே தீரவேண்டும் - கண்டித்தே ஆகவேண்டும் என்றால் இவன் மனித இனத்திலேயே பிறந்திருக்கக் கூடாதே ! விலங்கினத்தில் அல்லவோ பிறந்திருக்க வேண்டும் ? இவனிடத்தில் மட்டும் குறையே யில்லையா ? குற்றமில்லையா ? இவற்றைப் பிறர் சகித்துக் கொள்வ தில்லையா ? அப்படித்தானே இவனும் நடந்திருக்க வேண்டும் ?”

“பணத்துக்கோ, புகழுக்கோ, பதவிக்கோ ஆசைப் படுவதில்லை என்பதே இவனது பிற்போக்குக்கும் மடமைக்கும் ஓர் எடுத்துக் காட்டல்லவா ? காட்டிலுள்ள பறவை - விலங்குகளுக்குக் கூடத்தான் இவற்றில் ஆசை யில்லை ! இவனை அவற்றிற்குத்தானே ஒப்பிட வேண்டும் ?”

“எல்லாம் நன்மைக்கே” என்ற இவனது மூலமந்திரம் இவனை ஏமாளியாகவும் கோமாளியாகவும் ஆக்கி விட்டது ! “இவன் சென்ற பாதை, கற்களும் முட்களும் நிறைந்த காட்டுப் பாதை.” இதில் எவரும் செல்லக் கூடாது என்று எச்சரிப்பதற்காகவே, எங்கள் செலவில் இந்த மரணக் குறிப்புக் கல்லை நாட்டியிருக்கின்றோம்.

“இவன் ஒரு கொள்கைக் குரங்கு ! விடாப் பிடியாய்ப் பிடித்து வீணாய்ப் போனவன் ! மனித வாழ்க்கையில் ரப்பர்க் கொள்கைதான் வெற்றி பெறும்; கருங்கல் கொள்கை (மீறிய பளுவினால் பிளந்து முறிவது) கடைத்

தேற வைக்காது.

"ரப்பராய் இல்லாமல் பாப்பராய் மாண்டு மறைந்தான். எல்லாம் துறந்து நாடோடியாக ஆகி, அநாதைப் பிண மாகக் கிடந்தான். இவனால் முன்னுக்கு வந்தவர் ஆயிரக்கணக்கிலிருக்கலாம். ஆனால், அவர்கள் இவனை இறுதிக் காலத்தில் கால் நூசிக்கு மதித்தார்களா ?

"அதைப்பற்றி எனக்குக் கவலையில்லை, நான் எவ் வாறு வாழ்ந்தேன் ? என் வாழ்க்கையில் இன்பங் கண் டேனா, இல்லையா ? மனம்தானே இன்பத்தின் ஊற்று? பதவியையும், பணத்தையும், புகழையும், வைத்துத் தானா மனித வாழ்க்கையை அளக்க வேண்டும் ?"

— என்று இவன் அடிக்கடி மனோதத்துவம் பேசி யிருக்கலாம்.

"வாழ்க்கையில் தோல்வியுற்ற யாவரும், பேசிய வரண்ட தத்துவந்தானே இது?"

'பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை,' என்ற ஆன்றோர் வாக்கு மட்டுமல்ல; "பதவியிலார்க்கு உதவி யில்லை' என்ற இன்றைய வாக்கையும் உணராத இவனை "அறிவாளி' என்று நாங்கள் ஒப்பமாட்டோம்; மின்சாரக் கம்பியை இறுக்கிப் பிடித்து மாண்ட மூடக் குரங்கு என்றே கூறுவோம்."

"இந்த இடத்தில் புதைக்கப்பட்டுள்ள, விலாசந் தெரியாமல் மடிந்து போன இவனை இன்றே மறந்து விட்டு, எல்லோரும் வாழ்க்கை வெற்றிப் பாதையில் செல்லுங்கள்! இந்தக் கல் ஒரு அபாய அறிவிப்பு! இதன் அடியில் இருப்பவனும் அவ்வாறே.

இப்படிக்கு

**இவனை ஒருககால் மதித்தவர்கள்**

10—4 —1969

("விடுதலை"—5-2-1959)

குத்தூசியார் இவ்விதம் எழுதினாலும், தொடர்ந்து வழக்கம் போல் இயக்கப் பணியாற்றினார்.

## அகில இந்திய நாத்திகர் மாநாடு

1959-ம் ஆண்டில் சென்னை கோகலே மண்டபத்தில் அகில இந்திய நாத்திகர் மாநாடு இரண்டு நாட்கள் நடைபெற்றது. இந்த மாநாட்டை எஸ். இராமநாதன் முன்னின்று நடத்தினார். வடநாட்டிலிருந்தும் வேறு பகுதிகளிலிருந்தும் பல நாத்திகத் தலைவர்கள் மாநாட்டில் கலந்துகொண்டனர். வடநாட்டிலிருந்து வந்திருந்த நாத்திகத் தலைவர்களில் ஒரு சிலர் 'பூணூல்' அணிந்திருந்தனர்.

'பூணூல்' அணிவது நாத்திகக் கருத்துக்குப் புறம்பானது என்பதை அவர்கள் அறியாமலேயே நாத்திகராக இருந்தனர்.

'பூணூல்' அணிவதன் உட்கருத்தை அவர்களுடன் மாநாட்டு மேடையிலேயே குருசாமியும், குஞ்சிதம் குருசாமியும் பலவித மேற்கோள்களை எடுத்துக் காட்டி, பூணூல் அணிவதன் நோக்கம் இதுதான் என்றும் புரிய வைத்தனர்.

தொடர்ந்து குருசாமி மாநாட்டில் பேசும்போது காந்தியார், பராஞ்சிபை முதலியவர்கள் பூணூலை அறுத்து எறிந்த கதைகளை எடுத்துச் சொன்னார். காந்தியார், 'நான் ஏன் பூணூல் அணியவில்லை' என்று கூறிய காரணத்தை அவரது சுயசரிதையான 'சத்தியசோதனை'யிலிருந்து எடுத்துப் படித்துக் காண்பித்தார், குருசாமி.

"இந்து தர்மத்தில் நம்பிக்கையுள்ள நீங்கள் உச்சியில் குடுமியில்லாமலும் பூணூல் இல்லாமலும் இருப்பதைக் காண என் மனம் வேதனைப்படுகிறது. இவ்விரண்டும் இந்து தர்மத்தின் புறச் சின்னங்கள்; இவை இருந்தாக வேண்டும். அப்படிப்பட்ட சின்னங்கள் உங்களிடத்திம் இல்லையே, ஏன்?' என்று ரிஷிகேசத்தில் ஒரு துறவி என்னைக் கேட்டார். அதற்கு நான் சொன்ன பதில் இதுதான்:

"நான் பத்து வயதுச் சிறுவனாக இருந்தபோது பார்ப்பனச் சிறுவர்கள்—தாங்கள் அணிந்திருந்த பூணூலில் சாவிக் கொத்துகளைக் கோர்த்துத் தொங்கவிட்டுக் கொண்டிருப்பதைப்

பார்த்து நான் பொறாமைப்படுவதுண்டு. நானும் அப்படிச் செய்யவேண்டுமென்று ஆசைப்பட்டேன். கத்தியவாரிலிருக்கும் வைசிய குடும்பத்தினர் அக் காலத்தில் சாதாரணமாகப் பூணூல் அணிந்துகொள்வதில்லை. ஆனால், முதல் மூன்று வர்ணத்தாரும் பூணூல் அணியவேண்டியது அவசியம் என்று வற்புறுத்தும் இயக்கம் ஒன்று அப்போதுதான் ஆரம்பமாயிருந்தது. இதன் காரணமாக காந்தி ஜாதியைச் சேர்ந்த பலர் பூணூல் போட்டுக் கொண்டனர். எங்களில் இரண்டு மூன்று சிறுவர்களுக்கு 'ராமரட்சை' கற்பித்துக் கொண்டிருந்த பார்ப்பனர் எங்களுக்கும் பூணூல் போட்டுவிட்டார். நான் சாவிக் கொத்தை அதில் மாட்டிக்கொள்ள வாய்ப்புக் கிடைக்காவிட்டாலும் ஏதோ ஒரு சாவிக் கொத்தைக் கண்டு பிடித்து, என் பூணூலில் மாட்டிக் கொண்டேன். பிறகு, பூணூல் அறுந்துபோய்விட்டது. 'அது போய்விட்டதே! என்று அப்போது நான் வருத்தப்பட்டேனா?' என்பது எனக்கு இன்று நினைவில் இல்லை. ஆனால், அதற்குப் பிறகு புதியதாகப் பூணூலைத் தேடி அணிந்து கொள்ளவில்லையென்பதை மட்டும் அறிவேன்.

''நான் பெரியவனாகிவிட்ட பிறகு இந்தியாவிலும், தென்னாப்பிரிக்காவிலும், பலர் நல்ல எண்ணத்தின் பெயரிலேயே என்னைப் பூணூல் அணியும்படி செய்ய முயன்றனர். ஆனால், அவர்கள் முயற்சி வெற்றியடையவில்லை. சூத்திரர்கள் பூணூல் அணியக்கூடாது என்றால் மற்ற வர்ணத்தாருக்கு மட்டும் அதை அணிந்து கொள்வதற்கு என்ன உரிமையிருக்கிறது என்று அவர்களுடன் வாதாடினேன். பூணூல் அணிந்துகொள்வது தேவையற்ற பழக்கம் என்பது என் கருத்து. ஆதலால், அதை அணிய வேண்டுமென்பதற்குப் போதிய காரணம் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. நியாயம் எனக்குத் தென்படவில்லை.

''கணக்கற்ற இந்துக்கள் பூணூல் அணியாமலேயே இந்துக்களாக இருந்து வரமுடிகிறது. ஆதலால், அதை அணிந்து கொள்ளப்போவதில்லை.''

இதைப் படித்தபின் குருசாமி தொடர்ந்து, மற்ற மாநிலப் பகுதிக்காரர்களும் மாநாட்டில் கலந்து கொண்டிருப்பதனால் ஆங்கிலத்திலும், தமிழிலுமாகப் பேசி விளக்கினார்.

குருசாமியின் பேச்சைக் கேட்ட வடக்கத்திய நாத்திக நண்பர்கள் அவர்கள் அணிந்திருந்த பூணூலை மேடையிலேயே அறுத்தெறிந்ததுடன், தங்களது அறியாமைக்காக மிகவும் வருந்தினர்.

## வழக்குகளும், சிறைவாசமும்

இதே ஆண்டில் நடைபெற்ற சுதந்திரத் தமிழ்நாடு போராட்டத்தில், இந்திய யூனியன் படத்தை எரித்து, குருசாமி இரண்டு நாட்கள் சிறைத் தண்டனை பெற்றுச் சிறை சென்றார்.

நாகைப்பட்டினத்தில் 1960-ம் ஆண்டு ஜூன் மாதத்தில் நடந்த திராவிடர் கழகக் கூட்டத்தில் பேசிய குருசாமி "இந்தி ஆதிக்கத்தை எதிர்ப்பதற்கு அடையாளமாக, 'இந்திப் பண்டிதர்கள்' பள்ளி செல்லும்போது, அவர்கள் செல்லாதவாறு அவர்கள் முன்னின்று கழகத் தோழர்கள் மறியல் செய்யவேண்டும்; அதையும் மீறி அவர்கள் செல்வார்களேயானால் அவர்களைக் காலைக் கட்டிப் பிடித்தாவது நிறுத்தவேண்டும்; காலைக் கட்டிப்பிடிக்கின்ற சமயத்தில்—தவறாக 'இந்திப் பண்டிதரின்' கழுத்தைப் பிடித்து விடாதீர்கள்" என்று நகைச் சுவையாகப் பேசினார்.

1960 ஜூலை 25-ல் திருவையாற்றில் பேசிய ஒரு கூட்டத்தில், "ஆண்டாண்டு காலமாக – செம்பாலோ, வெண்கலத்தாலோ ஆன ஏதோ ஒரு சிறு பொம்மையைக் 'கடவுள்' என்று பெயரிட்டு, பல டன்கள் எடையுள்ள ஒரு மிருக சாதி, அல்லது பறவை சாதி உருவத்தாலான வேறொரு பொம்மை மீது வைத்து, அதுவும் போதாது என்று 'அர்ச்சகன்' என்ற பெயரால் ஒரு தடியனையும் கூட வைத்து, பாட்டாளித் தோழர்கள்-பாமரத் தோழர்கள் இந்த விஞ்ஞான அறிவு பெற்றிருக்கின்ற காலத்தில்கூட தூக்கிச் செல்லுகின்றனரே" என்று சொல்லி மக்களின் காட்டு மிராண்டிக் காலத்துச் செயலைக் கண்டித்தார். மேலும், தொடர்ந்து பேசுகையில் இவ்வாறு குறிப்பிட்டார்:

> "மனிதன் மனிதனைச் சுமப்பது அநீதி. மோட்டார் வாகனம் வந்திருக்கின்ற இந்த நாளில் வாகனத்தையும், 'சாமியையும்'—ஒரு லாரியில் வைத்து ஓட்டிச் செல்லலாம்,

பக்தர்களுக்குச் சுண்டைக்காய் அளவாவது புத்தியிருந்தால். பாட்டாளித் தோழர்கள், அர்ச்சகரையும் வாகனத்தையும் என்றாவது ஒரு நாள் காவிரியாற்றுப் பாலத்தின் மேலே போகும்போது, தோள்பட்டை வலிபொறுக்கவில்லையே என்று காரணம் காட்டி, தவறுதலாக நடந்தது போல், காவிரியாற்றுக்குள் போட்டாலொழிய இதற்கொரு முடிவு காண முடியாது.''

''......தோழன் தூக்குவது கடவுள் அல்ல. அப்படியொன்றும் இல்லை. அது வெறும் சிலை. அதனால் தண்டிக்க முடியாது. அப்படியொரு சக்தி அதற்கு இருந்தால் தன் படைப்பான மனிதன் தோளை உப்ப வைத்து உல்லாசப் படாது. ஆதலால், வாகனத்தின் மீதுள்ள 'சாமியை'ப்பற்றித் தோழர்கள் கவலைப்பட வேண்டியதில்லை. அது எதுவும் செய்யாது, என்பதற்கு நானே பொறுப்பாளி. மற்றபடி, 'உருவமில்லாத, எங்கும் பிரகாசமாயுள்ள கடவுள் கோபிப்பாரா?'—என்பது எனக்குத் தெரியாது. அவரைக் கேட்டுத்தான் சொல்ல வேண்டும். ஆனால், ஒன்று நிச்சயம். தைரியமுள்ளவனுக்கு என்றும் வெற்றிதான். கோழைக்குத்தான் தோல்வி. எதிர்ப்பு என்னும் சாணையில் தீட்டப்படுகிறவனே வீரன். வீரன் பழமைக்கு அஞ்சமாட்டான். புரட்சியே செய்வான். பல வீரர்கள் பலியானதன் பயன் தான் இன்றைய மனித வாழ்க்கை.''

இச் சொற்பொழிவுகளைக் காரணமாகக் காட்டி காங்கிரசு அரசு, குருசாமி, நாகையில் இந்தி ஆசிரியரைக் கல்லால் அடிக்கத் தூண்டினார் என்றும், திருவையாற்றில் அர்ச்சகனையும் வாகனத்தையும் காவிரி ஆற்றில் போடச் சொன்னார் என்றும் குற்றஞ் சாட்டி, இ.பி.கோ. 117, 295, 323, 304, 326—ஆகிய பிரிவுகளின் கீழ் வழக்குத் தொடர்ந்தது. வழக்குகள் முறையே திருவாரூர், திருவையாறு நீதிமன்றங்களில் நடைபெற்றன.

இச் சமயம், மாநகராட்சிப் பள்ளிகளின் சூப்பர்வைசராக இருந்த குஞ்சிதம் குருசாமி உயர் கல்வி அதிகாரியாக (லேடி

சூப்பரின்டென்டென்ட்) பதவி உயர்வு பெற்றார். இந்தியா விலேயே ஒரு பெண்மணி இத்தகைய பதவிக்கு வந்தது இதுவே முதல் தடவை.

மாநகராட்சியில் இப் பதவி காலியான சமயம், மாநகராட்சி திராவிட முன்னேற்றக் கழகத்தின் ஆட்சிப் பொறுப்பிலிருந்தது.

இக் காலத்தில் குருசாமி தி.மு.க.வை மிகக் கடுமையாக விமர்சித்துக் கொண்டிருந்தார். அதைப் பொருட்படுத்தாது பெருந் தன்மையோடு அண்ணா "குஞ்சிதம் குருசாமி அவர்களே அப் பதவிக்கு முற்றிலும் தகுதி உடையவர்; அப் பதவியை அம்மையாருக்கே கொடுக்க வேண்டும்" என்று தம்முடைய கழகத்தவர்களுக்கு ஆணையிட்டார். அதன் பிறகே, தி.மு.க. ஏகமனதாக முன்மொழிய, காங்கிரசு வழிமொழிய, குஞ்சிதம் குருசாமிக்கு அப் பதவி கிடைத்தது.

அம்மையாருக்கு இப் பதவி கிடைத்த சில மாதங்களுக்குப் பின், குத்தூசியாரின் பேரில் நாகை, திருவையாறு வழக்குகளும் நடை பெற்றுக் கொண்டிருக்கும்போது, குஞ்சிதம் அம்மையாருக்குப் பெரும் அறுவைச் சிகிச்சை ஒன்று நடந்தது. மிக்க உடல் நலிவு அடைந்திருந்த அம்மையாரின் அருகில் இருந்து, உடல் நலத்தைக் கவனிக்க முடியாதபடி, வழக்கின் காரணமாகச் சென்னைக்கும், திருவாரூருக்கும், திருவையாறுக்குமாக அலைந்து கொண்டிருந்தார் குருசாமி.

1960-ம் ஆண்டு நவம்பர் ஏழாம் நாள் குருசாமியின் மேற் குறிப்பிட்ட சொற்பொழிவுகளுக்காகத் திருவாரூர் நீதிமன்றத்தில் மூன்று வாரம் தண்டனை விதிக்கப்பட்டது. திருவாரூர்ச் சிறை வாசத்தின்போது "பன்னீர்ச் செல்வம் அல்லது லட்சியவாதி" என்ற சிறு நாடகத்தைச் சிறையிலேயே எழுதினார், குத்தூசியார்.

தண்டனை முடிய மூன்று நாட்களே இருக்கும்போது, திருவை யாற்றில் பேசிய பேச்சின்மீது தொடரப்பட்டுள்ள வழக்கை விசாரணை செய்ய வேண்டுமென்று திருவையாறு சிறைக்கு மாற்றப் பட்டார். ஆனால், எதிர்பாராத விதமாகத் திடீரென்று 10-12-1960-ல் விடுதலை செய்யப்பட்டார்.

1961-ம் ஆண்டு பிப்ரவரி முதல் தேதியன்று, திருவையாறு

நீதிமன்றத்தில், திருவையாற்றில் பேசிய பேச்சினுடைய வழக்கு விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது.

போலீசாரால் புனையப்பட்ட ஒரு சாட்சி விசாரிக்கப்பட்டார். அவர் குத்தூசியாரின் பேச்சால் 'தன்னுடைய ஆஸ்திக உள்ளம்' புண்பட்டது என்று சொல்லவேண்டும், என்பதற்காக அரசு வழக்கறிஞரால் கொண்டுவந்து நிறுத்தப்பட்டார்.

அரசு வழக்கறிஞர் குத்தூசியாரைச் சுட்டிக்காட்டி, சாட்சியிடம் 'அவர்கள் அன்று பேசியது உனக்கு எப்படிப்பட்ட உணர்வை ஏற்படுத்தியது?' என்று கேட்டார்.

குருசாமியைப் பார்த்துவிட்டு சாட்சி,

"இவ்வளவு பெரியவங்க, தப்பா ஒன்றும் சொல்லவில்லை. புத்தியாயிருங்க, நல்லாயிருங்க என்றுதான் சொன்னாங்க! இவங்களைப் பார்த்தா—எவ்வளவு பெரியவுங்களாத் தெரியுது, இவுங்களைப் பற்றி என்கிட்டே கேட்கிறீங்களே?" என்றார்.

கோர்ட்டில் சப்-மாஜிஸ்ட்ரேட் உட்பட அனைவரும் சிரிப்பை அடக்கமுடியாமல் 'கொல்' லென்று சிரித்தனர்.

அரசு வழக்கறிஞரை மாஜிஸ்ட்ரேட் கேலியாகப் பார்த்தார். சாட்சி அந்த இடத்தைவிட்டு நகர்ந்தார்.

வழக்கின் முடிவில் குருசாமிக்கு ஒன்பது வாரம் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. குருசாமி அன்று மாலையே திருச்சி மத்திய சிறைக்கு அழைத்துச் செல்லப்பட்டார்.

குருசாமி ஒன்பது வாரமும் சிறையில் மிகவும் சுறுசுறுப்பாகவே இருந்தார்.

சிறையில் கைதிகளாக இருந்த பல படித்த இளைஞர்களுக்கு பி. ஏ. தனித் தேர்வுக்கான பாடங்கள் நடத்தினார்.

5-4-1961 காலை 11 மணி அளவில் குத்தூசியார் விடுதலை செய்யப்பட்டார்.

தி. பொ. வேதாசலனார் தலைமையில் ஆயிரக்கணக்கான திராவிடர் கழகத் தோழர் புடை சூழ, "பெரியார் வாழ்க", "குத்தூசி குருசாமி வாழ்க" என்ற வாழ்த் தொலிக்கிடையே, தி. பொ. வேதாசலனார் இல்லத்திற்கு குத்தூசியார் அழைத்துச் செல்லப்பட்டார்.

திருச்சி மத்திய சிறையில் **'சிறைச்சாலை'** என்ற நூல் ஒன்று எழுதினார் குருசாமி. அந் நூலின் முன்னுரையில்,

"1-2-1961 மாலை 4 மணிக்கு திருச்சி சிறைச்சாலைக் குள் அழைத்துச் செல்லப்பட்டேன். 'அர்ச்சகனைத் தூக்கிச் சுமப்பது அவமானம்; அவனை இறங்கச் சொல்ல வேண்டும்; மறுத்தால், ஆற்றில் எறிய வேண்டும்' என்று 25-7-1960 தேதியில் திருவையாற்றில் பேசிய பேச்சுக்காக இ. பி. கோ. (I. P. C.) 117-295-323 ஆகிய பிரிவுகளின் கீழ் ஒன்பது வார சிறைத் தண்டனை விதிக்கப்பட்டேன். அவ் வழக்கில் 304-326 ஆகிய கொலைத் தூண்டுதல் பிரிவுகள் கூட, முதல் குற்றச்சாட்டில் சேர்க்கப்பட்டிருந்தது, இங்கு குறிப்பிடத்தக்கது.

திருச்சி சிறைக்குள்ளே நுழைந்ததும், வெளிவாயிலில் **"சிறைச்சாலை அல்ல இது; சீர்திருத்தச்சாலை"** என்று பெரிய எழுத்தில் வளைவாக எழுதப்பட்டிருந்ததைப் பார்த்தேன். அதுமுதல் இதுவரையில், இது என்காதுக்குள் ஒலித்துக் கொண்டேயிருக்கிறது. எந்த அளவுக்கு இது உண்மை என்பதைப் பற்றி அடிக்கடி சிந்தித்துக்கொண்டேயிருந்தேன். அதன் விளைவுதான் இந்தச் சிறுநூல்.

அரசியல் கட்சிகளான காங்கிரசு, கம்யூனிஸ்ட் போன்ற இயக்கங்களில் ஈடுபட்டவர்களைப்போல், நான் தொடர்ந்து சில ஆண்டுகள் சிறைத் தண்டனை பெற்றவனல்லன். மொத்தக் கணக்குப்படி பன்னிரண்டு தடவை சிறை சென்றவன் என்ற போதிலும், எல்லாவற்றையும் கூட்டினால் ஓராண்டுதான் இருக்கும். மிகுந்த தண்டனையைப் பெற்றது ஒன்பது மாதம், அதற்கு அடுத்தபடி ஒன்பதுவாரம்; அதற்கடுத்தது அய்ந்து வாரம். கடைசியா ஒரு நாள் அல்லது ஒரு மணி தண்டனைகூடக் கிடைத்திருக்கிறது.

அரசாங்கத்துக்கு வீண் தொல்லைகொடுக்க விரும்பாததும், சிறைவாழ்க்கை என்ற தியாகத் தழும்பைக் காட்டி வோட்டுப் பிச்சை கேட்டு விளம்பரம் பெறவிரும்பாதது

மான ஒரு இயக்கத்தைச் சேர்ந்தவன் நான்'' என்று குத்தூசியார் எழுதியுள்ளார்.

## குஞ்சிதம் அம்மையாரின் மறைவு

குஞ்சிதம் அம்மையாரின் உடல்நிலை பெரிதும் பாதிக்கப்பட்டிருந்தது. குடும்ப நண்பர்களான டாக்டர். லட்சுமணசாமி முதலியாரும், அவரது மகன் டாக்டர். வேணுகோபாலும் அம்மையார் உடல்நிலையை நல்லமுறையில் கவனித்தனர்.

சில நாட்களில் அம்மையாரின் உடல்நிலை மிகவும் கவலைக்கிடமானது. சென்னை பொது மருத்துவ மனையிலும் சேர்க்கப்பட்டார். அம்மையாரின் உடல் நலிவு, குருசாமியை மனங் கலங்க வைத்துவிட்டது. அச் சமயம் அவரது உள்ளம் எந்நிலையில் இருந்த தென்பதை அவர் குடும்ப நண்பராகிய குருவிக் கரம்பை வேலுவுக்கு எழுதிய கடிதமே சான்று.

சென்னை 6-7-61

[" பேரன்புடையீர், வணக்கம்.

கடிதம் கிடைத்தது; ட்ரராப்டும் கிடைத்தது. நன்றி. என் துணைவியார்—வாழ்க்கைத் துணைவியார்—31ஆண்டு இணைபிரியாது இருந்தவர்; சுயமரியாதை (பகுத்தறிவு)க் கொள்கைக்கே எடுத்துக்காட்டாக இருந்தவர்; எனக்கு மந்திரியாகவும் உடலில் பாதியாகவும் இருந்தவர்; என்னை விட்டு நீண்டதொலைவு போய்விட்டார். அவர் நிழல்தான் தெரிகிறது.

அதாவது, கடந்த ஒரு வாரகாலமாகப் பேச்சே இல்லை; கண்விழிப்பதும் இல்லை. 'அத்தான்' என்று அழைத்து ஒரு வாரம் ஆகிவிட்டது. மருத்துவ மனையிலும் இருக்க முடிவதில்லை. வீட்டிலும் தங்க முடிவதில்லை. எழுதுவதும் இல்லை. படிப்பதும் இல்லை. இருக்கிறேன்.

இப்படிக்கு,
அன்பன்
**எஸ் குருசாமி]**

அம்மையார், தாம் விரைவில் இறந்துவிடுவோம் என்பதை நன் குணர்ந்துகொண்டார். தம்முடைய நண்பர்களின் பட்டியல் ஒன்றைத் தயார்செய்து, ஒவ்வொருவராகச் சொல்லியனுப்பி வர வழைத்துக் குடும்பநலன் விசாரித்து, அவர்களிடத்தில் "நான் இறந்து விடுவேன், எவரும் வருந்தவேண்டாம்" என்று கூறிப் பிரியா விடை பெற்றுக்கொண்டார். மரணம் நெருங்கியதைக் கண்டும் அஞ்சாத குஞ்சிதம் அம்மையாரின் நிலையைக் கண்ட அனைவரும் வியப் புற்றனர். மரணமடைவதற்குமுன் ஒரு நாள் அகில இந்தியப் பகுத் தறிவாளர் சங்கத்தின் (Indian Rationalists Association) செயாலா ளரும், குடும்ப நண்பருமான எஸ். இராமநாதனை அழைத்துவரச் செய்து அவரிடம்,

> "நான் ஒரு பகுத்தறிவுவாதி. நாத்திகப் பெண் என் பதை நீங்கள் அறிவீர்கள். இப்பொழுது நான் மரணப் படுக்கையில் இருக்கின்றேன். நான்உங்களுக்கு ஒன்றை நினைவூட்டுகிறேன். அதையே மற்றவர்களுக்கும் சொல் லவும். நான் ஒரு பகுத்தறிவுடைய நாத்திகப் பெண்மணி யாகவே சாகிறேன்" என்று, சிறிதளவுகூடப் பதட்டமின் றித் தெளிவுடன், தான் என்ன சொல்கிறோம் என்பதை உணர்ந்து அமைதியாகச் சொன்னார்.

அம்மையாரின் இச்செயல் நாத்திக உலகுக்கு ஓர் எடுத்துக் காட்டாகவே அமைந்தது.

இந்த நிகழ்ச்சிக்குப் பின் 30-7-1961 நடுப் பகல்—12 மணிக்கு சென்னை பொது மருத்துவமனையில் 'குருசாமியின் மந்திரி யாரும்' அவரது "உடலில் பாதியாகவு"மிருந்த அவரது துணைவி யார் குஞ்சிதம் அம்மையார் காலமானார்.

அம்மையாரின் இறுதி நிகழ்ச்சியில் கலந்துகொண்ட பெரியார் கண்கலங்க, நாத் தழுதழுக்க இவ்வாறு சொன்னார்:

> "திருமதி குஞ்சிதம் அம்மையாரின் மறைவு மிகவும் பரிதாபப்படக்கூடிய நிகழ்ச்சியாகும். அவரது குடும்பத் தினர் மட்டுமல்ல; நகர வாசிகளும் சரி, தமிழகத்தில் எல்லோருக்கும் பேரிழப்பாகும். அவரது மறைவு நமக்கு —பொதுமக்களுக்கு ஈடுசெய்ய முடியாத நட்டமாகும்.

அவர்கள் இயக்கக் கொள்கைகளை உயிரினும் மேலாகக் கருதியிருந்தார்கள். அவர்களது குடும்பம் முழுவதுமே சுயமரியாதை, பகுத்தறிவுக் கொள்கையில் அக்கறையும் பிடிவாதமும் கொண்டதாகும். குஞ்சிதம் சுயநலம் கொஞ்சமும் இன்றி உழைத்தவர். தொண்டின் பயனாக எவ்வித பலனையும் எதிர்பாராமல் உழைத்தவர். குடும்ப நலத்தைப்பற்றிக் கொஞ்சமும் கவலைப்படவில்லை. அவருடைய உழைப்புக்குத் தக்க பயனை அனுபவிக்கவுமில்லை. குஞ்சிதம் அம்மாள் சுயமரியாதை இயக்கமே முக்கியமாகக் கொண்டிருந்தவர். அடுத்தாற்போல் அவரைப்போல் இயக்கத்திற்கு யார் இருக்கிறார்?''

''குஞ்சிதம் அம்மாளுக்கு இரு மாணிக்கங்கள் போன்ற குழந்தைகள். மகள் ரஷியா, மகன் கவுதமன், 'துப்பாக்கியில் பிறந்த பீரங்கி' என்பார்களே அதுபோல நம் கொள்கையில், இயக்கத்தில் உணர்ச்சி கொண்டவர்கள்.

நண்பர் குருசாமி அவர்கள்—அறிவாளி, சுயமரியாதை—அறிவு இயக்க வாதி. சிறந்த கருத்துடைய அறிவு பெற்றவர். இயற்கையின் எல்லையை நன்குணர்ந்தவர். அவர் மனத்தில் பேதம் கொள்ளக்கூடாது.மறக்க முடியாத துக்கமாயிருப்பினும் இயற்கையின் வேகத்தை சமாளிக்கத் தைரியம் வேண்டும். பயனில்லையென்று அறிந்த பிறகும் துக்கப்பட்டுக் கொண்டு இருப்பது நேரத்தைக் கொலை செய்வதாகும். வீட்டிலிருந்தால் நமது துக்கத்தை மறக்க வாய்ப்பிருக்காது.

எனவே, குருசாமி அவர்களுக்குச் சொல்லுகிறேன். வீட்டிலிருக்க வேண்டாம்; வெளியே புறப்பட்டு விட வேண்டும். எதையும் தாங்கிக் கொள்ளக்கூடிய அறிவு அவருக்குண்டு. குஞ்சிதம்மாளின் மறைவு இயக்கத்தின் அனைவருக்குமே இழப்பாகும்.''

அம்மையாரின் மறைவு குருசாமிக்குப் பேரிடியாகும்.

### பெரியாரிடமிருந்து பிரிந்தார்!

1961 அக்டோபர் அய்ந்தாம் தேதி—குஞ்சிதம் அம்மையார் மறைந்து சரியாக அறுபத்தாறு நாட்கள் கழித்து—குத்தூசியாருக்கு பெரியாரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது.

குருசாமி திராவிடர் கழகத்தில் வகித்து வந்த மத்திய திராவிடர் கழகத் தலைவர் பதவியையும், பெரியார் சுயமரியாதை இயக்கப் பிரச்சார ஸ்தாபன ட்ரஸ்டின் உறுப்பினர் பதவியையும் ராஜினாமாச் செய்ய வேண்டுமென்பதே அக் கடிதத்தின் சாரம்.

தலைவர் பெரியார் ஆணைப்படி, குருசாமி அப் பதவிகள் இரண்டையும் உடனடியாக ராஜினாமாச் செய்து, 6-10-1961-ல் பெரியாருக்கு அனுப்பி வைத்தார்.

கட்சித் தலைமைக்கும், தலைவர் பெரியாருடைய ஆணைக்கும் என்றுமே கட்டுப்பட்டவர் குருசாமி.

குத்தூசியார் தம்முடைய ஒரு சில நெருங்கிய நண்பர்கள் தவிர, வேறு எவர்க்கும் இந்நிகழ்ச்சி பற்றித் தெரிவிக்கவில்லை.

1962 ஜனவரியில் சென்னை பெரியார் திடலில் திராவிடர் கழகம் நடத்திய வாக்காளர் மாநாட்டுக்கான வேலைகளை வழக்கம் போல் குத்தூசியார் முன்னின்று நடத்தினார்.

முப்பதாண்டுகளாக 'குஞ்சிதம் குருசாமி' என்ற இணைபிரியாத பெயருடைய இருவரும் எல்லா மாநாடுகளுக்கும் கூட்டங்களுக்கும் இணையாகவே வருகை புரிந்து, சுயமரியாதைக் கருத்துகளை அள்ளி அள்ளி வழங்கியதைக் கண்டிருந்த இயக்கத் தோழர்களுக்கே, அந்த மாநாட்டில் குருசாமியை மட்டும் கண்டபோது மனங் கரைந்து, கண்ணீர் கசிந்து, வார்த்தைகள் குழறலாயின. துணையைப் பிரிந்த துயரத்தோடும், தன் பொறுப்புகளிலிருந்து ராஜிநாமாச் செய்யச் சொன்ன பெரியாரின் கட்டளைகளை ஏற்றுத் தனிமையிலும் தனிமையாய் உணர்ந்து கொண்டிருந்த அந்நிலை யிலும், குருசாமி மனங் கலங்காது வழக்கம்போல் சிறிதும் தடுமாற்ற மில்லாது சொற்பொழிவாற்றித் தம் மாநாட்டுப் பணிகளைச் செவ்வனே முடித்தார்.

இம் மாநாடே, அய்யாவும் ஆசிரியரும் ஒன்றாகக் கலந்து கொண்ட கடைசி மாநாடாகும்.

பொதுத் தேர்தலில் மீண்டும் காங்கிரசுக் கட்சியையே ஆதரிப்பது என்று வாக்காளர் மாநாட்டில் தீர்மானிக்கப்பட்டது. அதன்படி, குத்தூசியார் காங்கிரசை ஆதரித்துப் பேசியும் எழுதியும் பிரச்சாரம் செய்தார்.

இதே தேர்தலில், தி. மு. க. விலிருந்து பிரிந்து புதிய கட்சி ஒன்றைத் தோற்றுவித்த ஈ.வெ.கி. சம்பத்தும் ஒரு சில இடங்களில் தமது கட்சிக்காரர்களை நிறுத்தினார். சம்பத் தென்சென்னை பாராளுமன்ற வேட்பாளராகவும் போட்டியிட்டார்.

தமிழ்நாட்டின் பல தொகுதிகளைப் பற்றி எழுதி வந்த குருசாமி, தென் சென்னை வேட்பாளராகக் காங்கிரசு சார்பில் போட்டியிடுவதாக இருந்த டி. டி. கிருஷ்ணமாச்சாரியாரை ஆதரித்து ஒரு தலையங்கம் எழுதினார்.

அந்த நேரத்தில் 'விடுதலை' அலுவலகத்தில் நிர்வாகியாக இருந்தவர் ஈ. வெ. கி. சம்பத்தின் மைத்துனர். அவர், குத்தூசியார் எழுதிய அந்தத் தலையங்கம் தமது மைத்துனர் சம்பத்தின் வெற்றியைப் பாதிக்கும் என்பதனால் 'விடுதலை'யில் வெளியிடாதவாறு தடுத்துவிட்டார்.

அன்று மாலை இச் செய்தியறிந்த குருசாமி மிகவும் அதிர்ச்சியடைந்தார்.

அப்பொழுதே குத்தூசியார் தலைவர் பெரியாருக்கு ஒரு கடிதம் எழுதினார். அதன் சுருக்கம்:

> "நான் 'விடுதலை'யில் பதினாறு ஆண்டுகளாகத் தொடர்ந்து தலையங்கம் எழுதி வந்திருக்கிறேன். இது வரை எந்தவொரு தலையங்கத்தையும் கம்பாசிடரைத் தவிர, வேறு எவரும் பிரித்துப் பார்த்ததுகூடக் கிடையாது. அந்த உரிமை தங்களுக்கு இருந்தும்கூட, தாங்களே அவ்வாறு செய்ததும் இல்லை. ஆனால், இன்று ஒரு சாதாரண நிர்வாகி அதைப் பிரித்துப் பார்த்ததுடன் தலையங்கத்தை வெளியிடாமல் நிறுத்தி வைத்துவிட்டார். 'எனக்கு இது பெருத்த அவமானமாகும்' ("It is a great insult to me")—ஆகவே, நான் இன்றிலிருந்து 'விடுதலை' யில் எழுதுவதை நிறுத்திக் கொள்கிறேன்",

இக் கடிதத்தைப் பெரியாருக்கு அனுப்பிவிட்டு, குத்தூசியார் தேர்தல் பிரச்சாரத்திற்காகச் சுற்றுப்பயணத்தைத் தொடங்கினார்.

திராவிடர் கழகத்தின் வளர்ச்சியைத் தமது உயிர்மூச்சாகக் கொண்டிருந்த குத்தூசியார், தமது பதவி விலகலை எவ்வாறு பெரிதுபடுத்தாமல் இருந்தாரோ அதுபோலவே 'விடுதலை' தலையங்க விவகாரத்திலும் இருந்துவிட்டார்.

ஆனால், இந் நிகழ்ச்சிக்குப் பிறகு குருசாமி 'விடுதலை'யில் எழுதவே இல்லை.

'விடுதலை'யிலிருந்து குருசாமி விலகிய செய்தியை உறுதிப் படுத்திக்கொண்ட கருமுத்து தியாகராசச் செட்டியார் தமது 'தமிழ்நாடு' பத்திரிகையில் தலைமை ஆசிரியராகப் பொறுப்பேற்கு மாறு குத்தூசியாரைக் கேட்டுக்கொண்டார்.

குருசாமி, **"பெரியாருக்கு எழுதிய கை வேறு எவருக்கும் எழுதாது"** என்று கூறி மறுத்துவிட்டார்.

1962 பொதுத்தேர்தல் முடிந்தவுடன் பெரியார், திராவிடர் கழக அமைப்பை—மத்திய கமிட்டியைக் கலைத்து விட்டார்.

## 'குத்தூசி' மாத இதழ்

முப்பத்தைந்து ஆண்டுகளாக, சமுதாய-அரசியல் சீர்திருத்தம் மட்டுமின்றி, பத்திரிகைத் துறையிலும் ஆர்வம்காட்டி, எழுத்தாள ராகவும் பத்திரிகையாளராகவும் திகழ்ந்த குத்தூசியார் பத்திரி கையின் மூலம் பொதுப்பணி ஆற்ற முடிவு செய்தார்.

1962 அக்டோபரில் தமிழர் வாழ்வும் தமிழ் மொழியும் சிறக்கின்ற வகையில் "**குத்தூசி**" என்ற பெயரில் ஒரு மாத இதழைத் தொடங்கினார். தமிழ்நாட்டில் அறிவுப் பூர்வமான பத்திரிகை நடத்துவது இலாபம் தரக்கூடிய தொழிலல்ல என்பதைக் குத்தூசியார் அறிவார். 'குத்தூசி'யின் முதல் இதழில் குருசாமி எழுதியதாவது :

> "பத்திரிகா 'முனிவர்' நம்மை நோக்கி இம் மாதிரி 'சாபம்' இட்டார்.

''எந்தத் தமிழனும் இதுகாறும் செய்யத் துணியாத புது முயற்சியில் இறங்கிவிட்டாய். வருவாய் இல்லாத முறைமட்டுமல்ல—பொருள் இழப்புக்கும் தயாராயிரு! தமிழர்களைப் பற்றித் தப்புக் கணக்குப் போட்டு விட்டாய். எளிதாக, சுளுவாக, கேளிக்கையாக, பொழுது போக்காக, மூளைக்கு வேலை தராமல், மேற்போக்காக படித்துப் பழகிவிட்ட தமிழனை, ரப்பர் மெத்தையில் படுத்துறங்கும் சுகவாசித் தமிழனை—காடுமேடுகளில் இழுத்துச் செல்லத் துணிந்திருக்கிறாய்!

''எது எதெல்லாம், தமிழனுக்கு இன்ப உணர்ச்சி தரக் கூடியதோ அதையெல்லாம் வெறுத்தொதுக்கிவிட முடிவுசெய்திருப்பது மாபெரும் தவறு. எனவே, உன் முதல் முயற்சி — புதுமுயற்சி படுதோல்வி அடையக்கடவது. புயற் காற்றையும், காட்டு வெள்ளத்தையும் எதிர்த்துப் புறப்பட்டிருக்கும் உன் தனி நடைப் பயணம் முற்றுப் பெறாமல் இருக்கக் கடவது.''

''முனிவரின் இந்தச் சாபம் நிறைவேறினாலும் சரி, அல்லது நம் குறிக்கோள் வெற்றி பெற்றாலும் சரி, மூச்சுள்ளவரையில் ஒரு புதுமுயற்சி என்றுதான் இதில் குதித்திருக்கிறோம். பல்லாயிரம் பேர் படித்துப் பயனடைவார்கள் என்ற நம்பிக்கையில்லை; ஆசையும் இல்லை. சில ஆயிரம் பேராவது இம் மாதிரியான ஏட்டை விரும்பிப் படித்துப் பயனடைவார்கள் என்ற நம்பிக்கை மட்டும் உண்டு''

குத்தூசியாருக்கே உரித்தான பாணியில் தொடங்கிய இந்த இதழில், தமிழகத்தின் பலதரப்பட்ட அறிஞர்களும் வல்லுநர்களும் ஆராய்ச்சியாளர்களும் கவிஞர்களும் மற்றும் பலரும் தொடர்ந்து எழுதினர்.

தமிழகத்தின் 'ரீடர்ஸ் டைஜஸ்ட்' (Readers Digest) ஆக 'குத்தூசி' வெளி வந்தது. ஆங்கிலத்தில் வெளிவருகின்ற 'ரீடர்ஸ் டைஜஸ்ட்' முதலாளி வர்க்கத்துக்குத் துணை போகிறது. குத்தூசியோ பாட்டாளி வர்க்கத்தினுடைய—பகுத்தறிவாளர்களுடைய

பக்கம் நின்றது.

பொது அறிவு—இலக்கியப் பகுதி—பெண்கள் பகுதி — தொழிலாளர் பகுதி—உலகப் பெரியார்களின் வாழ்க்கை வரலாற்றுப் பகுதி—மாணவர் பகுதி—கவிதைப் பகுதி—சிறுகதைப் பகுதி-புத்தக விமர்சனம் என்று பல பகுதிகளையும் கொண்டு வெளி வந்தது 'குத்தூசி'.

தமிழ் நாட்டில் லட்சக் கணக்காக விற்பனையாகும் இதழ்கள் செய்த சாதனைகளை விட, சில ஆயிரம் பிரதிகள் விற்கக் கூடிய 'குத்தூசி' இதழ்கள் செய்த சாதனையே மிகுதி.

சிறிய பத்திரிகைகள் தான் பல சாதனைகளைச் செய்திருக்கின்றன. இம்முறையில் 'குத்தூசி'யும் மகத்தான சாதனைகளைப் புரிந்தது.

'குத்தூசி' தொங்கிய போது 'நவ இந்தியா' நாள் இதழ் 'குத்தூசி' மாத இதழை வரவேற்று எழுதிய மதிப்புரை இது :—

> "அரசியல், சமுதாயக் கிடங்குகளில் நுழைந்து பதம் பார்க்கும் குத்தூசியைத்தான் நாம் அறிவோம். ஆனால் மாத இதழ் குத்தூசியார் நம்மை ஒரு பெரிய அறிவுக் களஞ்சியத்தின் முன் நிறுத்தி விடுகிறார். அவர் வழித்துணை இருந்தால் தமிழர் சமுதாயமே பெரும் பயனடையும். பதம் பார்க்கும் அவசியப் பணியை, தொடர்ந்து எல்லாத் துறைகளிலும் மேற் கொள்ள வேண்டும். உதாரணமாக, அய்ந்தாண்டுத் திட்டங்களில் அரசாங்கம் பல கோடிப் பணம் செலவிட்டு, நாட்டை வளப்படுத்தியுள்ளது. மக்கள் முழுப் பயனை அடைந்தார்களா? ஏன் இல்லை? விடை தெரிவது குத்தூசியார் பணி.
>
> "தமிழிசை இயக்கம், சலுகை பெற்ற தீண்டத்தகாதவர் போல், இன்னமும் தனித்து நிற்பானேன்? இதுவும் குத்தூசியார் பணி. விஞ்ஞானக் கருத்துகள் ஏன் பரவவில்லை? கலப்பு மணத்திற்குப் பெருத்த ஆதரவு இருந்தும் வளர்ச்சி பெறவில்லை ஏன்?
>
> "இவை போன்ற எண்ணற்ற கேள்விகளுக்கு குத்தூசியார் விடை தர வேண்டும். எதையும் ஆக்கப் பூர்வமாக

அலசி விமர்சிக்கும் 'குத்தூசி'யையே ஆசிரியர் குருசாமி அவர்களிடமிருந்து தமிழர் சமுதாயம் எதிர்பார்க்கிறது''.

'குத்தூசி' இதழில், சோ. லட்சுமிரதன் பாரதியார், நெ.து. சுந்தர வடிவேலு, மு. வரதராசனார், என்.வி. நாயுடு, ப.நடராசன், எஸ். இராமநாதன், அ. சிதம்பரநாதன், மயிலை சீனி வேங்கட சாமி, கே. டி. கே. தங்கமணி, கொண்டல். சு. மகாதேவன், சாலை இளந்திரையன், சாலினி இளந்திரையன், ப. நா. பாலசுப்பிர மணியம், எஸ். என். சொக்கலிங்கம், வே. தில்லைநாயகம், ஆர். சசி வர்ணம், பட்டுக்கோட்டை க. சுப்ரமணியம், வி. பொ. பழனிவேலன் மு. குழந்தை வேலு, கவிஞர் முருகு சுந்தரம், கவிஞர் மனசை ப. கீரன்—மற்றும் பலரும் தொடர்ந்து எழுதி வந்தனர்.

**புதிய சுயமரியாதை இயக்கம்**

1962-ல் கலைக்கப்பட்ட திராவிடர் கழகம் ஓராண்டாகியும் புதுப்பிக்கப்பட வில்லை. நாற்பதாண்டுகளாகப் பகுத்தறிவுப் பணி யாற்றி வந்த தி. பொ. வேதாசலனாரும் மற்றும் ஆயிரக்கணக்கான தொண்டர்களும் குத்தூசியாருடன் இணைந்து தொடர்ந்து பணி புரிய விரும்பினார்கள்.

1963 பிப்ரவரி 4-ல் திருச்சி வேதாசலனார் இல்லத்தில், விலகிய-விலக்கப்பட்ட திராவிடர் கழகத் தோழர்கள் அனைவரும் ஒன்று கூடி, ஒரு முடிவு செய்தார்கள்.

வேதாசலனார் தலைமையில் கூடிய அக் கூட்டத்தின் முடிவை வேதாசலனாரும், குத்தூசியாரும் ஓர் அறிக்கையாக வெளி யிட்டார்கள். அதன் சாரம்:

''தலைவர் பெரியார் அவர்களால் பல இயக்க முக்கி யஸ்தர்கள் திராவிடர் கழகத்திலிருந்து விலக்கப்பட்டிருக் கிறார்கள். திராவிடர் கழகத்தின் மத்திய நிர்வாகக் கமிட்டியும் மாவட்டக் கமிட்டிகளும் தலைவரால் திடீ ரென்று சென்ற ஆண்டில் கலைக்கப்பட்டன.''

''திராவிடர் கழகத்தில் பலரைச் சதிகாரர்கள் என்றும், துரோகிகள் என்றும், எவ்வித காரணமும் காட்டப் படாமல் தலைவரால் கூறப்பட்டு வருகிறது.

இவ்வாறு சொல்லப்படுகின்றவருடன் கழகத்தவர்

யாதொரு தொடர்பும் கொள்ளக்கூடாதென்றும், கூட்டங் களுக்குச் சொற்பொழிவாற்ற அழைக்கக் கூடாதென்றும் தலைவரால் உத்தரவிடப்பட்டும் 'அமுல்' செய்யப்பட்டு வருகிறது.

"கழகத்தின் கொள்கைகளுக்கு, நீக்கப்பட்டவர்கள் எவ்வகையிலும் மாறுபட்டவர்கள் அல்லர். இந்நிலையில் தலைவரால் உண்டாக்கப்பட்ட நிர்வாகத்தின் விளைவாக, இதுவரை விலக்கப்பட்டவர்களும், இனி விலக்கப்படக் கூடியவர்களும் ஒன்றுசேர்ந்து, கழகக் கொள்கைகளை எப்போதும்போல் பரப்பி வர வேண்டுமென்கிற நிலையி லிருக்கிறார்கள்.

"இவர்கள் யாவரும் விரைவில் கூடி ஒரு முடிவெடுத்து, கொள்கைகளைத் தீவிரமாகப் பிரச்சாரம் செய்து, வருங் காலத்தில் சுயமரியாதை லட்சியங்களுக்கும், கொள்கை களுக்கும் எவ்வித கேடும் வராதபடி பாதுகாத்துப் பரப்ப வேண்டிய நிலையில் இருக்கிறோம்."

இக் கூட்டத்திற்குத் தமிழ்நாடெங்கிலிருந்தும் கலந்துகொண்ட சுயமரியாதை முன்னணித் தோழர்கள்—புதுவை நோயல், அ.பொன் னம்பலனார், வ. வீராச்சாமி, வேலூர் செந்தாமரை, எம்.கே.டி. சுப்பிரமணியம், மயிலை லோகநாதன், நாத்திகம் ராமசாமி, ஆர்.கே. முனுசாமி, கு. மு. மாணிக்கம், கே. பஞ்சாட்சரம், ம. ச, ராசன், பி.ஏ.கே. பழனிச்சாமி, சு. பாலன்., க. விசுவலிங்கம், ஆத்தூர் இசையழகன், மணச்சநல்லூர் ச. க. அரங்கராசன், ம. ப. ஆறுமுகம், பி. ரங்கசாமி, எம். எல். ராமமூர்த்தி, திருமதி பத்மாவதி ராமமூர்த்தி, மன்னார்குடி கணபதி, பட்டுக்கோட்டை கோ. ராமசாமி, கே. பி. சாமி, நாகை சகாதேவன், குடந்தை சிங்காரவேலர், ஜீன் மெஸ்லியர், கலியன், டி.வி. சுந்தரமூர்த்தி, அரு. ரங்கநாதன், நேதாஜி, நாத்திகமணி, குருவிக்கரம்பை சு. வேலு முதலியோர் ஆவார்கள்.

1963 மே 19-ல், திருச்சி தேவர் ஹாலில் வேதாசலனார் தலை மையில் சுயமரியாதை இயக்கப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. இக் கூட்டத்தில் "**சுயமரியாதை இயக்கம்**" என்ற பெயரில் புதிய

இயக்கம் தொடங்கவேண்டுமென்று ஏகமனதாக முடிவெடுக்கப் பட்டது.

இப் புதிய சுயமரியாதை இயக்கத்திற்குத் தலைவராக வேதாசல னாரும், பொதுச் செயலாளராக குருசாமியும், திருச்சி வ. வீராச் சாமி, மயிலை லோகநாதன் ஆகியோர் துணைச் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

புதிய இயக்கம்பற்றி குருசாமி விவரித்தார்.

''40 ஆண்டுகளுக்கு முன்பு பகுத்தறிவுத் துறையில் தமிழ்நாடு எப்படி இருந்ததோ, அதைவிடக் கேவலமாக, அறிவுத் துறையில் அடிமையாக, மடமைக் குழியில் இன்று ஆழ்ந்து கிடக்கிறது.

''எங்கு நோக்கினும் மதப் பண்டிகைகள், புதுப் புது மதத் தலைவர்கள், மதப் பிரச்சாரம், மத விளம்பரம், ஜாதி வெறி, மூடநம்பிக்கை!

''போதாக் குறைக்கு 'மக்கள் ஆட்சி' என்ற தேர்தல் முறையினால் ஜாதியும், மதமும், உச்ச நிலையில் நின்று ஆதிக்கம் செலுத்திக்கொண்டிருக்கின்றன. இந்த இரண் டையும் காட்டித்தான் எல்லா அரசியல் கட்சிகளும் தேர்தல் நடத்தி வருகின்றன. இன்று தமிழ்நாட்டின் நிலைமை படுமோசமாக, காணச் சகிக்காத மடமையில் மூழ்கியுள்ளது. எனவே, 'சாதியற்ற, மதமற்ற, கடவுள் நம்பிக்கையற்ற,சமதர்ம அடிப்படையைக் கொண்ட சிறந்த மனித சமுதாயத்தை உருவாக்கும் பொருட்டு, பகுத் தறிவை (Rationalism) அடிப்படையாகக் கொண்டு சமத் துவம், சகோதரத்துவம் என்ற அடிப்படையில் தமிழ் நாட்டில் இடைவிடாத பிரச்சாரம் செய்தல், என்பதைக் கொள்கையாகக் கொண்டு ''சுயமரியாதை இயக்கம்'' என்ற பழைய பெயரினால் இயக்கம் தொடங்கப்பட்டிருக் கிறது.

இது, 'தொடங்கப்பட்டிருக்கிறது' என்பதைவிட 'தொடர்ந்து பணியாற்றப் புறப்பட்டிருக்கிறது என்பதே' சரியானதாகும்.

'துணிவு' என்பதுதான் பகுத்தறிவு இயக்கத்தின் 'கொடி'; 'நேர்மை' என்பதுதான் இவ்வியக்கத்தின் 'சட்டை'; எங்கும் பிரச்சாரம், என்றும் பிரச்சாரம் என்பது தான் பகுத்தறிவுப் படையினரின் படைக் கருவி.''

இக் கொள்கைகளைக் கொண்டு. புதிய இயக்கம் தமிழ் நாடெங்கும் செயல்படலாயிற்று.

## ஆசிரியர் குருசாமி

1963 - ம் ஆண்டு இந்தியப் பேரரசு, நாட்டுப் பிரிவினைத் தடுப்புச் சட்டத்தை நிறைவேற்றியது. அதுபற்றி குருசாமி,

''ஒரு பகுதி மக்களை மற்றொரு பகுதி மக்கள் பொருளாதாரத் துறையில் சுரண்டிக் கொண்டிருப்பதோ, ஒரு பகுதி மக்கள் மீது மற்றொரு பகுதி மக்களின் மொழியை வலுக் கட்டாயமாகத் திணிப்பதோ, ஒரு கூட்டத்தார் மட்டுமே உத்தியோகத் துறையில் ஆதிக்கம் செலுத்திக்கொண்டிருப்பதோ, ஒரு பிரிவினர் மட்டுமே தொழில்—கல்வித் துறையில் சலுகை பெற்றுக் கொண்டிருப்பதோ கூடாது. இவைகளில் எது இருந்தாலும் பிரிவினை யுணர்ச்சி ஊற்றெடுத்துக் கொண்டுதான் இருக்கும்.

''இந்தியா ஒரு 'நேஷன்' ஆக இருக்கவேண்டுமானால் இதற்குத் தடையாகவுள்ள ஜாதி, மத இன வேற்றுமைகள் ஒழிக்கப்படவேண்டும். இவைகளை வளர்க்கின்ற நடைமுறைகள், இலக்கியங்கள், பண்டிகைகள், விழாக்கள் செல்வாக்குப் பெறுவதைத் தடுக்கவேண்டும்''

என்று மிகத்தெளிவாகத் தமது கருத்தைத் தெரிவித்தார்.

இதே ஆண்டில் மத்திய அரசு 'தங்கக் கட்டுப்பாடு சட்டம்' கொண்டு வந்தது. இதை எதிர்த்து, மதத் தலைவர்களிடமிருந்தும் ஜாதி அகம்பாவிகளிடமிருந்தும் 'அந்தோ! தாலித் தங்கத்துக்குமா ஆபத்து!' என்று ஓலம் எழும்பியது.

சீர்திருத்தக்காரரான குருசாமி இதனைக் கண்டித்து எழுதினார்:

''தாலி கட்டும் வழக்கம் தமிழ்நாட்டுக்கு மட்டுமே!

அதுவும் இந்து மதத்திலுள்ள ஒரு சில வகுப்புகளுக்கு மட்டும்தான். இந்த மக்களில் மிகச் சொற்பமானவர் களிடத்தில்தான் இந்த வழக்கம் உண்டு. அப்படி யொன்றும் தாலி என்பது புனிதமான ஒன்றல்ல.

கோரைக்கு—அதாவது தர்ப்பைப் புல்லுக்கு ஏற்பட்டுள்ள புனிதம் போலவும், மாட்டின் மலத்துக்கும் மூத்திரத்திற்கும் ஏற்பட்டுள்ள புனிதம் போலவும் தாலியும் புனிதமாக்கப்பட்டிருக்கிறது.

தாலி கட்டாமலே திருமணம் செய்து கொண்டவர் களும், கட்டியபின் அதை நீக்கிவிட்டுக் கணவன்-மனைவி யாக நல்வாழ்க்கை வாழ்பவர்களும், வாழ்ந்தவர்களும் தமிழ்நாட்டிலேயே பலருண்டு. உலகில் மணமான எல்லா மாதர்களும் தாலி அணிவதில்லை. இதனால் எந்தக் கேடும் ஏற்படவில்லை. உயர்ந்த காரட் தங்கத்தில்-உறுதியான தங்கச் சங்கிலியில் தாலி அணிந்த வர்களின் கணவன்மார்கள் யாவரும்நீண்ட ஆயுள் வாழ்ந்த தாகவும் கூறமுடியவில்லை.''

(குத்தூசி, ஏப்ரல், 1963)

வெளிநாடுகளின் உதவியின் பயனாகவும், உள்நாட்டு முயற்சி யின் பயனாகவும் பொருளாதாரத் துறையிலும், கல்வித் துறை யிலும் நாடு ஓரளவு வளர்ச்சியடைந்து வருகிறது. ஆனால், சமுதாயக் கேடுகளையும், குறைபாடுகளையும் ஒழிப்பதில் நத்தை வேகத்தில் அரசாங்கம் நகர்ந்து கொண்டிருப்பதனால், கேடுகள் மான் வேகத்தில் ஓடிக்கொண்டிருக்கின்றன.

'வெள்ளம் ஊருக்குள் புகுந்திருக்கும்போது விசாலாட்சி வீணை வாசித்துக் கொண்டிருப்பது போல' மதுரை மீனாட்சியின் வீட்டைப் பழுது பார்க்கக் கோடிக்கணக்கான ரூபாய்க்கு மேல் பாழ் படுத்தினர் தமிழ்நாட்டு மதக் கிறுக்கர்கள்.

1963 ஜூன் 28-ல், புதுப்பிக்கப்பட்ட மதுரைக் கோயில் 'குடமுழுக்கு' விழாவிற்கு இந்தியக் குடியரசுத் தலைவர் இராதாகிருஷ்ணன் கலந்துகொள்வதாக இருந்தது.

குருசாமி, தமிழ்நாடு சுயமரியாதை இயக்கத் துணைச் செய

லாளர் மயிலை லோகநாதனைக் கொண்டு, குடியரசுத் தலைவரின் இச் செயலைத் தடுக்க வேண்டுமெனக் கோரி, சென்னை உயர்நீதி மன்றத்தில் 'ரிட்'மனு கொடுக்கச் செய்தார்.

குருசாமியும் குடியரசுத் தலைவருக்கு இதுபற்றிக் கடிதம் எழுதினார்:

"குடியரசுத் தலைவர் என்பவர் கட்சித் தலைவரல்லர். மதத் தலைவரும் அல்லர். உயர்நீதி மன்ற நிர்வாகிகளைப் போன்றவர். அவர்களையே நிர்வகிக்கும் அதிகாரம் பெற்றிருப்பவர். அவரது பேச்சு, எழுத்து, நடத்தை யாவும் துலாக்கோல்போல் இருக்கவேண்டும். அவர் பெற்றுவரும் ஊதியமும் அவர் சார்பில் செலவழிக்கப்பட்டுவரும் பல லட்சக் கணக்கான ரூபாயும் பொதுமக்கள் வரிப் பணத்திலிருந்து தரப்படுபவை. மதத் தலைவர்களைப்போல பக்தர்களின் காணிக்கையினால் வாழ்பவர் அல்லர்.

"குடியரசுத் தலைவர் நாட்டின் முதல் குடிமகன். நாட்டின் அத்தனை கோடி மக்களுக்கும் பொதுவானதொரு பெருந் தலைவர், மதுரை மீனாட்சி அம்மன் கோயிலின் குடமுழுக்குத் திருப்பணிக்காக வருவதால் இந்துமத நம்பிக்கைக்காரரல்லாத முஸ்லீம்கள், கிறித்தவர்கள், பவுத்தர்கள், சமணர்கள், சீக்கியர்கள், பகுத்தறிவுவாதிகள், நாத்திகர்கள் போன்ற சரிபாதி மக்களின் மனம் புண்படும்.

"குடியரசுத் தலைவரின் இச் செயல், அவர்தம் பெரும் பதவிக்கேற்ற-மதச்சார்பற்ற அரசாங்கத் தலைமைக்கேற்ற செய்கைக்கு முரணானது. அவர்தம் பதவியை உதறிவிட்டு, இந்துமத பிரச்சார—விளம்பரச் - செய்கையில் ஈடுபடுவதே சிறப்பாகும். அல்லது, இது இந்துமத ஆட்சிதான்; மற்றவர்கள் எவரும் இதில் இருக்கத் தேவையில்லை என்று அறிவித்துவிட வேண்டும். அப்படிமீறி, குடியரசுத் தலைவர் குடமுழுக்கு விழாவில் கலந்து கொள்வாரானால் சுயமரியாதை இயக்கத்தினர் மறியல் செய்ய நேரிடும்."

இக் கடிதம் கிடைக்கப் பெற்ற குடியரசுத் தலைவர் இராதா

கிருஷ்ணன் மதுரைக் குடமுழுக்கு விழாவிற்கு வருகை தருவதை நிறுத்திக் கொண்டார். இது புதிய சுயமரியாதை இயக்கத்திற்குக் கிடைத்த முதல் வெற்றியாகும்.

1964-ல் முன்னாள் மைசூர் மன்னர் சாமராஜ உடையார் தமிழ் நாட்டின் கவர்னராகப் பதவி ஏற்றார்.

பதவி ஏற்றவுடன், சென்னையிலுள்ள கோயில்களுக்குச் சென்றார். 'திருவல்லிக்கேணி திருவாளர் பார்த்தசாரதி அய்யங்காரையும், மயிலாப்பூர் கபாலீஸ்வர அய்யரையும் கண்டுபேசிவிட்டு, அவர்களுக்கு இவர் பட்டாடை தந்து, அவர்கள் இவருக்குப் பட்டுடை தந்து-பஞ்சகச்சம் துணி கட்டி, வெட்டிய மரம்போல் வீழ்ந்து வணங்கிவிட்டு வந்தார். இவ்வாறு பவனிவந்த கவர்னரை குத்தூசியார் 'பக்த கவர்னரே வருக வருக' என்று வரவேற்பு எழுதினார்:

> ''கவர்னராக வருபவர் எல்லா மக்களுக்கும் பொதுவானவர். அவரது மதக்கொள்கை, சாதிக்கொள்கை, சொந்தக் கருத்து இவற்றை யெல்லாம் தம் மாளிகைக்குள்ளே வைத்துப் பூட்டிவிடுவதுதான் நல்லது''

## 'குருசாமி கனவு கண்ட நாடு

குத்தூசியார், பொதுவுடைமைக் கருத்துகளில் மிக்க ஈடுபாடு உடையவர், பொதுவுடைமை இயக்கத்திற்குச் சிறந்த ஆதரவாளர் என்பதனை, இந்நூலே சொல்லும். எப்படிப்பட்ட இக்கட்டான நிலையிலும் பொதுவுடைமை இயக்கத்தின் பக்கமே நின்றவர் குருசாமி.

பொதுவுடைமை இயக்கத் தலைவர்களிலே ஒருவரான ஏ. எஸ். கே., குருசாமியைப் பற்றி ஒரு சமயத்தில் குறிப்பிட்டதை நினைவூட்டியாக வேண்டும்.

> "...தோழர் குருசாமி, பழுத்த ஒரு சோசலிஸ்ட் என்பதை நான் தெளிவாகக் கூறுகிறேன். கம்யூனிஸ்ட் கட்சியில் அவர் சேரவில்லையே தவிர, எங்களுடைய கொள்கைகள் அனைத்தையும் அவர் ஏற்றுக் கொண்டுதான் இருந்தார்.''

1964-ம் ஆண்டு சோசலிச வாழ்க்கை முறையை, இந்திய அரசு தனது கொள்கையாக ஏற்றுக் கொண்ட நேரத்தில், அதற்கு ஆதரவாக **"சீர் கேட்டின் வித்து"** என்ற தலைப்பில் குத்தூசியார் எழுதியதின் சுருக்கம் :—

"சோசலிசப் பாதையில் உலகுக்கு வழி காட்டிக் கொண்டு, வீர நடை போட்டுக் கொண்டிருக்கின்ற ரஷ்யாவில் 'தனிப்பட்ட மக்களிடம்' சிற்சில குறை பாடுகள் இருந்தாலும், சமுதாயத் துறையில் எவ்விதக் குறைபாடுகளும் இல்லை. இதைச் சோசலிச எதிரிகள் கூட ஒப்புக்கொள்கிறார்கள். அங்கு பிச்சைக்காரர்கள் இல்லை; வேலை கிடைக்காதார் இல்லை; விபச்சாரம் இல்லை; திருட்டு இல்லை.

ரஷ்யாவிலும், சீனத்திலும்தான் சோசலிசத்தின் விதை சரியான இடத்தில் ஊன்றப்பட்டு, பாதுகாத்துச் செடியாக்கி வளர்த்து வரப்படுகிறது.

தனியுடைமைப் பற்று இல்லாவிடில் உற்பத்தி ஊக்கமிருக்காது—மனித முயற்சி முன்னேறிச் செல்லாது—நாட்டின் செல்வ நிலை வளர்ச்சியடையாது—என்றெல்லாம் கூறி வந்தவர்களுக்குச் சரியான அடிகொடுத்து, சோசலிசத்தின் வெற்றிச் சின்னமாக எல்லாத் துறைகளிலும் முதல் இடம் பிடித்துக் கொண்டு ராக்கெட் வேகத்தில் முன்னேறிச் செல்கிறது ரஷ்யா.

இந்தியா மக்கள் தொகை பெருகியுள்ள நாடு. பல சாதிகள், பல மதங்கள், பல்வேறு பிரிவுகளைக் கொண்ட நாடு. பல நூற்றாண்டுகளாக வெளி நாட்டவர்க்கு அடிமைப் பட்டுக்கிடந்த நாடு. மதங் காரணமாக அறியாமையிலும், மூடப் பழக்கத்திலும் மூழ்கிக் கிடக்கும் நாடு. இத்தகைய நாட்டில், அமெரிக்கா போன்ற முதலாளித்துவ சமுதாய அமைப்பும், அம் மாதிரியான உயர்ந்த வாழ்க்கைத் தரமும் எல்லா மக்களுக்கும் கிடைக்குமாறு செய்யமுடியாது. அமெரிக்காவுக்குப் பிடிக்காத சோசலிச வாழ்க்கை முறைதான் இந்திய மக்களுக்குத்

தேவையானது.

இன்றையச் சமுதாயக் கேடுகளின் அடிப்படை என்ன?

தனியுடைமை ஆசைதான். வசதியான வாழ்க்கை, முதுமையில் பாதுகாப்பு, மனைவி—மக்கள் போன்றவர் களின் படிப்பு, இருக்கை, உணவு, உடை, மருத்துவ வசதிகள்—ஆகியவற்றுக்காக மனிதன் அல்லும் பகலும் அலைந்து திரிந்து, தேனீயைப் போல் பறந்து பறந்து பொருள் சேர்க்கிறான். இவ்வளவுக்கும் தேவையான வற்றுக்கு மேலும் சேர்க்கிறான். இது ஒரு பெருநோய். இது தான் எல்லாத் தீங்குகளுக்கும் அடிப்படை.

மேற்கண்ட தேவைகளின் பொறுப்பை யெல்லாம் அரசாங்கமே ஏற்றுக் கொள்ளுமானால் மனிதனுக்குத் தன்னுகர்ச்சி தவிர மற்ற தேவைகள் குறைந்து விடும். தன்னுகர்ச்சிக்காக ஆயிரக்கணக்கில், லட்சக்கணக்கில், கோடிக் கணக்கில் பணம் சேகரித்து, சேமித்து வைக்க வேண்டிய தேவையுமிருக்காது. உல்லாசப் பொழுது போக்கையும் (கடற்கரை, பார்க் போல) எல்லோருக்கும் பொதுவானதாக-கட்டணம் இல்லாததாக ஆக்கிவிட்டால் பணப் பேராசை மறைந்து விடும்.

குடும்பத் தேவைகளையெல்லாம் அரசாங்கம் நிறை வேற்றி வைக்கவேண்டும்-தெருக்கள், சுகாதாரம், குடிதண் ணீர், வெளிச்சம் முதலியவற்றின் பொறுப்புகளை நகர சபை ஏற்றுக்கொண்டிருப்பதைப் போல.

இதைச் செய்துவிட்டால், தனிப்பட்ட எவரும் வீடு, வாகனம், நகை, பணம் முதலியவற்றைத் தமக்காகத் தேடிக் கொள்வதிலோ, தம் மனைவி மக்களுக்காகத் தேடி வைப் பதிலோ கருத்துச் செலுத்தமாட்டார்கள். அவரவர் ஆயுளுக்குப் பிறகு அவர் தேடிய சொத்துகள் யாவும் அரசாங்கத்தின் பொதுச் சொத்தாகிவிடும் என்ற சட்ட மிருந்தால் உடைமை ஆசை அற்றுப்போய்விடும். அவரவர் மக்களுக்குப் போதிய கல்வியும், அதற்கேற்ற வேலையும் தருவதோடு பெற்றோரின் கடமையும்

கவலையும் முடிந்துவிடும். இந்த இரு பொறுப்புகளைக் கூட, ரஷ்யா மாதிரி, அரசாங்கமே ஏற்றுக்கொண்டால் வருமானவரி, மரணவரி போன்ற வரிகளுக்கும் தேவையிருக்காது.

இவைமட்டுமல்ல. பதுக்கல், லஞ்சம் போன்ற கேடுகளுடன், திருட்டு, கொலை, கொள்ளை போன்ற சமுதாயக் குற்றங்களும் அகன்றுவிடும்.

''இதைச் செய்வதானால், 'உழைக்காதவனுக்கு உணவில்லை' என்ற அடிப்படையிலும், தேவைக்கு மேற்பட்ட சொத்துகள் யாவும் அவரவர் ஆயுளுக்குப் பிறகு பறிமுதல் செய்யப்படும் என்ற அடிப்படையிலும் அரசியல் சட்டம் மாற்றியமைக்கப்பட வேண்டும். எவ்வளவு குற்றம் குறையிருந்தாலும், எல்லா பொது உற்பத்திகளையும், பங்கீடுகளையும், பணச்செலாவணித் துறைகளையும் அரசாங்கத்தின் பொது உடைமையாக்கிவிட வேண்டும். இதைச் செய்தாலொழிய, தனியுடைமை ஆசை உள்ள வரையில்-அதன் விளைவுகளாகிய ஒழுக்கக்கேடுகளையும் தீமைகளையும் ஒழிக்கவே முடியாது.

சீர்கேட்டின் வித்து எது என்பதை உணராதபடி, வெறும் வாய்ப் பந்தல் சோசலிசம் பயன் தராது.''

(குத்தூசி—செப்டம்பர் 1964)

## கடவுள்களை நாடு கடத்தவேண்டும் !

தந்தை பெரியாரும் குத்தூசியாரும் அவர்களது அருமைக் கருஞ்சட்டைப் படையினரும் சுமார் நாற்பதாண்டுகளாக, இடைவிடாது இரவு என்றும் பகல் என்றும் பாராது பகுத்தறிவுப் பணி செய்தும், மதச் சார்பற்ற நாடு என்று சொல்லிக்கொண்டிருக்கின்ற இந்திய நாட்டில், தலைவர்கள், அறிஞர்கள், ஆராய்ச்சி நிபுணர்கள், பலரும் மதம் பிடித்து ஆடுவதைக் கண்ட குத்தூசியார் 'கடவுளர்களை நாடு கடத்தினாலொழிய இந்த நாடு உருப்படாது' என்று எண்ணியதின் விளைவே இக் கட்டுரை :—

"கடவுள் மீது விசாரணை"

சாக்ரட்டீஸ், புத்தர், திருவள்ளுவர் — மூவரும் நீதிபதி நாற்காலிகளில் அமர்ந்திருக்கின்றனர். மூவரும் எழுதிய நீதி நூல் திரட்டுகள் மேசைமீது அடுக்கப் பட்டிருக்கின்றன.

இங்கர்சால், ஷெல்லி, ப்ராட்லா, சிவவாக்கியர், பர்னார்ட்ஷா, கார்ல் மார்க்ஸ், லெனின், சிங்காரவேலர்- ஆகியோர் அரசாங்க வக்கீல்களின் இடத்தில் அமர்ந்திருக் கின்றனர்.

சங்கரர், கிருஷ்ணன், இராமன், ரமணரிஷி—ஆகி யோர் குற்றவாளிகள் சார்பில் வக்கில்களாக அமர்ந்திருக் கின்றனர். இவர்களுக்கெதிரில் மேசைமீது மத நூல் களும், சாஸ்திரங்களும், புராணங்களும் திறந்துவைக்கப் பட்டிருக்கின்றன. (புத்தக ஏடுகள் காற்றில் பறக்காதபடி சங்கு, சக்கரம், விபூதிப் பை, நாமக் கட்டி, நூல் உருண்டை — முதலியவை 'பேப்பர் வெயிட்டு'களாக வைக்கப் பட்டிருக்கின்றன.)

குற்றவாளிகள் அழைக்கப்படுகின்றனர்.

கோர்ட் சேவகன் ;— "கிருஸ்துக் கடவுள்! கிருஸ்துக் கடவுள்! கிருஸ்துக் கடவுள்!

"இஸ்லாம் கடவுள்! இஸ்லாம் கடவுள்! இஸ்லாம் கடவுள்!

"இந்துக் கடவுள்! இந்துக் கடவுள்! இந்துக் கடவுள்"

ஒருவர்பின் ஒருவராக, முதல் இரண்டு மதக் கடவுள் களும் வந்து, குற்றவாளிக் கூண்டில் நிற்கிறார்கள். கடைசி யாக "இந்துக் கடவுள்" என்று கூப்பிட்டவுடனே, ஒரே சந்தைக் கூட்டம் மாதிரி, ஆயிரக்கணக்கானவர் முண்டி யடித்துக்கொண்டு கோர்ட்டுக்குள்ளே நுழைந்தார்கள்! இக் கூட்டத்தில் 20-30 பேர் பெண்களுமிருந்தார்கள்!

நீதிபதிகள் இக் காட்சியைக் கண்டதும் திடுக்கிட்டுப் போய், "இந்த மாதிரி, ஒரு நாட்டு மக்களே திரண்டு வருவதுபோல் வந்தால், வழக்கை எப்படி விசாரிக்க

முடியும்? அதுவும் நாலு கை ஆட்கள்! யானை முகப் பேர் வழி! ஆறுதலை ஆசாமி! சே! சே! சே! பார்க்கச் சகிக்க வில்லை! போங்கள். வெளியே! உங்கள் பிரதிநிதிகளாக இரண்டே இரண்டு பேர் மட்டும் உள்ளே வந்தால் போதும். மற்றவர்களெல்லோரும் கோர்ட்டுக்கு வெளி யிலும் வேண்டாம்! தெருவிலும் நின்று போக்குவரத் துக்குத் தடையாயிருக்க வேண்டாம்! எங்காவது அணு குண்டு சோதனை இடத்தில் போய் அமர்ந்திருங்கள்!'' என்று கட்டளையிட்டார்கள்.

'இரண்டு பிரதிநிதிகள் யார் யார் என்பதில் ஒருமணி நேரம் சண்டை சச்சரவும், அடிதடியும் நடந்து, பல கடவுள்களுக்கு இரத்தக் காயமும் ஏற்பட்டது. இறுதி யாக பரமசிவனும் மகாவிஷ்ணுவும் கோர்ட்டுக்குள்ளே நுழைந்தார்கள். கதவு தாளிடப்பட்டது. இருவரும் குற்றவாளிக் கூண்டில் நின்ற மற்ற இரு மதக் கடவுள்கள் அருகில் நின்றார்கள்.

**வழக்கு துவக்கம்**

**நீதிபதிகள்** : ''உங்கள் ஆதிக்கத்திலுள்ள மக்களில் பல பேர் வயிற்றுக்கில்லாமல் செத்து மடிவதாகவும், தீராத நோய்களினால் அற்பாயுளில் மடிந்து கொண்டிருப் பதாகவும், இதோ, இங்குள்ள சர்க்கார் வக்கீல்கள் குற்றம் சாட்டியிருக்கிறார்கள். குடிசைகளிலும். சாலையோரங் களிலும் நாள்தோறும் ஆயிரக்கணக்கான மக்கள் வயிறு வற்றி, உடல் தளர்ந்து சாகிறார்களாம். லட்சக்கணக் கானவர்களுக்குச் சொந்தத்தில் ஒரு குடிசைகூட இல்லை யாம்! நீங்கள்தான் இதற்குப் பொறுப்பாளிகளாம்! என்ன சொல்கிறீர்கள்? நீங்கள் குற்றவாளிகளா?''

**குற்றவாளிகள் நால்வரும சேர்ந்து** : ''இல்லை யில்லை; நாங்கள் நிரபராதிகள்; குற்றவாளிகளல்ல. இது வீண் அபவாதம்!''

**கார்ல்மார்க்ஸ்** [சர்க்கார் வக்கீல்] : ''நீதிபதி அவர் களே! இவர்களின் பாதுகாப்பிலுள்ள மக்களை வயிற்றுக்

குக்கூட இல்லாமல் சாகடிக்கின்ற இவர்களுக்குத் தூக்குத் தண்டனைகூட விதிக்கலாம் என்று தெரிவித்துகொள்கிறேன்.''

**குற்றவாளிகளின் சார்பு வக்கீல்கள்:** ''இல்லையில்லை! பட்டினிச் சாவுக்கும் எங்கள் கட்சிக்காரர்களுக்கும் சம்பந்தமேயில்லை. சாக்காடு என்பது அவரவர் தலை விதி; அதற்கு இவர்களென்ன செய்வார்கள்? பாவம்!''

**இங்கர்சால்** *[சர்க்கார் வக்கீல்]:* ''அப்படியானால் இவர்கள் ஏன் 'சர்வ வல்லமையுள்ளவர்கள்' என்று பறை யடித்துக் கொள்ளவேண்டும்? கையாலாகாத பேடிகள் என்று ஒப்புக்கொள்ளட்டுமே! பக்தகோடிகளின் வணக்கத் துக்கும், படையலுக்கும், அபிஷேகத்துக்கும், பண்டிகைக் கும் மட்டும் ஆசை! அவர்களுக்கு வயிறு நிறையச் சோறு போடுவதற்குக்கூட முடியவில்லையென்றால் இவர்களுக்கு ஏன் சவுக்கடித் தண்டனை தரக்கூடாது?''

**குற்றவாளிகள் நால்வரும் :** ''மாண்பு மிக்க நீதிபதிகளே! சர்க்கார் வக்கீல்கள் எங்களுக்குப் பிறவி எதிரிகள்! நீங்களும்கூட அப்படித்தான் என்று கூறினால் கோர்ட்டாரை அவமதித்த குற்றமாகும் என்று பயப்படு கிறோம். எங்களை வணங்கச் சொல்லி இந்த உலகிலுள்ள எவரையாவது நாங்கள் கேட்டதுண்டா? எங்களுக்குப் படையல் போடச் சொல்லியும், படுக்கையறைக்கு அழைத்துப்போகச் சொல்லியும், உடம்பு தேய்த்துக் குளிப்பாட்டச் சொல்லியும், மண்டி போட்டுப் புகழச் சொல்லியும் யாரைக் கேட்டோம்? மக்களையெல் லாம் காப்பாற்றுவதாக நாங்கள் ஒப்புக்கொண்டதே யில்லையே! இவர்களாகவே எங்களுக்குத் தொல்லை கொடுக்கிறார்களே ஒழிய, நாங்கள் இந்த அற்ப மனிதர் களின் வாழ்த்தை எதிர்பார்த்தா வாழ்கிறோம்? நீதிபதிகள் தீர விசாரித்து நீதி வழங்கவேண்டும்.''

**நீதிபதிகள்:** [குற்றவாளிகளை நோக்கி] ''நீங்கள் சொல்வதிலும் சிறிது உண்மையிருக்கிறது. ஆனால், மக்கள் உங்களை நம்பித்தானே ஏமாறுகிறார்கள்?

மற்றவர்களையும் ஏமாற்றுகிறார்கள்? மனித துன்பங்களுக்கு நீங்கள் பொறுப்பாளியல்ல என்றாலும் நீங்கள் மனிதர் வாழ்கின்ற உலகத்தில் நடமாடுகின்ற வரையில் உங்களைச் சும்மாவிடக் கூடாது என்று கருதுகிறோம். மனிதர் வாழ்கின்ற பூ மண்டலத்தில் உங்களுக்கென்ன வேலை? உங்கள் நாட்டைவிட்டுப் பூ உலகத்திற்குக் குடியேறியதே தப்பு! ஆதலால் உங்கள் நால்வரையும் நாடு கடத்தத் தீர்ப்பளிக்கிறோம். இனிமேல் நீங்களும், உங்கள் பரிவாரங்களும் மனிதர்கள் உள்ள இடத்துக்குச் செல்லக்கூடாது. தெய்வலோகத்தை விட்டு நகரவே கூடாது என்று தீர்ப்பளிக்கிறோம்.''

('குத்தூசி' டிசம்பர் 1964)

**'அறிவுப் பாதை'**

'குத்தூசி' இலக்கிய மாத இதழாக இருப்பதால், புதுப்பிக்கப்பட்ட சுயமரியாதை இயக்கத்தின் கொள்கைகளை விளக்க வார இதழ் ஒன்று தேவைப்பட்டது.

எனவே, 1964 மே தினத்திலிருந்து 'அறிவுப் பாதை' வார இதழ் தொடங்கப்பெற்றது.

இந்தச் சமுதாயப் புரட்சி ஏட்டை வெளியிடுவதற்கு, உலகத் தொழிலாளர் புரட்சி நாளான மே தினத்தையே குருசாமி தேர்ந்தெடுத்தார்.

'குத்தூசி'யும் 'அறிவுப் பாதை'யும் ஒரே இலட்சியத்தை நோக்கிச் சென்றன.

''அரசு அலுவலகங்களில் உள்ள கடவுள் படங்களை அகற்றி விட வேண்டும். மதச் சார்பற்ற நாட்டில் எந்த மதத்தினுடைய அடையாளங்களும் இருப்பது தவறு. சாதியையும்' மதத்தையும் வளர்த்து வருகின்ற — கோயில்கள், மசூதிகள், சர்ச்சுகள், சிலைகள், விழாக்கள், பண்டிகைகள் முதலியவற்றை — அரசாங்கம் அனுமதித்துக் கொண்டிருப்பது தவறு. இவற்றை ஊக்கப்படுத்திக் கொண்டும், மத உணர்ச்சியைத் தூண்டிவிட்டுக் கொண்டுமிருக்கும் அரசாங்கமே முதல் நம்பர் விரோதி.

சாதி உணர்ச்சிக்கு வித்துப்போன்ற பூணூல் அணியும் விழா விற்கும், கிறிஸ்துமஸ், நபிவிழா, இந்துமதப் பண்டிகைகள் போன்ற வற்றிற்கும் அரசாங்கம் பொது விடுமுறை தருவது, மேலும் மேலும் மத உணர்ச்சியைக் கிளறி விடுவதாகும்'' என்று அரசாங்கத்திற்குக் கடிதம் எழுதினார்.

சென்னை மாநகராட்சியின் நிர்வாகத்திலுள்ள நடை பாதைக் கோயில்களையும் அகற்ற வேண்டும் என்று பல முறை வற்புறுத்திக் கட்டுரைகள் எழுதினார்.

1965-ல் இந்திப் புயல் மீண்டும் தமிழகத்தில் வீசத் தொடங் கியது.

இது நாட்டின் ஒற்றுமைக்குக் கேடாகும் என்பதை எடுத்துக் காட்டி 'மொழியும் மதமும்' என்ற தலைப்பில் தத்துவ ரீதியாக-தக்க ரீதியாக குருசாமி எழுதியது அனைவருடைய சிந்தனைக்கும் ஒரு விருந்தாகும்.

குருசாமி இவ்வாறு எழுதிக் கொண்டிருந்த காலத்தில் 1965-ம் ஆண்டு ஜனவரி 26-ல் திராவிட முன்னேற்றக் கழகம் இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியில் ஈடுபட்டது. மாணவர் சமுதாயமும் இதில் நேரடி யாகக் கலந்து கொண்டது.

அன்றையத் தமிழக அரசு கடுமையான தாக்குதல் செய்தது. பல இடங்களில் துப்பாக்கிப் பிரயோகமும் நடத்தியது. போலீசார் தரப்பிலும் மக்கள் தரப்பிலும் பலர் பலியாயினர்.

இது குறித்து, ''தமிழர் கொந்தளிப்பு'' என்ற தலைப்பில் குருசாமி மையினால் அல்ல—கண்ணீரால்—தனது கண்டனத்தைத் தெரிவித்தார்.

குருசாமி காங்கிரசுத் தலைவர் காமராசரைச் சந்தித்து— பேட்டி காண ஏற்பாடு செய்தார்.

மோகன் குமாரமங்கலம், மு. வரதராசனார், சோ. லட்சுமிரதன் பாரதியார். செங்கல்வராயன், திருமதி அனந்த நாயகி, திருமதி இலட்சுமி பாரதி அம்மாள் ஆகியோருடன் குருசாமி காமராச ரைக் கண்டு பேசினார்.

காங்கிரசுக் காரியக் கமிட்டியில் இதுபற்றி முடிவெடுத்து, எல்லா மாநிலங்களின் இசைவும் பெறும்வரை, ஆங்கிலமும் ஆட்சி

மொழியாகத் தொடர்ந்திருப்பதற்குச் சட்டபூர்வமான பாது காப்புச் செய்வதாகவும், மாநிலத்தில் தமிழ் ஆட்சி மொழி யாகவும், இதரவகையிலும் வளர்வதற்கு ஆவன செய்வ தாகவும் காமராசர் குருசாமி குழுவினருக்கு உறுதி அளித்தார். கல்லூரி மாணவர்கள், ஆசிரியர்களுக்கு எதிரான அரசு நடவடிக்கை சம்பந்தமாகக் கவனிப்பதாகவும் காமராசர் உறுதி கூறினார்.

1965 ஏப்ரல் 23-ம் தேதி, தமது அறுபதாவது பிறந்த நாளில் 'பெரியாரின் பெருந்தொண்டு' என்று 'அறிவுப் பாதை'யில் எழுதிய தலையங்கம், மனிதாபிமான உணர்ச்சியுள்ள எந்தவொரு மனித னையும் உலுக்கிவிடும். தனது பிறந்த நாளில் தனது தலைவரின் கொள்கைபாலுள்ள பற்றின் காரணமாக, குருசாமி எழுதிய ஒவ் வொரு சொல்லும் கடந்த காலப் பகுத்தறிவு இயக்கத்தின் வரலாற்றை விவரிக்கும்.

ஆந்திரநாட்டு நாத்திகக் கழகத் தலைவரும் காந்தியாரின் நண்பரும், "காந்தியாருடன் ஒரு நாத்திகர்" (An Atheist with Gandhiji) என்ற நூலை எழுதியவருமான நாத்திகர் கோராவை முதன் முறையாகத் தமிழகத்துக்கு அறிமுகப் படுத்தினார்.

'கோரா'வின் அந்த நூலை லட்சுமிரதன் பாரதியாரைக் கொண்டு ஆங்கிலத்திலிருந்து மொழி பெயர்க்கச் செய்து 'குத்தூசி' இதழில் தொடர்ந்து வெளியிட்டார்.

## தீண்டாமை ஒழிப்பு மாநாடு

தஞ்சை 'அம்பேத்கார் மிஷன்' சார்பில் 13-6-1965 அன்று தஞ்சை யில் ஒரு மாநாடு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அம் மாநாட்டை திருச்சி 'தொண்டு' வீராசாமி முன்னின்று நடத்தினார்.

இம் மாநாட்டில் இந்திய சமூகப் பாதுகாப்பு அமைச்சர் மரகதம் சந்திரசேகரன், தி.பொ. வேதாசலனார், குத்தூசி குருசாமி ஆகியோர் கலந்துகொண்டனர்.

"தீண்டாமையும், தீண்டாமை ஒழிய வழியும்" என்பது பற்றி குருசாமி நீண்டதொரு சொற்பொழிவாற்றினார். அதன் சாரம்:

"தீண்டாமை ஒழிப்பு என்பது அவ்வளவு சுளுவான வேலையல்ல. காந்தியார், பெரியார் முதல் அம்பேத்கார்

வரை, பல தலைவர்கள் பல ஆண்டுகளாக பல மாதிரி யான பிரச்சாரங்கள் செய்தும் ஒரு குண்டூசி முனையளவு கூட வெற்றிபெற முடியவில்லை. இதிலிருந்து, ஆதித் திராவிட மக்களாகிய நீங்கள் தெரிந்து கொள்ளவேண் டியது-'பாதிக்கப்படுபவர்கள் பலாத்காரத்தில் இறங்க வேண்டுமென்பதுதான்'. அப்படிச் செய்தாலொழிய தீண் டாமையை ஒழிக்க முடியாது.

"தீண்டாமையைக் கையாளுகிற சாதி இந்துக்களை யும், அவர்களுடைய பண்டிகைகளையும் நீங்கள் ஒதுக்க வேண்டும். அதில் நீங்கள் உறுதியாகவும் இருக்கவேண்டும். சாதி இந்துக்கள் என்பவர்கள் தங்களது அகம்பாவங்களை அவ்வளவு சுளுவாக விட்டுக் கொடுக்கமாட்டார்கள். நீங்கள்தான் அவர்களிடமிருந்து அடித்துப் பறித்து உங்களது உரிமைகளைப் பெற்றுக்கொள்ள வேண்டும்."

சாதி ஒழிப்புப் பணியில் முழு மூச்சுடன் பணியாற்றிய குருசாமி பலாத்காரத்தில் இறங்கியாவது, சாதியை ஒழித்தே தீரவேண்டும் என்று முழங்கினார்.

## தகுதி திறமை

இந்தச் சமயம், மேல் சாதிக்காரர்களும் அவர்களது தலைவர் களும் பின்தங்கிய மக்கள் பெரும் பதவிகள் பெற்று வருவதைக் கண்டு பொறாமை கொண்டு பொருமினர்.

பிற்பட்டவர்களுக்குக் கல்விச் சலுகையும் பதவிச் சலுகையும் தருவதினால் நிர்வாகத் திறமை குறைந்து விட்டதென்றும் அவ் விதம் வழங்குவது அரசியல் சட்டத்தின் அடிப்படை உரிமைக்கு மாறானது என்றும் காரணம் காட்டி தமிழ்நாடு, மைசூர் போன்ற மாநில உயர்நீதி மன்றங்களில் வழக்குத் தொடர்ந் தனர். இச் செயலைக் கண்டித்து குத்தூசியார் எழுதியது:

"எது தகுதி? எது திறமை?" எப்பொழுது இந்தத் தகுதி திறமை வந்தது?"

"எந்தவொரு முயற்சியிலும், தொழிலிலும் மனிதனுக் குத் தகுதியும் திறமையும் இருப்பது அவன் பிறப்பை அடிப்படையாகக் கொண்டல்ல. பிறப்பினால் ஏழையா

கவோ, கறுப்பனாகவோ, கீழ்சாதியாகவோ பிறந்தவர்களில் ஆயிரக்கணக்கானவர் படிப்பினாலும், உழைப்பினாலும் உயர்ந்து உலகப் பெரியார்களாகியிருக்கின்றனர். அதிசய நிபுணர்களாயிருக்கின்றனர்.

"பரம்பரைப் பண்பு அல்லது திறமையென்பது மிகச் சிறிய அளவுக்குத்தான் உண்மை. உடல் தோற்றத்தைப் போன்ற அளவுக்கு, திறமை என்பது பரம்பரையால் வருவதல்ல.

"தகுதி, திறமை என்பது இந்த அணுசக்தியுகத்தில் வெறும் பூச்சாண்டி. ஆண்களுக்குள்ள தகுதியும் திறமையும் பெண்களுக்குக் கிடையாது என்பதை ரஷ்யப் பெண்மணி வாலண்டினா பொய்யாக்கிக் காட்டிவிட்டார்.

"தாழ்த்தப்பட்ட மக்களுக்குத் தகுதியும் திறமையும் கிடையாதென்பதை டாக்டர். அம்பேத்காரை அறிந்தோர் ஒத்துக்கொள்வார்களா?"

இவ்விதம் அறிவு பூர்வமாக எழுதி, அனைவரையும் சிந்திக்கச் செய்தார், குருசாமி. இவ்வாறான பல பிரச்சினைகளுக் கிடையேயும்—தமிழ்நாட்டுப் பகுதிகள் மட்டுமின்றி பெங்களூர் போன்ற வெளிமாநில நகரங்களுக்கும் சென்று, பல்லாயிரக்கணக்கான மக்களைச் சந்தித்துக் கருத்துப் பிரச்சாரம் செய்தார்.

## குருசாமியும் வானொலியும்

இந்திய வானொலி-அதிலும் குறிப்பாக சென்னை, திருச்சி வானொலி நிலையங்கள் எந்த நேரமும் கடவுள் பிரச்சாரத்தைச் செய்து கொண்டு இருப்பதைக் கண்டு குருசாமி, "அறிவு வளர்ச்சிக்கும் விஞ்ஞான வளர்ச்சிக்கும் பயன்படவேண்டிய ஓர் இடம் மதக் கிறுக்குப் பிடித்து ஆடுகிறதே" என்று உள்ளம் நொந்தார்.

1964-ம் ஆண்டு ஆகஸ்டு 11-ம் தேதி, வானொலித் துறை அமைச்சர் இந்திரா காந்திக்கும், சென்னை வானொலித் துறை அதிகாரிக்கும் ஒரு கடிதம் எழுதினார். அதன் சுருக்கம்:

"உலகில் ஒலி பரப்பப்படும் எந்த நாட்டு வானொலி நிகழ்ச்சியிலும், நம் நாட்டு வானொலியைப் போன்ற

கடவுள், மதப் பிரச்சாரம் நடைபெறுவதில்லை. இன்னும் கூற வேண்டுமானால், எந்த நாட்டிலும் வானொலி மூலம் மதப் பிரச்சாரம், கடவுள் பாதுகாப்புப் பிரச்சாரம் நடப்பதேயில்லை.

"தமக்கு கடவுள் நம்பிக்கையோ, மத நம்பிக்கையோ இல்லையென்று திட்டவட்டமாகக் கூறியுள்ள ஒரு உலகப் பெருந் தலைவரான நேரு ஆட்சியின் கீழேயே இந்த அக்கிரமச் செயல் இதுகாறும் நடந்து கொண்டு வந்ததுதான் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது. போகட்டும், சென்றதை மறந்து விடலாம்.

'எல்லோருக்கும் சமவாய்ப்பு' என்பது இந்திய அரசியல் சட்டத்தின் கூற்று. நம் ஆட்சியோ மதச் சார்பற்ற ஆட்சி. ஆகவே, என் வேண்டுகோள் இது: இந்தியாவெங்கும் கடவுள், மத நம்பிக்கையற்ற பகுத்தறிவுவாதிகள் பல்லாயிரக்கணக்கில் இருக்கின்றனர். இவர்களில் ஒரு சிலருக்காவது பகுத்தறிவு, நாத்திகம் ஆகிய அகில உலக இயக்க கொள்கைபற்றி வானொலியில் பேசுவதற்கோ, பாடுவதற்கோ விளக்கிக் கூறுவதற்கோ அடிக்கடி வாய்ப்புத் தர வேண்டுகிறேன். எடுத்துக்காட்டாக, முன்னாள் அமைச்சரும், இன்று அரசியல் கட்சி சார்பே இல்லாதவருமான திரு. எஸ். இராமநாதன் அவர்களையோ, பெரியார் ஈ. வெ. ராமசாமி அவர்களையோ, இக்கொள்கை விளக்கத்துக்குப் பயன்படுத்த வேண்டுகிறேன்.

"கடவுள், மதப் பிரச்சினைகளைப் பற்றிக் கவலைப் படாத பகுத்தறிவுவாதிகள் இந்த உலகில் ஏறத்தாழ மக்கள் தொகையில் மூன்றிலொரு பங்கு இருக்கின்றனர் என்பதையும் இங்கு நினைவூட்ட விரும்புகிறேன். பல்லாயிரக்கணக்கான பகுத்தறிவுவாதிகளான நாங்களும் வரிகொடுப்பவர்கள் என்பதை நினைவூட்டுகிறேன்."

இக் கடிதத்திற்கு இந்திய ஒலிபரப்பு அமைச்சரிடமிருந்து பதில் வரவில்லை.

ஆனால், சென்னை வானொலி நிலையம் பதில் அனுப்பி இருந்தது.

"தங்கள் 11-8-1964 கடிதம் கிடைத்தது. நன்றி. வானொலி நிகழ்ச்சியில் நீங்கள் எடுத்துக் கொண்டிருக்கும் அக்கறையைப் பாராட்டுகிறோம். ஆனால், உங்களால் கூறப்பட்டுள்ள தலைப்புகள் பற்றி வானொலியில் ஒலிபரப்ப ஏற்பாடு செய்யமுடியாமைக்கு வருந்து கிறோம்."—என்பதே!

இதற்கு முன்பு ஒரு முறை, சென்னை வானொலி நிலையத்தில் ஆச்சாரியார் கம்ப ராமாயணத்தைத் தொடர் சொற்பொழிவு செய்வதாக அறிவிக்கப்பட்டிருந்தது. உடனே குருசாமி 'வால்மீகி ராமாயணம்' என்ற தலைப்பில் தானும் ஒரு சொற்பொழிவாற்ற விரும்புவதாக வானொலி நிலையத்துக்குக் கடிதம் எழுதினார்.

வானொலி நிலையத்தாரோ குருசாமியைப் பேசவிடாமல் செய்ததுடன் ஆச்சாரியாருடைய இராமாயணச் சொற்பொழி வையும் நிறுத்திவிட்டனர்.

## கும்பகோணம் ஆறாவது மாநில சுயமரியாதை மாநாடு

1965 ஜூலை 11-ல் "ஆறாவது மாநில சுயமரியாதை இயக்க மாநாடு" கும்பகோணம் மூர்த்தி கலையரங்கில் நடைபெற்றது தமிழ்நாடு இதுவரை கண்டிராத வகையில் முழுக்க முழுக்க நாத்திக மணம் கமழுகின்ற வகையிலே இருந்தது இம் மாநாடு.

காவிரி நதிக் கரையில் நாத்திக வாதக் கருத்துரைகள் கரை புரண்டோடின. 'இயக்கப் பேரறிஞரும் எளியார்க்கு எளியாரு மான நகைச் சுவைப் பேச்சாளர்' தி. பொ. வேதாசலனார் மாநாட்டிற்குத் தலைமை தாங்கினார்.

ஆந்திர நாட்டு நாத்திக சங்கத் தலைவர் கோரா மாநாட்டைத் திறந்து வைத்துச் சொற்பொழிவாற்றினார்.

சோவியத் நாட்டுப் பிரதிநிதியாக சோவியத் தூதரகத்தைச் சேர்ந்த சுயங்காவ் கலந்து கொண்டு "பொதுவுடைமையும் நாத்தி கமும்" என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றினார்.

சென்னைப் பல்கலைக் கழகத்தின் ஆராய்ச்சி மாணவியான அமெரிக்கப் பெண்மணி மிஸ். பார்பரா சாலமன் இம் மாநாட்டிற்குச் சிறப்புப் பார்வையாளராகக் கலந்து கொண்டார்.

மாநாட்டில் தொடர்ந்து பேசியவர்கள் :

கேரளநாட்டு நாத்திகர் எடமருகு, அ. பொன்னம்பலனார், கே. டி. கே. தங்கமணி, சோ. லட்சுமிரதன் பாரதி, புலவர் ஆறுமுகம், ச. க. அரங்கராசன், எஸ். டி. விவேகி, இரா. செந்தாமரை, ஜி. சீனிவாசன், வ. வீராசாமி, சி. சுப்பையா, சைதை கு. மு. மாணிக்கம், பத்மாவதி ராமமூர்த்தி, சிவகாமி சிதம்பரனார், அமிர்தாகணேசன் முதலானோர்.

குத்தூசியாரின் சொற்பொழிவு பகுத்தறிவாளர்களுக்கு எழுச்சியும் புத்துணர்வும் ஊட்டியது. எடமருகுவின் மலையாளப் பேச்சை குத்தூசியாரே மொழிபெயர்த்தார்.

இம் மாநாட்டிற்கு இந்திய நாடெங்கிலுமிருந்து வாழ்த்துத் தந்திகள் அனுப்பியவர்கள்—

பஞ்சாப் ஜாதி மறுப்புக் கழகத்தலைவர் சாந்த்ராம். பூனா பல்கலைக் கழக முன்னாள் துணை வேந்தர் ஆர். பி. பராஞ்சிபே, கேரளம் 'யுக்தி வாதி' ஆசிரியர் எம். ஸி. ஜோசஃப், எர்ணாகுளம் வழக்கறிஞர் எம். பிரபா, அகில இந்தியப் பகுத்தறிவாளர் சங்கத் தலைவர் ஜே. டி. கர்னீலியஸ், பம்பாய் பண்பாட்டு உரிமைக் கழக ஆணையாளர் ஏ. பி. ஷா, பெல்ஹாம் எஸ். வி. கிர்லோஸ்கர், ஜி.டி. நாயுடு, மணலி கந்தசாமி, கே. பாலதண்டாயுதம், ஏ. குப்தா, ஏ. சாம்பசிவராவ், ஏ. பி. ஆர். சுந்தரபாண்டியன், கலைஞர் மு. கருணாநிதி, இரா. நெடுஞ்செழியன், தஞ்சை ராஜகோபால், ஆத்தூர் இசையழகன், உ. கந்தசாமி, தெனாலி ஏ. கோபால கிருஷ்ண மூர்த்தி.

பல்லாயிரக்கணக்கான பேர் கூடியிருந்த இந்த மாநாட்டில் மக்கள் முன்னேற்றத்துக்குத் தேவையான பல தீர்மானங்கள் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டன. அவற்றுள் சில—

1. அ. "கலப்பு மணம் செய்துகொள்பவர்களுக்கும், அவர்களது குழந்தைகளுக்கும் கல்வி, பணித்துறை வேலைகள், மானியங்கள் முதலிய எல்லா

வசதிகளிலும் தனிச் சலுகை அளிக்கவேண்டும்.

ஆ. தீண்டாமையைப் போலவே, சாதி வேற்றுமை காட்டுவதையும், சட்டப்படி தண்டிக்கப்பட வேண்டிய குற்றமாக ஆக்க வேண்டும்.

2. "அரசாங்கப் பணிமனைகள், நகர ஊர்மன்றங்கள், மருத்துவ நிலையங்கள், பாங்குகள், அணைக்கட்டுகள், பாலங்கள் முதலிய எல்லோருக்கும் பொதுவான இடங்களில் கோயில்கள், சிலைகள், படங்கள் முதலியவற்றை வைத்திருப்பதும், அவற்றுக்கு வணக்கமுறைகள் ஏற்பாடு செய்வதையும் அரசாங்கம் உடனடியாகத் தடுத்து நிறுத்த வேண்டுமென இம் மாநாடு தீர்மானிக்கிறது.

3. "குடியரசுத் தலைவர், துணைத் தலைவர், கவர்னர்கள், மந்திரிகள் போன்ற அரசியல் பதவி வகிக்கும் எவரும் அரசாங்கச் செலவு, சலுகைகள், வசதிகள் முதலிய எதையும்,எவ்விதத்திலும் பயன்படுத்தித் தனிப்பட்ட மதசம்பந்தமான கும்பாபிஷேகம், மசூதி திறப்பு, கிறிஸ்துவக் கோயில்கள், சாயிபாபா பண்டிகைகள் முதலிய எந்த விழாக்களிலும் கலந்து, அவற்றிற்குச் சிறப்பும், பிரச்சாரமும் தருவதை நிறுத்திவிட வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறது.

('அறிவுப் பாதை' 30-7-1965)

**ஓயாத உடல் ஓய்ந்தது**

குடந்தை மாநாட்டுக்குப்பின் சுயமரியாதை இயக்கத்தின் வேகம் அதிகரித்தது. தமிழ்நாடெங்கும் தொடர்ந்து இயக்கக் கூட்டங்கள் நடைபெற்றன. சென்னை, வேலூர், திருச்சி, தஞ்சை, நாகை, பெங்களூர் போன்ற நகர்கள் மட்டுமன்றி, சிற்றூர்களுக்குள்ளும் புகுந்து சொற்பொழிவுகள் நிகழ்த்தினார் குத்தூசியார்.

ஆங்காங்கே சுயமரியாதைத் திருமணங்களையும் நடத்தி வைத்தார்.

1965 அக்டோபர் 17-ல் கடலூரில், சுயமரியாதை இயக்க மத்திய நிர்வாகக் குழுக் கூட்டத்திற்கு குருசாமியே முன்னின்று ஏற்பாடுகள் செய்துவந்தார். இயக்க முன்னணி வீரர்களுக்கும் தாமே கடிதங்கள் எழுதி, கூட்ட நிகழ்ச்சிகளைப் பற்றித் தெரிவித்துக் கொண்டிருந்தார்.

இயக்க ஏடான 'அறிவுப் பாதை'யின் வளர்ச்சி பற்றியும், இயக்கத்தின் வருங்காலத் திட்டம் பற்றியும் விவாதிப்பதற்காக ஏற்பாடு செய்யப்பட்ட கூட்டமே இது.

இயக்கத் தோழர்கள், குத்தூசியாரின் வருங்காலத் திட்டத்தை அறியவேண்டுமென்று மிக்க ஆவலோடு எதிர்பார்த்த அக்டோபர் 17-ல் தமிழகமே எதிர்பாராத ஒன்று நடந்தது. புதுத்திட்டம் கிடைத்து, செயல்வீரர்கள் களித்திருக்கவேண்டிய அந்தக் கடலூர்க் கூட்டம் குத்தூசியாரின் அனுதாபக் கூட்டமாகவே நடந்தது.

'சொல்லுக்கும் செயலுக்கும் தொடர்பு காட்டி, உதட்டுக்கும் உள்ளத்துக்கும் உறவு வைத்து, கொள்கைகளை நிறைவேற்றி வாழ்ந்துகாட்டிய கொள்கைவேள்'—

'எளிமை, சுறுசுறுப்பு, மிகுந்த கட்டுப்பாடு, மனத்தூய்மை, நேர்மை குன்றாத மிக்க நிதானம் இவற்றுடன் வாழ்க்கையை நடத்திய நாத்திகச் செம்மல்'—

'எண்ணத்தில், எழுத்தில், பேச்சில் செய்கையில் எல்லா வற்றிலும் ஒரே மாதிரியான கொள்கையுள்ள பெரியார்'' குத்தூசி குருசாமி 1965 அக்டோபர்த் திங்கள் பதினோராம் நாள் பகல் ஒரு மணிக்கு மாரடைப்பால் காலமானார்.

எந்த மனிதனுக்கும் நட்பின் விளைவால் இரண்டொரு தீய பழக்கங்களாவது இருப்பதுண்டு. இது மனித இயற்கை என்று கூடச் சொல்லலாம். ஆனால், தீய பழக்கங்கள் என்று கூறப்படுகின்ற சூதாட்டம், மது, சிகரெட் பிடித்தல், பொடி போடுதல் போன்றவை எதுவும் குத்தூசியாரிடம் இல்லை என்பது யாவரும் அறிந்த சங்கதியாகும்.

உணவைப் பொறுத்தமட்டில், இவர் இறைச்சி உணவை அறவே வெறுத்தாலும் அவ்வுணவு உண்பவரைக் கண்டிப்பதோ, அவர்களுடன் அமர்ந்து உண்பதை வெறுப்பதோ கிடையாது. இவருக்கு நாக்கு ருசி மிக மிக அதிகம். இனிப்புப் பண்டங்களை உண்பதில் தனி ருசி. இவருக்கு மிகவும் பிடித்த சிற்றுண்டி தஞ்சை—திருவாரூர் ஆகிய பகுதிகளில் விற்கும் 'ரவா தோசை'யும் சாம்பாரும்.

குருசாமியின் நகைச்சுவை இன்பத்தைப் பற்றி ஒரு நூலே எழுதலாம். உண்ணும் போதும் சரி, உரையாடும்போதும் சரி, -உறங்கும் வேளை தவிர மற்றெப்போதும்-சிரிப்பதும், சிரிக்க வைப்பதும் இவர் இரத்தத்திலேயே கலந்தது என்பதை இவருடன் சிறிது நேரம் பழகியவர்கள் கூட எளிதில் அறிந்திருந்தார்கள்.

உள்ளத்தில் மட்டுமல்ல; வெளியிலும் களங்கமில்லாதவராக இருந்தவர், குருசாமி. தாம் எழுதும் மேசை, படுக்கும் அறை, புத்தக அலமாரிகள் ஆகிய எதையும் மிகவும் ஒழுங்குடனும், தூசியின்றித் துப்புரவாகவும் வைத்துக் கொள்வார். உடைகளைப் பொறுத்தவரை மிகவும் எளிமையையும் விலை மலிவையுமே விரும்புவார்.

திருமணமாகும் வரை நகர நாகரிகம் பற்றி அதிகம் தெரியாதவர். 'பாண்ட்', 'கோட்', 'பூட்ஸ்', 'டை' முதலியன அணியத்தெரியாதவர். சொல்லப் போனால், குஞ்சிதம் அம்மையார்தான் முதன் முதலில் 'நெக்டை' கட்டக் கற்றுக் கொடுத்தார்.

இது இவர் எவ்வளவு எளிமையான, கிராமிய வாழ்க்கை

யிலேயே வளர்ந்தவர் என்பதற்குச் சான்றாகும்.

எதையும் கூடுமானவரையில் தாமாகவே செய்து கொள்ளும் பழக்கமுடையவர். தோட்ட வேலையிலிருந்து மூட்டை தூக்குவது, தேங்காய் உரிப்பது வரையில் எதையும் சிறிதும் வெட்கமோ, கூச்சமோ கொள்ளாமல் தாமே செய்வார். தம் உடைகள் அனைத்தையும் தாமே துவைத்துக் கொள்வார். தம் உடைமைகளாகிய புத்தகம், பேனா, கடிகாரம், மூக்குக் கண்ணாடி முதலிய பொருள்களைப் பத்திரமாக அது—அதை — அந்தந்த இடத்தில் பத்திரமாக வைத்துப் பாதுகாத்துக் கொள்வார்.

உண்மைக்கே உலகில் இடம் இருக்கவேண்டும் என்பதில் இவருக்கு அசையாத நம்பிக்கையும், பற்றும் உண்டு. எதையும் எதிர்க்கத் துணிந்தவர். அஞ்சா நெஞ்சினர். இப் பற்றுதலுக்காக குத்தூசியாரின் மகள் (டாக்டர் கு.கு.ரஷ்யா M.B.B.S.) "ஏனப்பா, நீங்கள் இப்படி உண்மையைக் கூறி எல்லோரையும் பகைத்துக் கொள்கிறீர்கள்? பிழைக்கும் வழியைப் பற்றிய பல நூல்களை இங்கிலீஷில் படிக்கிறீர்களே! ஏன் நீங்களும் அப்படி நடக்கக் கூடாது?'' என்று கேட்பதுண்டு. அதற்குக் குத்தூசியார், "அப்படி நடப்பதற்குத்தான் பலர் இருக்கிறார்களே!'' என்று சிலரின் பெயர்களைச் சரமாரியாக வீசிவிட்டு, "ஆகவே தானம்மா, யாரும் வாழ்க்கையில் செய்யத் துணியாத வேலையை நான் செய்கிறேன். உண்மையைச் சொல்வதென்றாலே பகைமை ஏற்படத்தான் செய்யும். அன்றைய சாக்ரடீசிலிருந்து இன்றையப் பெரியார் வரையில் பலர் இதற்காகவே பாடுபடவில்லையா?'' என்பார்.

ஒருமுறை குஞ்சிதம் அம்மையாரிடம் குருசாமி இவ்விதம் சொன்னார்:

"நான் மட்டும் திருமணம் செய்து கொள்ளாமலிருந்தால் ஒரு ஸ்டாலினைப் போலவோ, ஒரு லெனினைப் போலவோ அல்லது ஒரு பகவத் சிங்கைப் போலவோ – எப்பேர்ப்பட்ட புரட்சியான காரியமும் செய்ய அஞ்சியிருக்கமாட்டேன்.'' இந் நிகழ்ச்சி இவரது புரட்சிக் கொள்கையை மட்டுமின்றி இவரது

சுதந்திர வேட்கையை வெளிப்படுத்துகிறது.

இனி இவர் இல்வாழ்க்கையில் உள்ள இரண்டொரு குறிப்புகள்:

1928-ல் கல்லூரிப் படிப்பை முடித்துப் பெரியாருடன் நட்புக்கொண்டார்.

அவருடைய 37 ஆண்டுப் பொதுவாழ்வில் 27 ஆண்டுபத்திரிகைகளின் ஆசிரியர், மக்கள் தலைவர், இடையில் 10 ஆண்டு சர்க்கார் ஊழியர். இவருடன் டில்லி அரசாங்கத்தில் பணியாற்றியவர்கள் பலர் இரண்டாயிரம் ரூபாய் சம்பளம் வரை பதவியிலிருந்தனர்.

ஒரு முறை குத்தூசியாரின் மகன் (கு.கு. கவுதமன் பி. இ.), "ஏனப்பா! நீங்கள் அதிகப் பணம் பெருக்கும் வழிகளை, கொள்கை லட்சியத்திற்காக ஒதுக்கித் தள்ளி விடுகிறீர்களே! இக் காலத்தில் அறிவிலிகள், அக்கிரமக்காரர்கள் எல்லோரும் பண பலத்தால் எல்லா வசதிகளையும் அடைந்து விடுகிறார்களே, நீங்கள் மட்டும் இப்படியிருக்கிறீர்களே!" என்று கேட்டபோது, "பணம் ஒன்று தான் வாழ்க்கையின் குறிக்கோள் என்றால், பன்றிக்கும் பகுத்தறிவு மிக்க நமக்கும் என்ன பாகுபாடு? பெரும் பணம் அவசியம் என்றால், நான் இன்று கூடத் திரட்ட எத்தனையோ வழிகள் தெரியும். அதை எப்பொழுது வேண்டுமானாலும் ஏற்படுத்திக் கொள்ளலாம். ஆனால், அது எனக்குத் தேவையில்லை என்று கருதியே இருக்கிறேன்" என்றார்.

இனி, இவர் எழுத்து பற்றி ஒரு வார்த்தை: தலையங்கமோ, 'குத்தூசி'யோ எழுதுவது தனிரகம். இவர் தினந்தோறும் எழுதும் போது பல இடையூறுகள் இருக்கும்.

டெலிபோனில் பேசிக்கொள்ளல், வீட்டு வேலைகளில் ஒரு கண் வைத்துக்கொள்ளல், அறையைப் பெருக்கச்சொல்லிப் பாதியில் எழுந்துவிட்டுப் பின்பு தொடர்ந்து எழுதுதல்—இப்படித்தான் கட்டுரை எழுதுதல் நடைபெறும். எத்தனை பக்கம் எழுதினாலும், எவ்வளவு பெரிய பிரச்சினையைப் பற்றி எழுதினாலும் அடிக்காமல் திருத்தாமல் பல பக்கங்கள் எழுதிக்

கொண்டேயிருக்கும் இவரது ஆற்றலைக் கண்டு மற்றவர் அதிசயப் பட்டதுண்டு.

பகுத்தறிவுக் கொள்கைகளைப் பொறுத்தமட்டில், இவர் அதில் வெறிகொண்டவர் என்றே கூறலாம். கொள்கையினின்று தம் கட்சிக்காரர் சிறிது வழுவினாலும் அவர்களை அறவே வெறுப்பார். சாதி உணர்ச்சி—மத உணர்ச்சி இல்லாமலேயே இவருடைய இரு குழந்தைகளையும் வளர்த்தார்.

இவர் தம் கட்சி வேலைகளிலேயே ஆழ்ந்துவிடாமல், தினமும் சில மணி நேரமாவது உடல் வளர்ச்சிக்கும், குன்றாத வலிமைக்கும் அவசியமான பூப் பந்தாட்டம் முதலிய விளையாட்டுகளில் செலவழிப்பார்.

பூப் பந்தாட்டம் மட்டுமின்றி—சடுகுடு, டென்னிஸ், நீந்துவது போன்றவற்றிலும் இவருக்குத் தனி ஆசை.

குருசாமி மிகவும் ஆசைப்படும் பொழுது போக்குகளில் நாடகம் மிகவும் முக்கியமானது.

1934-ல் இவர் 'இரணியன்' வேடம் தாங்கி இருமுறை நடித்ததைக் கண்ட சிலர் "நடிப்பும் பாட்டும் கூடவா தெரியும்?" என்று வியந்திருக்கின்றனர். நாலாந்தரமான நடிப்பைக் கொண்ட நாடகமாயிருந்தாலுங்கூட, கடைசிவரையில் பொறுமையாக அமர்ந்து பார்க்கும் வழக்கம் இவருக்கு உண்டு.

குருசாமி துருதுருவென்று எதிலும் அவசரப் படுவார். தீ அணைக்கும் படையினர்போல், அற்பக் காரியத்திற்கும் துடி துடித்துக் கொண்டு வேலை செய்வார். ஆத்திரமும், முன் கோபமும் அதிகம்.

தாம் வெறுப்பவைகளையும், தம் கொள்கைக்குப் புறம்பாக நடக்கும் கட்சிக்காரர்களையும் கடுமையாகத் தாக்கிச் சில சமயம் மனம் புண்படும்படியாகக்கூட எழுதியும், பேசியும் விடுவார். ஆனால், தனிப்பட்ட எதிரி என்று யாருமே இவருக்கு இல்லை. அத்தனை எதிரிகளும் கொள்கை எதிரிகள் என்றே கூறலாம்.

இவரது தனிப் பண்புகளில் சில: தலைமைக்குக் கீழ்ப்படிதல்; கட்சியில் கட்டுப்பாடு; வாழ்க்கையில் ஒழுங்கு முறை; குறித்த நேரத்திற்கு முன்பே எந்த நிகழ்ச்சிக்கும் செல்லுதல்; விரைவில் ஒரு முடிவுக்கு வருதல்: குடும்பத்தில் அக்கறை; மனைவி — மக்களிடம் பாசம்; சாதி உணர்ச்சியே இல்லாத-பரந்த எண்ணம்; விளம்பரம் விரும்பாத பொதுத் தொண்டு ஆகியவை.

இவ்வளவு படித்தும் நல்ல பெரிய புத்தகங்கள் பல எழுதும் திறனிருந்தும், அதில் கூரிய கவனம் செலுத்தி வந்தாலும் அதற்கான ஓய்வும் சூழ்நிலையும், தனிமையும், பொருள் வசதியும் இல்லாதபடியால், இவரது பரந்த படிப்பும், அநுபவமும் பெரிய நூல்கள் வடிவில் நிரந்தரமான பொக்கிஷங்களாக இருப்பதற்கு முடியாதபடி போய் விட்டன.

இவரது பொது வாழ்க்கையில் எத்தனையோ அதிர்ச்சிகள், ஏமாற்றங்கள், துரோகங்கள், எதிர்ப்புகள்! ஆனாலும்' இவைகளுக்காக அஞ்சியதோ, செய்தது தவறு என்று கருதியதோ இல்லை.

குருசாமி இவைகளுக்காக வருந்தியதுமில்லை. பின்வாங்கியதுமில்லை. சுயநலமும், பொறாமையும் இறுதியில் வெற்றி பெறமுடியாது என்பதை குருசாமி உணர்ந்திருந்தார்.

மனநிம்மதியான வாழ்க்கை, போதுமென்ற மனம் இவை தான் குருசாமியின் வாழ்க்கை அமைப்பு. பணம் பெருத்தவர்களைக் கண்டு இவர் பரிதாபப்படுவாரே தவிர, பொறாமைப் படுவதில்லை. குத்தூசியார், தமது வாழ்க்கைத் துணைவியாரை ஒருபோதும் அடிமையாக நடத்தியதே இல்லை. சரி சமமாகக் கருதி, தனக்கு உற்ற நண்பராகவே நடத்தினார்.

மனைவியாரை 'துணைவி' என்ற சொல்லின் முழுப் பொருளுக்கு ஏற்ப, உடலின் சரிபாதி என்றே மதித்துப் போற்றினார். குஞ்சிதமும் குருசாமியின் பொது வாழ்வுப் பணியில் உற்ற நண்பராக இருந்தவர். அம்மையாரும் குருசாமியைப் போலவே ஆர்ப்பாட்டமே இல்லாத, ஆழமாகப் படித்த, அசைக்க முடியாத மனவலிமை உடையவர். இருவரும் இறுதி வரையில் கொள்கை உறுதியில் பின்னடையவில்லை.

## சிறு கதைகள்

குத்தூசியார் சிறுகதை எழுதுவதிலும் வல்லவர். சுமார் நூற்றுக்கும் மேற்பட்ட கதைகள் எழுதியிருக்கிறார். எந்த ஆண்டில் கதை எழுத ஆரம்பித்தார் என்பது தெரியவில்லை. மலாயா 'தமிழ் முரசி'லும், 'விடுதலை' ஞாயிறு மலரிலும் கதைகள் எழுதி யிருக்கிறார்.

1962 அக்டோபரில் ஆரம்பித்த 'குத்தூசி' மாத இதழில் தொடர்ந்து பல சிறுகதைகளை எழுதியுள்ளார். அவர் இறப்பதற்கு இரண்டு நாட்கள் முன்னர் அவர் எழுதிய கதை 'மலடி பெற்ற பிள்ளை' என்பதாகும்.

அவர் எழுதிய சீர்திருத்தக் கதைகளான. 'பிச்சைக்காரி', 'சகுனத் தடை', 'திருப்பதி மொட்டை', 'பணமும் மனமும்', 'அடி வயிற்றுத் தீ', 'சந்தேகப் புழு', 'எச்சில் குட்டை'. 'அங்காளம்மன் மூக்குத்தி' முதலியவை குறிப்பிடத் தக்கவை, சிறு கதைகளில் சாதி வேற்றுமை, ஏழை—பணக்காரன் இடையே உள்ள இடைவெளி, பெண்கள் முன்னேற்றம், கணவன்—மனைவி எப்படி நடந்துகொள்ளவேண்டும், மற்றும் சமூகக் கொடுமைகள் போன்றவற்றை விளக்கி எளிய முறையில் எழுதியுள்ள கதைகளில், கதாபாத்திரங்கள் கண்முன் நிழலாடும் ஓர் உணர்வைத் தோற்று விப்பதில் வெற்றி பெற்றிருக்கிறார்.

சிறுகதைக்கு இது ஒரு சான்று. சந்தேகத்தின் கொடுமையைக் கண்டு அதில் பிறந்த கதைதான் இது:

### சந்தேகப் புழு

ஜெயராமன் - ஜானகி என்ற தம்பதியரிடையே ஏற்படும் சந்தேகத்தை வைத்து எழுதிய கதை இது.

ஜானகி நல்ல சிவந்த நிறமுடையவள். ஜெயராமன் சற்று நிறம் கம்மிதான், ஆனாலும் அவர்கள் மனமொத்து வாழ்ந்து வந்தார்கள். இவர்கள் வாழ்க்கைக்கு இடையூறாக அண்டை வீட்டுப் பெண்மணிகள் இருக்கின்றனர்.

''எவ்வளவு நல்ல ஜோடி! என்ன அன்பு! அப்படியல்லவா இருக்கவேண்டும்?''

''அதிலென்ன சந்தேகம்! ஒத்த வயது. கிட்டத்தட்ட ஒத்த படிப்பு. சொத்து சுகத்திலும் குறைவில்லை. ஆனால் அவர் மட்டும் இன்னும் கொஞ்சம் அழகாயிருந்தால் ..''

இந்த உரையாடலைக் கணவன்–மனைவி இருவருமே கேட்டு விடுகின்றனர். ஜெயராமனுக்கு ஒரு தாழ்வுணர்ச்சி குறுக்கிட்டது. ஜானகியை மெல்லப் பார்க்கிறான். அவள் அவனைத் தேற்றி, ''அழகு நொடியில் மறையக்கூடியது; இதற்காகவா இப்படி அலட்டிக் கொள்கிறீர்கள்?'' என்று அமைதிப்படுத்துகிறாள்.

இந்தத் தடை நீங்கியதும், அடுத்த தடையாக முளைப்பவன் சந்திரன். ஜானகிக்கு முறைப்பையன். மூன்றே வயது குறைந்தவன்.

கல்லூரியில் படிக்கும் அவன் விடுமுறைகளின்போது மட்டும் வந்து அவர்களுடன் தங்குவதுண்டு.

முதல் தடவை வந்தபோது தன் கணவனை எடுத்தெறிந்து பேசி விட்டதற்காக அவனைச் சண்டையிட்டு அனுப்பியவள் ஜானகி. பிறகு சந்திரன் இப்பொழுதுதான் வந்திருக்கிறான்.

ஜானகியும் பழசை நினையாமல் அவனது வெகுளித்தனங்களில் லயித்து கலகலப்பாயிருக்கிறாள்.

ஆனால், நெருக்கத்தைத் தவறாகப் புரிந்து கொண்டு சந்திரன், ஜானகி இருவர் மீதும் ஒரு தேவையற்ற வெறுப்பை வீசுகிறான் ஜெயராமன். சந்திரன் தன் வீட்டுக்குச் செல்ல, ஜெயராமனும் அதே சூட்டில் வெளியே சென்றவன் திரும்ப வந்து வீட்டில் நுழையும் போதும் கோபத்துடன் நுழைகிறான். வீட்டை விட்டுத் துரத்த வேண்டும்; அதற்கு உடன்படாவிட்டால் கொலை செய்து விடவேண்டும் என்ற எண்ணத்துடன் அவளை நெருங்குகிறான். அவள் உயிரோ உடலில்லை!

மேஜைமீது ஒரு கடிதம் கிடந்தது. அவனது சந்தேகத்துக்கு முற்றுப்புள்ளி வைக்கிறது அந்தக் கடிதம்.

ஆக, சந்தேகம் மனிதனை என்ன பாடு படுத்துகிறது என்பதைத் தெள்ளத் தெளிவாகப் பிட்டுப் பிட்டு வைத்து விடுகிறார் குத்தூசியார்.

## குருசாமி சூடிக்கொண்ட புனை பெயர்கள்

'ரிவோல்ட்' இதழில் 'எஸ்ஜி', 'ஸ்பெக்டேட்டர்', 'ப்ளெயின் ஸ்பீக்கர்' என்றும், குடி அரசு. புரட்சி, பகுத்தறிவு, புதுவை முரசு, விடுதலை ஆகிய இதழ்களில் — 'சி. அய். டி.'. 'காலி மணிபர்ஸ்' 'தெப்பக்குளம்', 'பாட்மிண்டன்', 'குகு', 'சம்மட்டி', 'சிவப்பழம்' 'குத்தூசி' என்றும் பல புனை பெயர்களில் கட்டுரைகள் எழுதி வந்தார் குருசாமி.

### குத்தூசியாரின் வாழ்க்கையில் சிறப்பு நிகழ்ச்சிகள்:

1906 ★ ஏப்ரல் 23—குருசாமி பிறந்த நாள்

1909 ★ ஜூலை 12—குஞ்சிதம் பிறந்த நாள்

1927 ★ வைதீகர் குருசாமி—நாத்திகர் குருசாமியாக மாறுதல்

1928 ★ திருக்கண்ணபுரத்தில் 'முனீஸ்வரர்' சிலை உடைப்பு

★ பெரியாரை ஈரோட்டில் சந்தித்தல்

★ 'ரிவோல்ட்'டில் — துணையாசிரியர் பொறுப்பு ஏற்றுக் கொள்ளுதல்.

1929 ஏப்ரல்—4 வியாழனன்று ஈரோடு ஈஸ்வரன் கோவிலுக்குள் ஆதித்திராவிடத் தோழர்களை அழைத்துக் கொண்டு ஆலயப்பிரவேசம்.

★ மே 25ல் பட்டுக்கோட்டை முதல் சுயமரியாதை இயக்கத் தொண்டர் மாநாட்டில் முதல் முறையாக வரலாற்றுச் சிறப்புமிக்க தலைமை உரை நிகழ்த்தல்.

★ ஈ. வெ ராவை—பெரியார் — என்று சிறப்புப் பெயரிட்டு அழைத்ததும் இம் மாநாட்டில் தான்.

★ டிச 8-ல் குஞ்சிதம் அம்மையாரைக் கலப்பு மணம் செய்து கொள்ளல்.

1930 ★ குஞ்சிதம்—குருசாமி தம்பதிகளிருவரும் ஒன்றாகச் சென்று பி. ஏ. பட்டம் பெற்றனர்.

★ ராஜமகேந்திரபுரத்தில் குஞ்சிதம் அம்மையார் ஆசிரியையாகப் பொறுப்பு ஏற்றுக் கொண்டார்.

1931 ★ ஏப்ரல்—20 முதல் ஆகஸ்ட் 10 வரை, சென்னை செம்பியத்தில் சப்-ரிஜிஸ்திரார் அலுவலகத்தில் எழுத்தராகப் பணி புரிதல்.

1931 ★ ஆக. 1 முதல்14 வரை, சென்னை மாவட்ட ரிஜிஸ்திரார் அலுவலகத்தில் எழுத்தராதல்.

★ ஆக. 15 முதல் 29 வரை, சென்னை போலீஸ் கமிஷனர் அலுவலகத்தில் எழுத்தர்.

★ குத்தூசியார் ஜீன்மெஸ்லியரின் 'பகுத்தறிவு அல்லது கத்தோலிக்க மதகுருவின் மரணசாசனம்' என்ற நூலை மொழி பெயர்த்தார்.

★ சோதிடம் பொய்—என வாதிட்டு வெற்றி பெற்றார்.

1932 ★ குஞ்சிதம் குருசாமி சென்னை, மயிலை லேடி சிவசாமி அய்யர் பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் துணைத் தலைமை ஆசிரியையாகப் பொறுப்பு ஏற்றார்.

★ திருச்சி, துறையூர் தமிழர் மாநாட்டில் கடவுள் வாழ்த்துக்குப் பதிலாகச் சுயமரியாதை இயக்கப் பாடலைப் பாடச் செய்தார்.

1933 ★ மே. 21-ல் குஞ்சிதம் அம்மையார் ஸ்ரீரங்கம் சுயமரியாதை மாநாட்டிற்குத் தலைமைப் பொறுப்பு ஏற்றார்.

★ அதன் காரணமாகப் பள்ளி துணைத் தலைமை ஆசிரியை பொறுப்பிலிருந்து விலக்கப்பட்டார்.

★ டிச. 21-ல் காந்தியாருடன் உரையாடல்.

★ டிச. 23, 24 தேதிகளில் சென்னை, பச்சையப்பன் கல்லூரியில் நடந்த தமிழன்பர் மாநாட்டில் தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் குறித்துத் தீர்மானம் நிறைவேற்றல்.

★ டிச. 31-ல் சென்னையில் நடந்த இந்தியாவின் முதல் நாத்திகா மாநாட்டில்—ம. சிங்காரவேலரால் "எனக்குப் பிறகு, எனது வாரிசுகளில் குறிப்பிடத்தக்கவர்களாக குருசாமியும் — ஜீவானந்தமுமே வருவார்கள்" என்று குறிப்பிடல்.

★ "நான் ஏன் கிறிஸ்துவன் அல்ல?"—என்ற ரஸ்ஸலின் நூலைத் தமிழாக்கம் செய்தல்.

1934 ★ செப். 9-ல் பாரதிதாசனின் இரண்யன் நாடகத்தை தாமே இரண்யனாக நடித்து அரங்கேற்றி வைத்தார்.

1935 ★ குருசாமி, சென்னை லோகல் போர்டு இன்ஸ்பெக்டர் அலுவலகத்திலிருந்து உதவிப் பஞ்சாயத்து ஆபீசராக கடலூர் சென்றார்.

★ குஞ்சிதம் குருசாமி கடலூர் பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் தலைமையாசிரியை பொறுப்பு ஏற்றார்.

1938 ★ கடலூரில் குருசாமி தம்பதிகள் பாரதிதாசனின் முதல் கவிதைத் தொகுப்பை வெளியிட்டனர்.

1939 ★ மீண்டும் சென்னை லோகல் போர்டு இன்ஸ்பெக்டர் அலுவலகத்துக்கே மாற்றப்பட்டார்.

★ "தமிழர் தலைவர் பெரியார் ஈ. வெ. ரா." என்ற நூலை, தமது 'தமிழ் நூல் நிலையம்' வெளியீடாக வெளியிட்டு, ஈ.வெ. ராவுக்கு 'பெரியார்' என்ற சிறப்புப் பெயரை நிலை நாட்டினார்.

1940 ★ குஞ்சிதம் குருசாமி சென்னை நகரசபையின் துவக்கப் பள்ளித் தலைமையாசிரியையாகப் பொறுப்பு ஏற்றார்.

1941 ★ ஜன. 4 முதல் டிச. 15 வரை, சென்னை செகரடேரியட் தணிக்கை அலுவலராகப் பொறுப்பு ஏற்றுக் கொள்ளுதல்.

★ டிச 22 முதல் 1943 ஏப். 11 வரை, டில்லி, சிம்லா ஆகிய நகர்களில் இந்திய அரசின், வணிகத்துறை அமைச்சகத்தில் பதவி ஏற்றார்.

1943 ★ ஆக. 21 முதல் செப். 12 வரை, மீண்டும் சென்னை செகரடேரியட் தணிக்கை அலுவலகத்தில் பணி.

★ செப். 13 முதல் 1945 செப். 30 வரை, சென்னை அரசாங்கத் தேசிய யுத்த முன்னணியின் 'விடுதலை'யில் ஆசிரியர் பதவி ஏற்று நடத்தினார்.

1946 ★ ஜூன் 20-ல் அரசு பணியைத் துறந்துவிட்டு, திராவிடர் கழகத்தின் 'விடுதலை'ஆசிரியராகப் பொறுப்பு ஏற்றார்.

1948 ★ கவர்னர் ஜெனரலாக இருந்த ராஜகோபாலாச்சாரியார் சென்னை வந்தபோது கறுப்புக்கொடி காட்டியதற்காகத் தண்டிக்கப்பட்டார்.

1949 ★ திராவிடர் கழகப் பொதுச் செயலாளரானார்.

1950 ★ வடநாட்டுக் கடைகள் முன்பு மறியலில் தண்டனை பெற்றார்.

1953 ★ ஆச்சாரியாரின் குலக் கல்வித் திட்டத்தை எதிர்த்து சென்னை சட்டசபை முன்பு போராட்டம் நடத்தி சிறைவாசம் சென்றார்.

1954 ★ ராமன் பட எரிப்பு—கைது—சிறைவாசம்.

★ சிதம்பரத்தில் வெவ்வேறு தினத்தில் நடந்த இரு பொதுக்கூட்டத்தில் ராமன் பட எரிப்புச் சம்பவத்திற்காக இருமுறையும் கைதாகி, சிறைத் தண்டனை பெற்றார்.

1957 ★ உணவு விடுதிகளின் முன்பு உள்ள பார்ப்பனர் பெயர்ப் பலகை அழிப்புப் போராட்டம்—'அரசாங்க விருந்தாளி' யாகவும் கொஞ்சம் நாட்கள் இருந்தார்.

1957 ★ ஆக 1-ல் ஜாதி ஒழிப்புக் கிளர்ச்சி நிதிக்காக சென்னை கொத்தவால்சாவடியில் உண்டியல் குலுக்கியபோது கைதாகி, சிறைத்தண்டனை பெற்றார்.

★ நவ-26 ஜாதி ஒழிப்புப் போராட்டத்தில், அரசியல் சட்டத்தைக் கொளுத்தி 9 மாதங்கள் சிறைவாசம் அனுபவித்தார்.

1958 ★ தமிழக விடுதலைப்போரில் யூனியன் படத்தை எரிக்கும் போராட்டத்தில் கலந்துகொண்டு சிறைவாசம்.

1959 ★ தனக்குத்தானே மரணக் குறிப்பு எழுதிக்கொண்ட புதுமை (பிப்-5ல்)

1960 ★ நாகையில் இந்தி ஆசிரியர்களைக் கல்லால் அடிக்கத் தூண்டியதாகப் போலீசார் வழக்கு — தீர்ப்பு 5 வாரங்கள் சிறை—பன்னீர்ச்செல்வம் நாடகம் எழுதியதும் இங்கேதான்.

1961 ★ திருவையாற்றில், வெண்கலச் சிலைக்கு நிகழும் வாகன விழாவில் பார்ப்பனனையும் உடன் உட்காரவைத்துச் சுமப்பது மானஈனமேயாகும் என்பதை வற்புறுத்திப் பேசியதற்காக—9 வாரம் தண்டிக்கப்பட்டார்.

குஞ்சிதம் குருசாமி மாநகராட்சிப் பள்ளி சூப்பர்வைசர் பதவியிலிருந்து உயர்ந்து கல்வி அதிகாரியாக உயர்த்தப் பட்டார். (Lady Superindentent).

1961 ★ ஜூலை-30ல் குஞ்சிதம் குருசாமி காலமானார்.

1962 ★ ஜன. 2ல் 'விடுதலை' ஆசிரியர் பொறுப்பிலிருந்து விலகினார்.

★ அக்டோபரில் 'குத் தூசி'—மாத இதழ் துவக்கினார்.

1963 ★ மே-புதிய சுயமரியாதை இயக்கம் தோற்றுவித்தல், ஜூனில் மதுரை கோயில் குடமுழுக்குக்கு வருவதாக இருந்த ஜனாதிபதி இராதாகிருஷ்ணனை, ரிட்மனு தாக்கல் செய்தும், கடிதம் எழுதியும் வராமல் தடுத்தல்.

1964 ★ மே-'அறிவுப் பாதை'-வார இதழ் தொடங்குதல்.

1965 ★ ஜூலை-11-ல் கும்பகோணம் 6-வது, மாநில சுயமரியாதை மாநாடு நடத்தி, அகில இந்திய மட்டத்தில் ஒரு பரபரப்பு ஏற்படுத்தினார். அக்டோபர்-11ல் மாரடைப்பால் குத்தூசியார் மரணமடைந்தார்.

**இந்நூல் எழுதத் துணையாக இருந்தவை :**

1. 'குடியரசு' தொகுப்புகள்
2. 'Revolt' 'ரிவோல்ட்' ,,
3. 'புரட்சி' ,,
4. 'பகுத்தறிவு' ,,
5. 'விடுதலை' ,,
6. பெரியார் பிறந்த நாள் மலர்கள்
7. புதுவை நோயல் அவர்களின் 70-ம் ஆண்டு பிறந்தநாள் மலர்
8. பாரதிதாசன் கவிதைகள் முதல் தொகுப்பு
9. பாரதிதாசனின் இரண்யன்-நாடகம்
10. குஞ்சிதம் குருசாமி நினைவு மலர்
11. 'குத்தூசி' மாத இதழ் தொகுப்புகள்
12. 'அறிவுப் பாதை' ,,
13. 'குத்தூசி கட்டுரை'களின் தொகுப்புகள் I, II
14. குத்தூசி குருசாமி நினைவு மலர்
15. தமிழர் தலைவர் பெரியார் ஈ. வெ. ரா. வரலாறு— மூன்றும் பதிப்பு, 1958
16. நாகை காளியப்பன், புதுவை நோயல், குருவிக்கரம்பை வேலு முதலானோருக்கு குருசாமி எழுதிய கடிதங்கள்.



## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 9 | முதலியாரில் | முதலியாரின் |
| 11 | 25 | வெற்நி | வெற்றி |
| 28 | 13 | தயராக | தயாராக |
| 43 | 3 | Wiihout | Without |
| 43 | 15 | on | an |
| 62 | 12 | செல்லுகிறீர்களே | சொல்லுகிறீர்களே. |
| 64 | முதல்வரி நீக்கப்படவேண்டும். | | |
| 65 | 17 | தண்ணிரில் | தண்ணீரில் |
| 66 | 2 | கலப்பனால் | கலப்பினால் |
| 80 | 18 | அழைக்கப் பட்டாமல் | அழைக்கப் படாமல் |
| 84 | 12 | நொச்சிக்குப்பம் | நடுக்குப்பம் |
| 91 | 10 | வாய்மையின் | வாய்மையன் |
| 113 | 26 | கவரும் | சுவரும் |
| 120 | 19 | காந்தியரை | காந்தியாரை |
| 124 | 30 | கடவுன் | கடவுள் |
| 135 | 29 | சாய்த்தினால் | சாத்தினால் |
| 150 | 31 | பாரததாசன் | பாரதிதாசன் |
| 174 | 12—13 | திருவாரூர் கே. தங்கராசு எழுதி, எம். ஆர். ராதா நடித்த இரத்தக் கண்ணீர் நாடகம் இம் மாநாட்டில் அரங்கேற்றப் பட்டது. | எம்.ஆர். ராதா திருவாரூர் தங்கராசு நடித்த 'போர்வாள்' நாடகமும் மாநாட்டின் முதல் நாள் நடை பெற்றது. |
| 199 | 28 | பிறவிகளாதாலால் | பிறவிகளாதலால் |
| 205 | 26 | உங்களிடத்திம் | உங்களிடத்தில் |
| 212 | 16 | ட்ரராப்டும் | ட்ராப்டும் |
| 215 | 9 | செயாலாளரும் | செயலாளரும் |
| 221 | 13 | தொங்கிய | தொடங்கிய |
| 238 | 7 | ஓழிக்க | ஒழிக்க |